

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர்.

ओं

"ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி."

"உண்மைப் பொருள் ஒன்றே; அதை ஞாநிகள் பலவாகக் கூறுகின்றனர்."—ரிக்வேதம்.

ப்ரஹ்மாநந்தம் பரமஸுகதம்
கேவலம் ஜ்ஞாநமூர்த்திம்
விஶ்வாதீதம் ககநஸத்ருஶம்
தத்த்வமஸ்யாதி லக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமலமசலம்
ஸர்வதீ ஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணரஹிதம்
ஸத்குரும் தம் நமாமி.

---

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ விஜயம்.

---

பகவாந்

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின்

திவ்ய சரித்திரமும் கதாமிருதமும் அவர்

திருவாய்மலர்ந்தருளிய

# உபதேசரத்நமாலையும்

அடங்கப்பெற்றது.

---

இது

சென்னையிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ணாநந்த ஸ்வாமிகளின்

மாணாக்கராகிய

## மஹேச குமார சர்மா

என்பவரால் இயற்றி

ஸ்ரீ ராமகிருஷ்ணாநந்த ஸ்வாமிகளும்

ப்ரஹ்மஸ்ரீ பண்டித. ச. ம. நடேச சாஸ்த்ரி, B.A., M.F.L.S.

அவர்களும் எழுதிய

முகவுரைகளுடன்

---

சென்னை :

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1910.



விலை ரூபா 1-4-0.

TO

HIS HOLINESS

SWAMI BRAHMANANDA,

PRESIDENT,

Sri Ramakrishna Matha, Belur,

THIS VOLUME

IS MOST RESPECTFULLY DEDICATED

AS A TOKEN OF DEEP PIETY AND LOVE

BY HIS MOST OBEDIENT SERVANT

THE TRANSLATOR,

ஸ்ரீ

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின்

அக்ராஸநாதிபதியாய்

வங்காளத்திலுள்ள பேலூர் மடத்தில்

எழுந்தருளியிருக்கும்

பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய

**ப்ரஹ்மானந்த ஸ்வாமிகளது**

ஸ்ரீ பாதாரவிந்தங்களிலே

பக்திபூர்வகமாய்

ஸமர்ப்பிக்கப்பட்டது.

# INTRODUCTION.

SRI RAMAKRISHNAH SARANAM.

That the sayings of SRI RAMAKRISHNA are the most lucid and popular commentaries on the Vedas and the Upanishads, nay, upon all the Religious systems of the world, is what every thoughtful man who has gone through even some of them must have to admit. Their clearness and lucidity are best attested by their apprecia-tion even by an illiterate man and their popularity is best known by the fact that they have been already translated into English, German, French and almost all the verna-culars of India. If any one wants to know that essential and central point upon which all the Religions of the world are based, just as innumerable radii are based upon one common centre, he should only have to go once through them and he is sure to be convinced of the fact.

His is not a roundabont way of explanation. It is not couched in big, bombastic language of a pedant, it does not require a philosophical brain to catch its meaning, but the learned and the illiterate, the old and the young, the saint and the sinner, will find it equally interesting, lucid, convincing, ennobling and hope-inspiring even in the most despondent of hearts. Such a friend the world has seldom seen.

Srimad Bhagavad Gita is indeed another equally good comforter, but being now and then a little bit philoso-phical and very concise, it eludes the grasp of an ordinary reader and thus fails sometimes to comfort bim. But SRI RAMAKRISHNA, the Universal comforter excludes none. The most abject, the most dejected and down-

trodden have always a friend in Him,—a friend, whose ever-smiling face is sure to drive away the gloom, however deep it may be, from their hearts, even as the sun dispels darkness.

This being the fact, we cannot be too grateful to the person who, by rendering this God-man's sayings into another language and thus breaking the barrier for those who do not know the original tongue (Bengal) in which they first made their appearance, has rendered an invaluable service to that particulrr section of humanity, in whose language that rendering hasbeen made.

In this volume, the life of the great Saint is also given and so we have the double advantage of knowing his teaehings as well as the exemplary life illustrating those highly spiritual teachings.

Mahesha Kumara Sharma, therefore, has bound all Tomil-speaking people with an indissoluble tie of unselfish and highly beneficial service which no amount of gratefulness on their part can ever adequately repay, by rendering into Tamil the invaluable sayings of SRI RAMAKRISHNA. He has the peculiar advantage of possessing a partial knowledge of Bengali. He is a good English and Sanskrit scholar as well. So he is best qualified to make his translation as much perfect as possible. The Tamil-speaking people can best express their grateful ess to him, by each availing himself of a copy of this invaluable Book.

RAMAKRISHNANANDA.

---

# இங்கிலிஷ் அவதாரிகையின் மொழிபெயர்ப்பு.



ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவாய்மலர்ந்தருளிய உபதேச வாக்யங்கள் வேதங்களுக்கும் உபநிஷத்துக்களுக்கும் மாத்திரமேயல்லாது, உலகத்தின்கண் உள்ள ஸர்வமத ஸித்தாந்தங்களுக்கும் வ்யாக்யாந வடிவமாய் அமைந்து அவற்றின் கருத்தை மிகத் தெளிவாயும் அனைவரும் விரும்பத்தக்க வண்ணமாயும் விளக்கிக்காட்டுகின்றனவென்பது, அவ்வாக்யங்களுட் சிலவற்றையேனுங் கருத்துடன் படிக்கும் ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளவேண்டிய விஷயம். கல்வியறிவில்லாதவரும் அவ்வாக்யங்களை யறிந்து கொண்டாடுவதால் அவை மிகத் தெளிவானவையென்றும், இங்க்லிஷ், ஜர்மன், ப்ரெஞ்ச் பாஷைகளிலும், இந்தியாவிலுள்ள ஏறக்குறைய எல்லா சுதேச பாஷைகளிலும் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால், அவை அனைவராலும் விரும்பப்பெற்றவை யென்றும் ஏற்படுகின்றன. உலகத்தின் கண் உள்ள ஸகல மதங்களுக்கும் பொதுவான முக்கியாம்ஶம் இன்னதென்று அறியவேண்டுமாயின், இவ்வாக்யங்களை யொருமுறைப் படித்தாற் போதும். பரமஹம்ஸருடைய உபதேசமுறை மிகச் சிறப்புற்றது: எதையும் சுற்றிச் சுழற்றிக்கூறும் வழக்கமே அவருக்குக்கிடையாது. அவர் வாச்யங்கள் கல்விப்பெருமை பாராட்டும் புலவர்களின் ஆடம்பரமான சொல்நடையில் அமைந்தவையல்ல. அவற்றின் கருத்தை யறிந்துகொள்வதற்குத் தத்வஶாஸ்த்ரங்களில் தேர்ந்த கூரிய புத்தி வேண்டியதில்லை. ஆனால் அவை கற்றோருக்கும் கல்லாதவருக்கும், வ்ருத்தருக்கும் வாலிபருக்கும், நல்லார்க்கும் பொல்லார்க்கும் ஒருங்கே மனோஹரமாயும், தெளிவாயும், உண்மை யுறுத்துவதாயும், உத்தமமாயும் அமைந்து, உய்யும் வழியறியாது எக்கமுற்றோர் நெஞ்சங்களுக்கு ஆறுதலளிக்கும் சிறப்பு வாய்ந்திருக்கின்றன. அத்தகைய ஆப்தநேசனை இவ்வுலகத்திற் காண்பது வெகு அரிது. ஸ்ரீமத் பகவத்கீதையை அவ்வகை ஆறுதலளிக்கும் உபதேசமெனச் சொல்லலாம். ஆனால் அதுவும் சிற்சில விடங்களில் நுண்ணிய தத்வநூற்போக்குடையதாயும் மிகச் சுருக்கமாயும் இருத்தல்

பற்றி ஸாதாரண புத்தியுள்ளவர்களுக்கு எளிதில் விளங்கா மையால், சில சமயங்களில் அவர்களுக்கு ஆறுதல் அளிக்கத் தவறிப்போகின்றது. ஆனால் அனைவருக்கும் ஆறுதல் அளிக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணரோ தம்மிடம்வரும் எவரையும் திருப்பி யனுப்புவதில்லை. பதிதபாவநரும் தீநபந்துவமான அவரது புன்னகை யுலாவிய முகமண்டலத்தைக் கண்டவுடன், எத்தகைய ஏக்கமும் சூரியனைக் கண்ட இருள்போல் பறந்தோடி விடும்.

ஆகவே இந்தப் புண்ய புருஷனுடைய திவ்ய வாக்யங்கள் முதலில் வெளிவந்த மூலபாஷையாகிய வங்கமொழி தெரியாதவர்களுக்குப் பயன்படும்பொருட்டு அவர்களுக்குத் தெரிந்த பாஷையில் அவ்வாக்யங்களை மொழிபெயர்த் துதவுவோருக்கு நாம் எவ்வளவு நன்றி செலுத்தினாலும் அதிகமாகாது.

இந்தப் புஸ்தகத்திலே பரமஹம்ஸரது சரித்திரமும் சேர்க்கப்பட்டிருப்பதால், அந்த மஹானின் உபதேசங்களை மாத்திரமல்லாமல் உயர்வான ஆத்மதத்துவங்களை உணர்த்தும் அந்த உபதேசங்களை விளக்குவதான அவருடைய சரித்திரத்தையும் அறிந்துகொள்வதாகிய இருவகைப் பிரயோஜனமும் நமக்குண்டாகிறது.

ஆதலால் ஸ்ரீ ராமகிருஷ்ணரது அருமையான வாக்யங்களைத் தமிழில் மொழிபெயர்த்து இத்தகைய தன்னயமற்ற மஹோபகாரமான கைங்கர்யத்தால் தமிழ் நாட்டினர் அனைவரையும் அவிழ்க்க முடியாத அன்பெனும் பாசத்தாற் கட்டிய மஹேச குமார சர்மாவுக்கு அன்னோர் எவ்வளவு நன்றி பாராட்டினும் தகுந்த கைம்மாறாகாது. இவருக்கு இங்க்லிஷிலும் வடமொழியிலும் நல்ல பயிற்சி யிருப்பதுடன் பங்காளிபாஷையிலுஞ் சொற்ப ஞானமிருப்பதால், இவரே இம் மொழிபெயர்ப்பைக் கூடியவரையில் பக்குவமாய்ச் செய்வதற்குத் தக்க திறமைபொருந்தியவர். தமிழ் நாட்டினர் ஒவ்வொருவரும் இவ்வருமையான புஸ்தகத்தை வாங்கிப் பயனடைவதே அவர்கள் இதனை இயற்றியவருக்குக் காட்டும் சிறந்த நன்றியறிதலாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணாநந்தঃ

# முகவுரை.

நமது தேசமாகிய பாரதவர்ஷம் ஸந்யாஸிகளும் மஹாத்மாக்களும் நிரம்பி நிற்கும் புண்யபூமி. ஹிமாலயம் முதல் கந்யாகுமாரி வரையில் ஞானக்கண்ணால் பார்த்தால், ஆங்காங்கு ஸந்யாஸிகளும் பெரியவர்களு மிருப்பார்கள். இப்பால் கலி முற்ற முற்ற நமக்குள் பக்தி குறைவுபடுகின்றதென்பது சிலருடைய கொள்கை. அது முற்றிலும் உண்மையன்று. பலவிதமாய் நமது புத்திகள் மாற எவ்வளவோ காரணங்கள் புதியனவாக உண்டானபோதிலும், நிலையில் நிற்கின்றவன் புத்தி மாறாது. நம்மை நமது மஹாத்மாக்கள் அவ்வளவு ஹீநமான நிலைமையில் விட்டுவிடமாட்டார்கள். நம்மை எப்போதும் நமது தாய் தந்தைகள்போல் நமக்குத் தெரியாமலே நமது மஹாத்மாக்கள் காப்பாற்றி வருகின்றார்கள் என்பது ஸத்புருஷர்களுடைய கொள்கை. சுமார் 200-வருஷங்களுக்கு முன் நெரூரில்—கரூக்கு ஸமீபம்—வஸித்த ஸதாசிவப்ராஹமம் ஒரு பெரிய மஹாத்மா. அவருடைய ஆத்மபோதம் நல்ல உபதேசத்தைப் பண்ணுகின்றது. இப்பால் 20-வருஷங்களுக்கு முன் ஸித்தி அடைந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்பவர் மற்றொரு மஹாத்மா. இவ்விருவரை மாத்திரம் இங்கு எடுத்துச் சொன்னதற்குக் காரணம் இவ்விருவருடைய வாக்யங்களும் நமக்கு இப்பொழுது அச்சில் கிட்டி எல்லாருடைய உள்ளங்களையும் குளிரச்செய்து வருகின்றன. எத்தனையோ பெரியவர்கள் எங்குமிருக்கின்றார்கள். ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தேனொழுகும் தமது வாக்கால் நமது கடமையை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நமக்குக் காட்டியதுபோல் ஒருவரும் காட்டவில்லை. அவர் சரித்திரத்தைப்பற்றி இந்த நூலில் விரிவாய்க் கூறப்பட்டிருப்பதைச் சுருக்கிச் சொற்பமாய் இங்கு எழுதுவோம்.

இவர் 1833-ம் வருஷம் பிறந்தவர். இவர் பிறந்த ஊர் காமர்புகர். இவர் பங்காளி ப்ராஹ்மணர்; நல்ல வைதிக குலத்திற் பிறந்தவர் என்றாலும் ஸம்ஸ்க்ருதத்தில் அவ்வளவு தேர்ந்தவர் அல்லர் என்பார்கள். ஆனால் வெகு புத்திமான்; ஏகஸந்தக்ராஹி; ஒரு தடவை இவருக்கு ஏதாவது ஒரு விஷயம் சொல்லிக் கொடுத்தால் உடனே அதை அப்படியே திரும்ப ஒப்பிப்பாராம். எப்போதும் ஸாதுக்களுடன் பழகிச் சிறுவயதி

லேயே ஹிந்துமதத்தின் ரஹஸ்யங்களைக் கற்றறிந்தவர். இவருக்கு 16-வயதானதும் இவர் தகப்பனார் இவருக்கு உபநயனம் செய்வித்து இவரைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினாராம். அவ்விடத்திய படிப்பு இவர்பக்திக்குப் பிடிக்கவில்லை. சொற்ப காலத்தில் இவர் அப்பள்ளிக்கூடத்தை விட்டுக் கல்கத்தாவுக்கு ஸமீபத்திலிருக்கும் தக்ஷிணேசுவரம் என்ற ஸ்தலத்தில் ஒரு பெரிய காளிகோவிலுக்கு அர்ச்சகராக அமர்ந்தார். அவ்விடம் அவர் வெகு பக்தியுடன் செய்துவந்த ஆராதனை எல்லாரையும் அவரிடம் ஆகர்ஷிக்கலாயிற்று. அடிக்கடி பஜனை செய்துகொண்டே ஆடுவார், பாடுவார், கூத்தாடுவார். இவரது பந்துக்களில் சிலர் இவருக்குப் பைத்யம் என்று கருதினார்கள். ஆனால் ஒரு பெரிய வைத்தியர் இவரைக்கண்ட மாத்திரத்தில், இவர் பெரிய யோகி, இவர் பைத்தியத்தை மாற்ற மருந்தில்லை என்றார். இவருக்கு ஞானம் அதிகரிக்கவே, அக்கோவில் வேலையை இவர் விட்டுப் பன்னிரண்டு வருஷம் யோகாப்யாஸம் செய்து வந்தார். ஒரு ஸமயத்தில் இவர் யோகாப்யாஸத்தி லிருந்தபொழுது, 1500 ரூபா மதிப்புள்ள ஒரு சால்வையை இவருடைய சிஷ்யர் ஒருவர் இவர்மேல் சாத்த, அதை இவர் எடுத்து, "ஆஹா இத்தால் எனக்குப் ப்ரஹ்மஞ் ஞானம் உதயமாயிற்றா? இதற்கும் கந்தைக்கும் வித்யாஸமென்ன?" என்று வீசி எறிந்தார். இவர் பெரிய யோகி. இவரைப் பார்க்க தோதாபுரி என்றொரு ஸந்யாஸி வந்தார். அவர் தன் முன்பாக எப்பொழுதும் தீ வளர்த்துக்கொண் டிருப்பது வழக்கம். அத்தீயில் ஒருவன் தன் ஹுக்காவைக் கொளுத்த, தோதாபுரி பார்த்து வெகு கோபங்கொண்டார். அப்பொழுது ராமகிருஷ்ணர், "ஹுக்காவைக் கொளுத்தினவனும் ஒரு ப்ரஹ்மந்தானே. அவனுக்கும் அக்நிக்கும் என்ன வித்யாஸம்? ஏன் அவன்மேல் கோபிக்கின்றீர்" என்றார். "இன்றுமுதல்" தோதாபுரி "என் கோபத்தை விட்டேன்" என்றார். ராமகிருஷ்ணரைப்பற்றி எத்தனையோ கதைக ளிருக்கின்றன. அவைகளைச் சொல்லுவதானால் ஒரு புஸ்தகமே எழுதவேண்டும். இவருடைய புகழ் அதிகரிக்க அதிகரிக்க, எத்தனையோ பேர்கள் இவரைப் பார்க்க வந்தார்கள். எல்லாரிடமும் ஒரே விதமாய் நடந்துகொண்டு இவர் எல்லாருக்கும் நற்போதனை செய்வார். இவர் வெகு சிறப்பான ஆத்மபோதம் பெற்றவர். இவர் அடிக்கடி செய்த போதனைகள் ஒருங்கு சேர்க்கப்பட்டு

முதலில் பங்காளி பாஷையில் வெளியாய் இப்பொழுது பல பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. இவர் ஸித்தியடைந்த காலம் 1886-ஆம் ஆகஸ்ட் மீ 16-ந்தேதி.

இவர் வாக்யங்கள் எல்லா மதத்தோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய அழகான வாக்கில் ஈஸ்வரன், பக்தி, அவதாரதத்வம், முத்திநெறி முதலிய விஷயங்களின் வாயிலாக அனைவருக்கும் எளிதில் விளங்கத்தக்க உபமாநங்களாலும் திருஷ்டாந்த கதைகளாலும் தத்துவங்களை வெளியாக்குகின்றபடியால் எல்லாராலும் அங்கீகரிக்கப்படும். மாக்ஸ் முல்லர்முதலான ஐரோப்பிய வித்வாங்கள் கொண்டாடப் பெற்றவர் என்றால் இவர் பெருமைக்குச் சொல்லவும் வேண்டுமோ? ஆனால் மஹாத்மாக்களுக்கு இவ்விதப்பெருமை ஒருபொருட்டா!

1904-ம் ௵. ச. ம. நடேச சாஸ்த்ரி.

# விஷயஸூசிகை.

விஷயம். பக்கம்.



## முதல் பாகம்.



## இரண்டாம் பாகம்.

### முதற்பிரிவு.

ஈசன்.

## இரண்டாம் பிரிவு.

### அவதார புருஷர்கள், ரிஷிகள், ஆசார்யர்கள்.

## மூன்றும் பிரிவு.

### முத்தி நெறி.

## நான்காம்பிரிவு.

### உபாக்யாநங்கள்.

விஷயஸூசிகை முற்றிற்று.

ஸ்ரீ

# ஸ்ரீ ராமக்ருஷ்ணாஷ்டகம்

## ஸ்தோத்ரம்.

1. விஸ்வஸ்ய யாதா புருஷஸ் த்வமாத்யோऽ
வ்யக்தேந ரூபேண ததம் த்வயேதம்
ஹே ராமக்ருஷ்ண த்வயி பக்திஹீநே
க்ருபா கடாக்ஷங் குரு தேவ நித்யம்.

2. த்வம் பாஸி விஸ்வம் ஸ்ருஜஸி த்வமேவ
த்வமாஸி தேவோ விநிஹம்ஸி ஸர்வம் ||ஹேராம||

3. மாயாம் ஸமாஸ்ரித்ய கரோஷி லீலாம்
பக்தாந் ஸமுத்தர்த்து மநந்தமூர்த்தே ||ஹேராம||

4. வியுத்ய ரூபம் நரவத் த்வயா வை
விஜ்ஞாபிதோ தர்ம இஹாதி ஸூக்ஷ்ம: ||ஹேராம||

5. தபோதய ஸங்ந்யாஸ மத்ருஷ்ட பூர்வம்
த்ருஷ்ட்வா நமஸ்யந்தி கதம் ந விஜ்ஞா: ||ஹேராம||

6. த்வந்நாம ஸ்ருத்வாத்ர பவந்தி பக்தா
வயந்து த்ருஷ்ட்வாபி ந பக்தி யுக்தா: ||ஹேராம||

7. ஸத்யம் விஸுத்தம் ஸாந்தமநாதி ரூபம்
ப்ராஸாதயே த்வாம் அஜ மந்தபாக்யம் ||ஹேராம||

8. ஜாநாமி தத்த்வம் நது தேபரிமேஸ்வரம்
கிம் வா ஸ்வரூபம் கதமேவ பாவம்
ஹே ராமக்ருஷ்ண த்வயி பக்திஹீநே
க்ருபா கடாக்ஷம் குரு தேவ நித்யம்.

இதி ஸ்ரீமத் அபேதாநந்த ஸ்வாமி விரசிதம்
ஸ்ரீராமக்ருஷ்ணாஷ்டகம் ஸம்பூர்ணம்.

# ஸ்ரீ ராமக்ருஷ்ணாவதார ஸ்தோத்ரம்.

---

ஹ்ருதயகமலமத்யே ராஜிதம் நிர்விகல்பம்
ஸதஸதகிலபேதாதீதமேகஸ்வரூபம்
ப்ரக்ருதிவிக்ருதிஶூந்யம் நித்யமாநந்தமூர்த்திம்
விமல பரமஹம்ஸம் ராமக்ருஷ்ணம் பஜாம: ||

நிருபம மதிஸூக்ஷ்மம் நிஷ்ப்ரபஞ்சம் நிரீஹம்
ககநஸத்ருஶமீஶம் ஸர்வபூதாதிவாஸம்
த்ரிகுணரஹிதஸச்சித்ப்ரஹ்மரூபம் வரேண்யம் || விம

ப்ரளய ஜலதிமக்நம் வேதராஶிம் ஜிஹீர்ஷந்
தநுஜமதிவிஶாலம் ஹம்ஸி ஶங்க்யம் விசித்ரம்
கமபரிசிதவீர்யம் மீநரூபம் ததாநம் || விமல ||

அதுலவிபுலதேஹே சிந்மயே கூர்மரூபே
வஹஸி ஸகலமேதத் விஶ்வமாதாரபக்த்யா
தவ பஹுமஹிமாநம் கோऽல்பதீர் வர்ணயேத் த்வாம் ||

தஶநவித்ருத பூமிம் ஶூகரம் ஶ்வேதகாயம்
தலிததிதிஜராஜம் தம்ஷ்ட்ரிணம் சக்ரபாணிம்
அமிதவிபவஶக்திம் பாலகம் தேவதாநாம் || விமல ||

விகடதஶநவக்த்ரம் லோலஜிஹ்வம் ப்ரசண்டம்
கிரிவரஸமகாயம் ரக்தஹஸ்தம் ந்ருஸிம்ஹம்
ப்ரஶமிதஸுரவேதம் கோடிஸூர்யப்ரகாஶம் || விமல ||

கலிமலஹர நாம கீர்த்தநம் கோஷயந்தம்
கரயுத ஜலபாத்ரம் தண்டிகம் ஹேமவர்ணம்
ஸகலஜலதிபோதம் க்ருஷ்ணசைதந்யரூபம் ||விமல||
விதரிதுமவதீர்ணம் ஜ்ஞாந-பக்தி-ப்ரஸாதம்
பரமமலித சித்தம் ஜீவஸந்தோஷஹேதும்
ப்ருதுகலஹரஜலபாயிம் சிந்மயம் கோமலாங்கம் ||விமல||
ஹரிஹரவிதிதேவா மூர்த்திபேதாஸ் தவைதே
நிருபமவேதமூர்த்தீர் மாயயா கல்பயந்தம்
அமிதமஹிம விசித்ரம் தீநவந்த்யம் தயாளும் ||விமல||
ஜய ஜய கருணாப்தே மோக்ஷஸேதோ ஸ்புராமே
ஜய ஜய ஜகதீச ஜ்ஞாநலிங்கோ ஸ்வயம்போ
ஜய ஜய பரமாத்மம்ஸ் த்ராஹி மாம் பக்திஹீநம்
ஜய ஜய ஸதநாதிந் ராமக்ருஷ்ண த்விஜேந்த்ர.

மூடோஉஹம் நாபிஜாநாமி
த்வாம் ஸ்தோதும் ஜகதாங் குரோ
ததாபி த்வத்க்ருபாலேஶாத்
வாசாலோஉஸ்மி புந:புந:.

இதி ஸ்ரீமத் அபேதாநந்த ஸ்வாமிவிரசிதம்
ஸ்ரீ ராமக்ருஷ்ணாவதார ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ விஜயம்.

## முதற்பாகம்.

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சரித்திரச்சுருக்கம்.





புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தின் வடகிழக்கிலுள்ள வங்காள தேசத்திலே ஹூக்லி ஜில்லாவைச் சேர்ந்த காமார் புதூர் (கர்மகார புஷ்கரம்) எனுங் கிராமத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணதேவர் கலியுகாப்தம் 4935ம் வருஷத்துக்குச் சரியான நந்தன ௵ மாசி ௴ 11௳ (1833-௵ பெப்ரவரி ௴ 20௳) சுக்கில பக்ஷ த்விதியை திதி புதவாரத்தன்று அவதரித்தருளினார். வங்காள பாஷையில் 'காமார்' என்பதற்கு கருமான் என்று பொருள். இது 'கர்மகார' என்ற வடமொழியின் திரிபு. இக்கிராமத்தில் சில தச்சர்களும் இடையர்களும், கைவர்த்தர்களென்னும் குடியானவர்களும், வாணியரும், விசேஷமாய்ச் சிற்பிகளும் கருமான்களுமே குடியிருப்பதால் இவ்வூருக்கிப்பெயர் உண்டாயிற்று. இந்தக் குக்கிராமத்தில் ஒரே யொரு பிராமணரகம் தவிர மற்றவை யெல்லாம் தாழ்ந்த ஜாதியார் விடுகளேயாம். இராமகிருஷ்ணர் ஓர் உயர்ந்த வங்கநாட்டு

விப்பிரகுலத்தைச் சேர்ந்தவர். இவரது பிதாவாகிய க்ஷுதிராம் சட்டோபாத்தியாயர் இவ்வூரில் வாசஞ் செய்துகொண்டு பக்தி பூர்வகமாய் ஈசுவராராதனம் புரிந்து வந்தமையால், மகா தர்ம நிஷ்டரென்றும் உண்மையான பக்தரென்றும் பிரசித்தி பெற்றிருந்தார். அவர் தமது இஷ்ட தெய்வமாகிய ஸ்ரீ சக்கிரவர்த்தித் திருமகனைப் பூஜை அருச்சனை முதலியவைகளால் மகிழ்வித்துவர, அதனால் மனமுவந்த ஸ்ரீராமன் அவருக்குப் பிரத்தியக்ஷமாகி அவரது வழிபாடுகளைத் திருவுளம் பற்றுவதாக ஜனங்கள் சொல்லிக்கொள்வதுண்டு. அவர் மகா தரித்திரராயிருந்தும், பட்டினியாவது கிடப்பாரேயன்றி, பிராமணரது வைதிக ஆசாரத்துக்கு விரோதமான எவ்விதத் தொழிலையும் புரியார். அவர் கயா க்ஷேத்திரத்திற்கு யாத்திரையாகச் சென்றிருந்த பொழுது, அங்கு கதாதர மூர்த்தமாய்த் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமகாவிஷ்ணு அவருக்கு ஸ்வப்நத்திற் றோன்றி 'நான் உனக்குக் குமாரனாய் அவதரிக்கப்போகின்றேன்' என்றருளிச்செய்து மறைந்தார். அதன்படியே அவரது பத்நியாகிய சந்திரமணி தேவி தக்க காலத்திற் கர்ப்பவதியாகிப் பெற்ற திவ்ய லக்ஷணம் பொருந்திய புருஷப் பிரஜைக்குக் கதாதரனென்று திருநாமஞ் சூட்டினார்கள். இக்கதாதரனென்ற குழந்தைதான் பின்னர் ராமகிருஷ்ண பரமஹம்ஸரெனப் பிரஸித்தி வாய்ந்தது. க்ஷுதிராம்சட்டோபாத்தியாயர் மஹாபரிசுத்த அந்தரங்கமும் பரமபக்தியும் சுந்தரவடிவமும் சுதந்திரப் பிரவிர்த்தியும் உள்ளவராகி அவ்வூராரது கௌரவத்திற்குப் பாத்திரராய் வறுமை

யிற் காலங்கழித்துவந்தார். இம்மகாநுபாவருக்கு வாக்கு ஸித்தி முதலிய திவ்விய சக்திகள் உண்டென்றும் இவர் பேசிய பேச்சு தப்பாமற் பலித்து வந்ததென்றும் பலர் சொல்லுகின்றனர். இவரிடத்தில் அவ்வூராருக்குத் தேவதா விசுவாஸம். இவர் வருவதைக்கண்டால் அவர்கள் உடனே யெழுந்து வணங்குவார்கள். இவரது ஸந்நிதானத்தில் அற்பமான பேச்சுகள் எவையும் பேசத் துணியார்கள்.

இவரது பத்தினியாகிய சந்திரமணிதேவி கள்ளங் கவடற்று ஈரநெஞ்சமும் இளகிய மனதும் பொருந்தி உத்தமிகள் நாயகமாய் விளங்கிய ஒரு மஹாபதிவிரதை. இப்பதிவிரதா சிரோமணியின் உத்தமகுணம் பின் வரும் பிரஸித்தமான விர்த்தாந்தத்தால் வெளியாகின்றது. இந்த அம்மையின் குமாரராகிய இராமகிருஷ்ணரிடத்தில் அதிக பக்தி விசுவாஸத்துடன் அவரைத் தெய்வ ஸமானமாகக் கருதிப் பூஜித்துவந்த பிரதான சிஷ்யனாகிய மதுராநாதன் என்ற தனவான் அவ்வம்மையினிடம் வந்து சில ஆயிரம் ரூபாயைப் பஹுமானமாய் ஸமர்ப்பித்து அதனைத் திருவுளம் பற்றும்படி வேண்ட, தனக் கதுவேண்டவே வேண்டாமென்று மறுத்துவிட்ட அவ்வம்மையின் உறுதியைக் கண்டு ஆச்சரியமடைந்தான்.

சட்டோபாத்தியாயர் ஆதியில் டேரி கிராமத்தில் பிதுரார்ஜ்ஜித சொத்தை வைத்துக்கொண்டு ஜீவித்து வருகையிலேயே அவரது சுதந்திரப் பிரவிர்த்தி வெளியாயிற்று. எவ்வாறெனில், அவ்வூர் ஜமீன்தாரன் தனக்

கநுகூலமாக ஒரு வியாஜ்யத்தில் அவர் சாக்ஷ்யம் சொல்லவேண்டுமென்றும், அதற்கவர் ஒப்பாவிட்டால் அவரது சொத்துக்களை ஜப்திசெய்து அவரை ஊரைவிட்டுத் துரத்திவிடுவதாயும் பயமுறுத்தினன். அவர் அதற்கு ஸம்மதியாது அவ்வூரைவிட்டொழித்து அதற்குக் கிழக்கே இரண்டு மூன்றுமைலிலுள்ள கர்மகார புஷ்கரமென்னும் மேற்சொல்லிய கிராமம் வந்துசேர்ந்தார். அங்கே அவர் சில தர்மப்பிரபுக்களால் ஆதரிக்கப்பெற்று, அன்னோர்களது ஔதாரியத்தால் உபாய ஜீவனம் செய்துகொண்டிருந்தபோதிலும், எப்பொழுதும் அதிதிகளுக்கும் ஏழைகளுக்கும் அந்நமளித்து ஸதா ஸாதுக்களுடைய ஸங்கத்திலேயே காலத்தைக் கழித்து ஸகல விதங்களாலும் பகவானை யாராதித்துஅவனது முகோல்லாஸத்தை யடையப் பெரிதும் முயன்றுவந்தார்.

இராமகிருஷ்ணரது பிதாவின் தெய்வபக்தியைப் பற்றிப் பின் வரும் சங்கதி கூறப்படுகின்றது. அவர் ஒருநாள் 13, 14, மைல் தூரத்திலுள்ள தம் மகளைப் பார்த்துவிட்டுவரப் புறப்பட்டுப் போனவர் பாதிதூரத்துக்குமேல் நடந்தான பிறகு வழியில் அழகிய பசிய தளங்கள் பொலிந்த வில்வமரம் ஒன்றைக் கண்டார். அப்பொழுது வஸந்தகாலம். வில்வமரங்களின் இலைகள் உதிர்ந்து அப்பொழுது தான் புதிதாய் தளிர்த்துக்கொண்டிருந்தமையால் சிலநாளாக அவருக்கு சிவபூஜைக்கு வேண்டிய நல்ல வில்வங்கள் கிடைக்கவேயில்லை. இப்பொழுது இப்பசிய தளங்களைக் காணவே அவர் அபரிமிதமான ஆனந்தமடைந்து உடனே அம்மரத்தின்மே

லேறித் தம்மால் சுமந்துகொண்டு போகக்கூடிய தளங்களைக் கொய்துகொண்டு, அவற்றைச் சிவபெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேண்டுமென்ற குதூஹலத்துடன், பெண்ணைப் பார்க்கப் போகாமலே, தம் வீட்டுக்கு வெகு வேகமாய்த் திரும்பினார். பரமசாந்தமூர்த்தியாகிய ஸ்ரீராமசந்திரன் அவரது குலதெய்வமானபடியால், அவர் ஸ்ரீராமனிடத்தில் அதிக பக்தி விசுவாஸம் வைத்திருந்தார். அவ்வூருக்கு வெளியே அவருக்கு சொற்ப நிலமிருந்தது. விதை விதைக்குங் காலத்தில் அவர் அவ்வயலை உழுவித்துத் தாமே நேரிற்சென்று இரகுவீரன் பெயரைச் சொல்லி சில விதைகளை முதலில் தாமே விதைத்து அவ்வேலையை முடிக்கும்படி பிறகு வேலைக்காரருக்குக் கட்டளையிடுவார். அப்பூமி சொற்மாயிருந்தும் அம்மகாநுபாவரது பக்தி விசுவாஸங்களின் பெருமையால் அவரிருந்த வரையில் அவரது குடும்பத்துக்கு வேண்டிய பலனளித்து வந்தது. அவர் இரகுவீரனாகிய ஸ்ரீராமனையே ஸதா நம்பி அவன்மேலேயே ஸமஸ்த பாரத்தையும் போட்டுவிட்டுக் கவலையற்றிருந்தார். அவரது பக்தியும் அகத்தூய்மையும் இம்மட்டென வர்ணிக்க முடியாது. அவர் அவ்வூரார் யாவராலும் விசேஷ கௌரவமாய்க் கொண்டாடப் பெற்று வந்தார். அவரது திருக்குமாரராகிய ஸ்ரீராமகிருஷ்ணரை இளமைமுதல் பார்த்தவர் யாவரும் தங்கள் சொந்த பந்துவைப்போல் மிகுந்த கௌரவத்துடன் ஆதரித்து வந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இளமையிலேயே அதிக பகவத் பக்தியுள்ளவராகி பஜனை மந்திரங்கட்குச் சென்று பக

வத் ஸங்கீர்த்தநங்களைப்பாடி பஜித்து வந்தார். அவர் பாடும்பொழுது கேட்டோர் அவரது குரலின் இனிமைக்கு ஆநந்தமுற்று அவரது பகவத் பக்தியைக் கொண்டாடுவார்கள். சிறுபிராயம் முதல் அவர் மண் பதுமைகளைச் செய்து அவற்றை யாராதித்துத் தமது சிறு தேவதைகளுக்கு உற்சவங்கள் கொண்டாடி விளையாடுவர். பிரதிமைகள் அமைப்பதில் அவர் மகா ஸமர்த்தர். அவர் பதுமைகளின் அமைப்பிலுள்ள குணதோஷங்களை வெகு சமத்காரமாய் எடுத்துக்காட்டிவந்தமையால் அதன் விஷயமாய் அவர் கூறும் அபிப்பிராயத்தை அவரது கிராமத்தார்கள் ஸித்தாந்தமாகக் கருதினர். அவர் மண்விக்கிரஹங்களைச் செய்து விளையாடுவதுமாத்திரமன்றி சிதிலமாய்ப்போன சிலா விக்கிரஹங்களைக் கூட செப்பனிடத் தொடங்கினர். கல்கத்தா நகரத்துக்கு நான்குமைல் தூரத்திலுள்ள இராணி ராஸமணி தேவியின் தக்ஷிணேசுவராலயத்தில் அதுகாறும் வெகு காலமாய்ச் சிதிலமாயிருந்து பின்னர் இராமகிருஷ்ணரால் செப்பனிடப்பட்ட ஸ்ரீகிருஷ்ண விக்கிரஹம் இப்பொழுதும் அங்கே காணப்படுகின்றது. அவர் ஒருகால் ஸ்ரீகிருஷ்ணலீலா நாடகத்தைப் பார்த்துவிட்டுவந்து, தம் தோழர்களுடன் வயல்களில் மரங்களின் கீழே மேற்சொல்லிய நாடகத்தை யப்படியே நடித்தும் ஒருகால் சிவலிங்க மமைத்துத் தம் நண்பர்களுடன் சிவபிரானைப் பூஜித்தும் ஆநந்தித்துக்கொண்டிருந்தார். ஆட்டம் பாட்டுகளிற்கூட அவர் ஈசுவரத் தியானத்தையே செய்துகொண்டு தம் வாலிபப்பருவத்தைக் கழித்தார். அன்றியும் அவர் ஆறும் வயதிலேயே ஸ்ரீமத் ராமா

யண பாரதபாகவதாதி உயர்ந்த மதக்கிரந்தங்களைப் பௌராணிகர்கள் வாயிலாக சிரவணஞ்செய்து அவற்றின் ஸாரத்தைக் கிரஹித்தார்.

அவரது கிராமம் ஜகந்நாத க்ஷேத்திரத்திற்குப் போகும் மார்க்கத்தில் இருப்பதால் அக்கிராமத்திய ஜமீன்தாரராகிய லாஹா குடும்பத்தார் கட்டிய தர்மசாலையில் இறங்கும் யாத்திரிகர்கள்பால் அவர் சென்று அவர்களுள் பெரியோர்களா யிருப்பவருடன் சம்பாஷித்துக் கொண்டு அவர்கள் செய்த யாத்திரை விர்த்தாந்தங்களையும் அவ்வத்தேசங்களின மூர்த்தி ஸ்தல தீர்த்தமான்மியங்களையும் கேட்டறிந்து களிப்பார்.

ஒருநாள் 'லாஹா' குடும்பத்தார் வீட்டில் நடந்த சிராத்தத்துக்கு வந்திருந்த பண்டிதர்கள் வேதாந்தவிஷயத்தைக் குறித்து விசாரணை செய்துகொண்டிருப்பதைக்கேட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் அவர்களிடம் சென்று அவர்கள் வினாக்களுக்கெல்லாம் யுக்தியுக்தமான விடைகள் அளித்து அவர்களது ஸித்தாந்தங்களைக் கண்டித்தார். அப்பண்டிதர்கள் இவரது புத்தி கூர்மையைக் கண்டு அதியாச்சரியமுற்று இவர் ஒரு மகாபுருஷரெனக் கொண்டாடினர். அவர் பாலியத்தில் ஒருநாள் ஊருக்கு வெளியே திரிந்துகொண்டிருக்கையில் நிர்மல நீலவர்ணமான ஆகாயத்திற் பறக்கும் வெண்புறக்கூட்டமொன்றினைக் கண்ணுற்று ஈசுவரனது சிருஷ்டியின் மகிமையை வியந்து மெய்மறந்து தற்போத மிழந்து நின்றார். ஈசுவரத்தியானம் செய்கையில் வெளிப்புலன்களின் றொழிலடங்கி இராமகிருஷ்ணர் தந்மயத்துவம் அடைவதற்கு இதுவே யாரம்பம்.

இராமகிருஷ்ணருக்கு இருவர் தமையன்மாரும் இருவர் தமக்கைகளும் இருந்தனர். அவரது 'மூத்தண்ணு'வாகிய ராமகுமார சட்டோபாத்தியாயர் சிறந்த ஸம்ஸ்கிருத பண்டிதரானதால் கல்கத்தா நகரில் ஒரு பாடசாலை ஏற்படுத்தி ஜீவித்துவந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பதினாறும் வயதில் உபநயநம் நடத்தி வித்தியாப்பியாஸத்தின் பொருட்டு அவரை யவர் தமையன் கல்கத்தா நகருக்கழைத்துச் சென்றார். அப்பாடசாலையில் அனைவரும் ஸத்தைப்பற்றியும் அஸத்தைப்பற்றியும் பிரஹ்மத்தைப்பற்றியும் மாயையைப்பற்றியும் தெரிந்தவர்கள்போல் இரைந்து பேசி ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தத்தைப்பற்றியும் ஆத்மாநுபவத்தால் ஜீவாத்மா முக்திபெறும் நெறியைப்பற்றியும் வாசா கைங்கரியம் மாத்திரம் செய்துகொண்டு அவற்றை யநுஷ்டானத்துக்குக் கொண்டுவரச் சிறிதும் முயலாமல் பொன்னையும் மாதரையும் பெயரையும் புகழையுமே நாடி உழல்வதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்டு வெறுப்புற்று, பிரபஞ்ச வியாபாரங்களுக்குட்பட்டு ஆசாபாசத்திற் கட்டுண்டுழலும் மனிதன் ஒருகாலும் பிரஹ்மஞானச் செல்வத்தை யெய்த முடியாதென்றும், வீண் வாதங்களில் தலையிட்டுக்கொள்வதற்குத் தமக்கிஷ்டமில்லை யென்றும், பரமாத்மாவை யறியும் பரவித்தையே தமக்குவேண்டுமென்றும் தம் தமையனுடன் வெளிப்படையாய் மொழிந்து அப்பாடசாலையை விட்டகன்றார்.

இராணி ராஸமணி அம்மாள் கல்கத்தா நகரத்துக்கு ஐந்து மைல் தூரத்தில் கங்கைக்கரையில் தக்ஷி

ணேசுவரம் என்னும் ஸ்தலத்தில் 1853-(வரு)த்தில் அபரிதமான பொருட் செலவிட்டு அதிரமணீயமான தேவாலயம் கட்டிவைத்து, தான் சூத்திர ஸ்திரீயானமையால் உயர்வர்ணத்தவர்கள் அவ்வாலயத்தில் வந்து ஸ்வாமிக்கு நிவேதனமான பிரசாதத்தை ஸ்வீகரிக்க மாட்டார்களென் றஞ்சி தன் புரோஹிதனுகிய ஒரு பிராஹ்மணோத்தமனைக்கொண்டு அதில் காளிதேவியை பிரதிஷ்டைசெய்வித்தாள். அவ்வாலயத்தில் தமது தமையன் அர்ச்சகராய் நியமிக்கப்படவே இராமகிருஷ்ணரும் அவருடன் காளிதேவியைப் பிரதிஷ்டைசெய்யுஞ் சமயத்தில், அவ்வாலயத்திற்குப்போய்த் தாம் அந்தணரானமையின் சூத்திர ஸ்திரீயால் நிர்மிதமான அவ்வாலயத்திற் போஜனஞ்செய்யக்கூடாதென்று தீர்மானஞ் செய்துகொண்டு, அங்கேயிருக்கத் தமக்கிஷ்டமில்லையென்றும் தம் தமையன் அவ்வாலயத்திற் பூஜைசெய்வது சரியன்றெனவும் அவருடன் கூறிவிட்டு, அற்றைத்தினத்தில் அவ்விடத்தில் சுமார் இருபதினுயிரம் பிராமணர்கள் போஜன மருந்தினும் தாம்மாத்திரம் போஜனஞ்செய்யாமல் அன்றெல்லாம் உபவாசமிருந்து, அவ்விரவு ஒருவேதிய ரில்லஞ்சென்று தம்மிடமிருந்த காசைக் கொடுத்துக் கொஞ்சம் அவையல் வாங்கிக்கொண்டுபோய் கங்காநதிக் கரையில் அவ்வவையலைத் தின்றுவிட்டு அங்கேயே கண்ணயர்ந்து மறுநாள் கல்கத்தாவிற்குச் சென்றார். இராமகிருஷ்ணர் சிலதினங்கள் இவ்வண்ணமாகக் கழித்துவந்தபோதிலும் தம் தமையன்பாலுள்ள வாஞ்சையால் மீண்டும் தக்ஷிணேசுவரத்திற்குச் சென்றார். அவரது தமையன் அவரைத்

தம்மிடத்திலேயே இருக்குமாறு வேண்ட, அவரும் அதற்குச் சம்மதித்து அங்கேயே தங்கியபோதிலும் அவ்வாலயத்தில் மாத்திரம் போஜனம் செய்யாமல் கங்காதீரத்தில் சுயமாய்ப் பாகஞ் செய்துகொண்டு அமுது செய்துவந்தார். பின்னர் இராமகிருஷ்ணரது தமையன் சிலமாதகாலம் நோயால் வருந்தி அர்ச்சக கைங்கரியத்தைத் தாமே நிறைவேற்ற முடியாமல் தம் தம்பியை அர்ச்சகனாயிருக்க ஒப்பச்செய்து, அவர் தம் பிறந்த வூருக்குச் சென்றார். இராமகிருஷ்ணர் அது முதல் தக்ஷிணேசுவராலயத்தில் அர்ச்சக கைங்கரியத்தைச் செய்துகொண்டு அபாரமான பக்தியோடு ஸ்ரீ காளிதேவியை யாராதித்துக்கொண்டு வந்தார்.

அவர் சித்தசுத்தி யடைந்து தமது அந்தராத்மா போதிக்கும் நெறியிலேயே நின்றொழுகுபவராதலின் பொருளாசைக் குட்படாது இம்மை யின்பங்களை வெறுத்து மறுமை யின்பங்களை நுகரவேண்டி அதற்கேற்றவாறு முயன்று வந்தார். தாம் ஆராதிக்கும் ஜகன்மாதாவாகிய காளிகாதேவியே தம்மைப்பெற்றெடுத்த தாயென்று அவர் திரிகரண சுத்தியாய் நம்பி அத்தேவிக்குத் தாம் அர்ப்பிக்கும் நிவேதனத்தை அவ்வம்மன் சுயமாகவே யேற்று வந்ததாகவும் கருதினார். அவர் பிரதிதினமும் தாம் செய்யவேண்டிய பூஜாகாரியங்களை முடித்துக்கொண்டு பின்னர் வெகுநேரம் அவ்வாலயத்தில் தேவிக்கபிமுகமாய் உட்கார்ந்துகொண்டு அத்தியந்த பக்தியுடன் பக்திரஸமுள்ள கீர்த்தனைகளைப்பாடி ஈசுவரியைப் பிரார்த்தித்து வெளியிந்திரிய வியாபாரங்

களையடக்கி ஸமாதி நிஷ்டையில் அமர்ந்திருந்தார். ஒவ்வொரு சமயத்தில் தேவி தமக்குப் பிரத்தியக்ஷமாகாமைக்குக் கண்ணீர் சொரிந்து யார் என்ன சொன்ன போதிலும் ஓயாதழுவார். அவரைப் பார்த்தவர்கள் சிலர் அவர் பித்தனென்றும் மற்றுஞ் சிலர் சிறந்த பக்தனென்றும் வெளிக்குப் பைத்தியசேஷ்டைகளெனத் தோன்றுவதெல்லாம் அப்பக்தியின் லீலாவிலாஸங்களென்றும் கருதினர். அவரது தாயாரும் ஸஹோதரர்களும் அவருக்குக் கலியாணஞ்செய்து வைத்தால் அவர் ஸம்ஸார ஸுகத்தை விரும்பி பிரபஞ்ச ஸுகங்களில் ஈடுபட்டுத் தாம் செய்துக்கொண்டிருக்கும் பைத்தியத்தால் உண்டான விகாரசேஷ்டைகளை யொழிப்பரெனக் கருதி, ஸ்ரீராமகிருஷ்ணரைத் தங்கள் சொந்த ஊருக்கழைத்துக்கொண்டுபோய் அங்கே ஸ்ரீராமசந்திரமுகோபாத்தியாயரின் மகளான ஸ்ரீமதி சாரதாமணிதேவி யெனும் ஐந்துவயதுள்ள பாலிகையை அவருக்கு விவாகஞ்செய்துவைத்தார்கள். தமது தாயாரும் தமையன்மாரும் தமக்கு விவாகஞ்செய்விக்க நிச்சயித்துத் தக்க பெண்ணுக்காகப் பிரயத்தினம் பண்ணிக்கொண்டிருப்பதையறிந்து ஸ்ரீராமகிருஷ்ணர் தாமாகவே இராமசந்திரமுகோபாத்தியாயரது மகள் தமக்கு மனைவியாவாளென்றும் அப்பெண் சத்துவகுணம் பொருந்தியவளென்றும் தேவியின் அம்சத்தால் உண்டானவளென்றும் உரைத்தனராம்.

அன்றியும் அவர் சிலஸ்திரீகள் தேவகணத்தைச் சேர்ந்தவர்களென்றும் சிலர் அஸுரகணத்தைச் சேர்ந்

தவர்களென்றும், தேவகணத்தைச் சேர்ந்த ஸ்திரீகள் தெய்வபக்திபொருந்திய பதிவிரதா சிரோமணிகளாய் விளங்கித் தம் கணவர்களின் இம்மை மறுமைச் சுகங்களுக்கு ஆதாரமாயிருப்பார்களென்றும், அஸுரகணத்தைச் சேர்ந்த ஸ்திரீகள் தங்கணவர்களை யிம்மைச் சுகங்களிலேயே யழுந்தியிருக்கச்செய்து நித்தியானந்த பதவியை இழக்கச் செய்வார்களென்றும், அத்தகைய ஸ்திரீகளைக் கேவலம் பார்வைமாத்திரத்தினாலேயே கண்டு பிடித்து அவர்களின் சுபாவங்களைக் கண்டு கொள்ளத் தம்மால் முடியுமென்றும் கூறுவர். ஒருநாள் அவரைத் தரிசனம் செய்யும்பொருட்டு தக்ஷிணேசுரத்துக்கு வந்த உத்தம குலத்திற் பிறந்த ஒரு பெருமாட்டியைக்கண்டு பார்வைமாத்திரத்தினாலேயே அந்த அம்மை தேவகணத்தைச் சேர்ந்தவளென்று கூறி அவளது அடிகளில் மலர்களைச் சாத்தி தூப தீபங்களால் ஆராதித்துத் 'தாயே' என்று அவ்வம்மையை யழைக்க, அதுவரையில் ஸமாதி என்பது இன்னதென ஒருபொழுதுமறியாத அவ்வுத்தமி அக்கணமே மெய்மறந்து சமாதியில் அமர்ந்து இரண்டு கைகளையும் மேலே தூக்கி ஆசிர்வதிக்கும் வண்ணமாய் நின்றாள். அவள் இவ்வாறு ஸமாதியில் வெளிப் புலன்களின் தொழிலற்று வெகுநாழிகை நிற்றலைக்கண்டு, அவளது புருஷனுக்கு இச்செய்தி தெரிந்தால் தம்மை நிந்திப்பான் என்றஞ்சி தமதன்னையாகிய ஸ்ரீகாளிதேவியைப் பிரார்த்தித்து இராமகிருஷ்ணர் அவளுக்கு மீண்டும் வெளிப்புலன்களின்தொழில் உண்டாகும்படி செய்தார். பின்னர் அவ்வம்மணி கள்ளுண்டவள்போல் கண்சிவ

க்க அதிகக் களைப்புடன் வண்டியேறி வீடுபோய்ச்சேர்ந்தான். இவ் அம்சத்தை யுற்றுநோக்குவோமாயின் இராமகிருஷ்ணர் தாம் அநுபவிக்கும் ஆநந்தத்திற்குச் சாதனமாய்ப்போந்த ஸமாதியை யிதரர்களுக்கும் அநுக்கிரஹிக்க வல்ல மஹானுபவரென் றேற்படும்.

புருஷர்களைப்பற்றியும் அவர் இவ்வாறே கூறுவர். அவரைத் தரிசித்து அவரது உபதேச வாக்கியங்களைக் கேட்கவரும் ஜனங்களுக்குள் இன்னார் இஜ்ஜன்மத்தில் பகவதாராதந தற்பரர்களாகி பிரஹ்மஞானமடைவார்களென்றும் இன்னார் இன்னும் இம்மைச் சுகங்களை யனுபவிக்க வேண்டியவர்க ளென்றும் பார்வையினாலேயே சொல்லிக்கொண்டு வந்தார். மேலும் காமியாகாதவன் மோக்ஷகாமியாகான் என்பதற்கிசைய எவன் தன்பூர்வஜன்மத்தில் மஹாராஜ்யபதவியை யநுபவித்து இம்மை யின்பக்கடலில் மூழ்த்திளைத்துக் கடைசியில் அவ்வின்பங்களின் நிலையாமையை யுணர்ந்து வெறுப்படைகின்றானோ, அவன் இஜ்ஜன்மத்தில் ஈசுவரத்தியானபரனாய் ஒப்பற்ற ஞானச்செல்வத்தை யடைந்து நித்தியாநந்த கைவல்ய பதவியை யடைவான் என்றுமுரைத்தார்.

இராமகிருஷ்ணர் தமக்கு விவாஹமானபின்பு கல்கத்தா நகரஞ்சென்று எப்பொழுதும்போல் தக்ஷிணேசவரத்திற் காளியாலயத்தில் அர்ச்சகரா யிருந்போதினும், அவரது பக்தியும் தியான வைராக்கியங்களும் தினையளவும் குறையாது அதிகரித்துவந்தன. அவர் ஸதா ஈசுவரத்தியானம் செய்துகொண்டு தேவியை

நோக்கி 'அடியேனுக்குப் பிரத்தியக்ஷமாகி யருள்புரி யாயோ' என இறைஞ்சிக் கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கரைந்து கரைந்து யார் என்ன சொல்லினும் ஓயாமல், இதற்குள் ஸூர்யாஸ்தமனமாவதைக் காட்டும் சங்கத் வனியைக்கேட்டுத் 'தாயே' இன்றும் நின்னைக்காணும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்கவில்லையே' யெனத் துயரமுறுவார். அவர் பகவானை யாராதிப்பதிலேயே மனதைச்செலுத்தியிருப்பதையும் தமக்கு தேவிபிரத் தியக்ஷமாகவில்லையே யென்று அவர் சோகப்படுவதை யுங் கண்டு, 'மனிதன் எங்கே? தேவியைப் பிரத்தி யக்ஷமாய்க் காண்பதெங்கே?' யென்று சிலரும், இவ ருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதென்று சிலரும் இவருக்கேதோ வியாதிபோலிருக்கிறதென்று சில ரும் அவரவர்களுக்குத் தோற்றியவாறு செப்பினர். பொன்னையும் மாதரையும் பெயரையும் புகழையுமே பெரிதெனக் கொண்டவர்களுக்கு ஒருவன் பெண்டு பிள்ளைகளை எவ்வளவு ஆசையாய் நேசிக்கின்றானோ அவ்வளவு ஆழ்ந்த பக்திப் பிரேமைகளுடன் பகவா னிடத்திலும் வர்த்திக்கக் கூடுமென்பது புலப்படு மா? இராணி ராஸமணியம்மாளின் மருகனாகிய மது ராநாதன் இந்தப் பிராஹ்மணரிடத்தில் எப்பொழுதும் பக்திவிசுவாஸ முள்ளவனானமையால் அவரது பைத்தி யத்தைக் குணப்படுத்தக் கருதி, அவரைக் கல்கத்தாவி லுள்ள சிறந்த வைத்தியர்களுக்குக் காட்டினான். ஆனால் அவர்கள் முயற்சிகளெல்லாம் நிஷ்பலமாயின. டாகா நகரவாசியாகிய ஒரு வைத்தியர்மாத்திரம் இவர் யோக புருஷரென்றும் இவருக்குப் பரப்ரஹ்மப் பிராப்தியி

லன்றி மற்றெவ்வித சிகிச்சையாலும் இம்மனோவியாதி நீங்காதென்றும் சொல்லவே, இனி இராமகிருஷ்ணர் பிரபஞ்ச வியாபாரத்திற்குப் பயன்படாரென்று மதுராநாதன் நிச்சயித்துக்கொண்டான்.

இவ்வாறு வரவர அவரது ஈசுவரத்தியான ஸாதனம் அதிகரிந்து வருகையில் ஒருநாள் தேவி தமக்குப் பிரத்தியக்ஷமாகாமைக்குத் துயரமுற்றுத் தாம்தாயெனக்கருதிய தேவியை யினிக் காண்பதேதென ஏங்கி அச்சோகத்தைப் பொறுக்கமுடியாமல் பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ள நினைந்து கடைசியில், பலநாட்செய்த தவத்தின் பயனாகத் தேவியார் பிரத்தியக்ஷமானதன் மேல் ஆனந்தமுற்றார். இவ்வாறு அவர் கோரியபொழுதெல்லாம் தேவி அவருக்கு பிரத்தியக்ஷமாய்க்கொண்டிருந்தமையால் மனச் சமாதானம் அடைந்தார். அன்றியும் அவர் தமக்குத் தேவி உண்மையாய்ப் பிரத்தியக்ஷமானதும் ஆகாததும் வாஸ்தவமாய்த் தெரிந்து கொள்ளக் கருதி தேவியாரைத் தமக்குச் சில அற்புதங்களைக் காட்டச் சொல்லி அவ்வற்புதங்கள் அக்கணமே நிகழ்வதைக் கண்டு, தமக்குத் தேவியார் நிஜரூபத்துடன் உண்மையாய்ப் பிர்த்தியக்ஷமானாளெனவறிந்து ஆநந்தமுறுவர். ஒருநாள் அவர் தேவியாரை நோக்கி, இதுவரையில் ஒருகாலும் தக்ஷிணேசுவராலயம் இன்னதென்றறியாத ராணி ராஸமணியம்மாளின் குமாரத்திகள் இருவர்களும் இந்தக்ஷணம் இங்கே வந்து அதோ தெரிகிற ஆலவிருக்ஷத்தின் கீழே நின்று என்னுடன் உரையாடும பக்ஷத்தில், நீ உண்மையாய் எனக்குப் பிர

த்தியக்ஷமாயில்லையெனக் கருதுவேன்' எனக்கூறலும், உடனே ராணி ராஸமணியம்மாளின் குமாரத்திகள் இருவரும் தங்கள் அன்னையின் அநுமதிபெற்று வேடிக்கையாக ஆலயத்தைப்பார்க்க வருபவர்கள் போல் வந்து இராமகிருஷ்ணர் கோரிபபடியே அங்குள்ள ஆலமரத்தின்கீழே நின்று, 'காளிமாதா நினக்குப்பிரத்தியக்ஷமாயினள், நீ பயப்படவேண்டாம்' என்று கூறி அவரைச் சமாதானப் படுத்தினர்கள்.

அவரது ஈசுவர தியான ஸாதனம் வரவர அதிகரித்தலும் அவர்வெளிப்புலன்களின் தொழிலற்றுப்பல நாள்வரையில் ப்ரஹ்மாநந்தஸுகம் அநுபவித்துக்கொண்டு ஸமாதியில் நின்றுதாம் செய்யவேண்டிய அர்ச்சக கைங்கரியத்தையும் மறந்திருந்தார். ஒருதேவதையைப் பூஜிக்கும் அர்ச்சகன் பூஜையை யாரம்பிப்பதற்குமுன் தன் சிரஸில் ஒருமலரை வைத்துக்கொண்டுதன்னையே தான் பூஜிக்கப்போகும் தேவதையாகப் பாவிக்கவேண்டுமென்று சாஸ்திரங்களில் கூறியபடி, ஸ்ரீராமகிருஷ்ணர் தமது தலையில் புஷ்பத்தை வைத்துக்கொண்டு தம்மை ஜகன்மாதாவெனப் பாவிக்கையிலேயே ஸமாதி நிஷ்டராகி அதே நிலையில் வெகுநாழிகை அமர்ந்திருப்பார். இவ்வாறு அவர் தந்மயத்துவம் அடைந்து தேவியைப் பூஜிப்பதை யறவேயொழித்துத் தம்மையே பூஜித்துக்கொண்டு பூஜார்த்தமாகக் கொண்டுவரப்பட்ட பதார்த்தங்களனைத்தையும் தாமே அநுபவிப்பதை மதுராநாதன் கண்டு அவர் அங்ஙனம் செய்யாதிருக்குமாறு முதலில் தடுக்க முயன்றுன். ஆனல், ஒருநாள்

கண்டு இவர் கேவலம் பரப்ரஹ்மஸ்வரூபியே யென்று தெரிந்து இனி யிவரைப் பூஜா கைங்கரியத்தை நடத்தச் சொல்வது சரியன்றெனக் கருதி அவரது உடன்பிறந்தாள் மகனை யர்ச்சகனாக நியமித்து அவர் இஷ்டப்படி அவரை விட்டுவிட்டாள்.

இவ்வாறு தாம் கருதியபொழுதெல்லாம் தமக்கு தேவியார் பிரத்தியக்ஷமாவதுடன் மாத்திரம் திருப்தியடையாமல், நிர்விகற்ப ஸமாதியுமடைய வெண்ணிப் பன்னிரண்டாண்டு கொடிய தவம் புரிந்தார். இப் பன்னிரண்டாண்டுகளிலும் தம் இருதயத்திலிருந்த தாபம் இவ்வளவவ்வளவென்று சொல்லத்தரமன்றென இராமகிருஷ்ணரே பின்னர் தம்நண்பர்களுடன் கூறியிருக்கின்றார். இவ்வாறு அவர் கொடிய தவம் புரிந்துகொண்டிருக்கையில் ஒருநிமிஷ நேரமாயினும் அவர் கண்மூடித் தூங்கி யறியார். இப்படிக் கொஞ்சமாயினும் கண்ணிமைத்து நித்திரை செய்யாமைக்குக் காரணம் தமக்கு ஏதாவது நோய் சம்பவித்திருக்கின்றதோ தாமென்று சந்தேகங்கொண்டு ஒரு கண்ணாடியில் தம் முகத்தைப் பார்த்துக் கண்ணின் கருவிழியை விரலாற் குத்தியும் தூக்கம் வராமையால் நெஞ்சம் பதைபதைக்கக் காளிதேவியை நோக்கி, 'தாயே, நின் அருளைப் பெறக்கருதி நினை வழிபட்டுப் பிரத்தியக்ஷஞ் செய்துகொண்டதற்குக் கண்மூடி ஒருநிமிஷமாயினும் நித்திரைசெய்ய முடியாமல் இவ்வாறு தவிப்பதுதான் பயனோ?' என்று தமது குறையை விண்ணப்பஞ் செய்ய, உடனே அவருக்குப் பிரபோதம் உதயமாகி அவர் முன் ஒரு தேஜோ ராசி

வெளிப்பட்டு அவரது உள்ளத்தைச் சாந்தப்படுத்தி, பயப்படாதே எனத் தைரியங் கூறி, "குழந்தாய், உன் சரீர சுகத்தை விடாமலே நீ எவ்வாறு பகவத் ஸந்தர்சனம் அடைவாய் ?" எனக் கூறியதுபோல் ஒரு சத்தம் அவர் செவியில் விழுந்தது. அவர் மீண்டும் காளிதேவியை நோக்கி, 'தாயே இம்மை யின்பங்களை யநுபவிப்பதிலேயே யழுந்திருக்கும் ஸம்ஸாரிகளாகிய மனிதர்களின் உதவியைக்கொண்டு அடியேன் திவ்யஞானம் பெறுதல் முடியாது; நினது திருவருளாலேயே அஃதெனக்குப் பிராப்தமாதல்வேண்டும்' என்று விண்ணப்புஞ்செய்ய, ஸ்ரீ காளிதேவியும் அவரிடத்திற் கருணைகூர்ந்து "குழந்தாய், உனக்கவ்வாறே திவ்யஞானச் செல்வம் உண்டாகுமாறு அருள் புரிகின்றேன், சந்தேகம் வேண்டாம்" என்று சொன்னதுபோல் ஒரு இனிய தொனி கேட்டது. அதுமுதல் அவர் சரீரசௌக்கியத்தைச் சிறிதேனும் பாராட்டாமல் நிர்மலஞானப் பிராப்தியின்பொருட்டு முயன்று வந்தார். வெளிப்புலன்களின் வியாபாரங்களை மறந்து அவர் ஸமாதி நிஷ்டையில் இருக்கும் ஸமயத்தில் அவரது மருகராகிய ஹிருதயாநந்தர் அவரது சரீரதாரணத்தின் பொருட்டு யாதாயினும் கொடுக்கவேண்டுமென யோசித்து அவரது வாயில் கொஞ்சம் அந்நம் ஊட்டுவார். சில சமயங்களில் அப்படி செய்வதுகூட அஸாத்தியமாய்ப் போய்விடும். மேலும் அவர் அஹம்பாவத்தை யொழிக்க நினைத்து ஒருகால் ஈனஜாதியார்களின் வீடுகளுக்குச்சென்று அங்கே தாழ்ந்த ஜாதி வேலைக்காரர்கள் செய்யும் வேலைகளைச்செய்து, தாம் பிராமணராகையால் அத்தகைய

காரியங்களைச் செய்யக்கூடாதென்று கருதாமல் எல்லாம் பிரஹ்மஸ்வரூபமே என்பதைத் தம் அநுஷ்டானத்தாற் காட்டினார்.

ஒரு சமயத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் கங்கையாற்றின் கரையில் உட்கார்ந்து ஒரு கையில் பொன்னையும் வெள்ளியையும் மற்றொரு கையில் மண்ணையும் எடுத்துக்கொண்டு அவ்விரண்டும் ஸமானமேயெனத் தம் மனதிற் கருதி இம்மை யின்பங்களைக் கோருகின்றவர்களுக்கு இந்நாணயங்கள் விரும்பற்பாலனவாயினும் பிரஹ்மஞானச் செல்வத்தைப் பெறக் கோரும் எனக்கு மாத்திரம் இவை மண்ணுக்குச் சமானமேயென்று தன் கையிலிருந்த வெள்ளியையும் மண்ணையுங் கலந்து கங்கையில் விட்டெறிந்தார். மற்றொரு சமயத்தில், அவரிடத்தில் அதிக பக்தி விசுவாசமுள்ள மதுராநாதன் ஒரு விலையுயர்ந்த பொன்சரிகைச் சால்வையை அவரது திருமேனியின்மேல் சாத்த, அவரும் சிறிது நேரம் சும்மாவிருந்து பின்னர் அச்சால்வையை யெடுத்து மண்ணில் எறிந்து காலால்மிதித்து, பிரபஞ்ச வைபவ ஆடம்பரத்தைக் காட்டி நிர்மலமான ஸச்சிதாநந்த ஸ்வரூபத்தைக் காணவொட்டாமற் றடுக்கும் இவ்வஸ்திரம் எனக்கொரு நாற்றமெடுத்த பிரங்கந்தல் நிறைந்த கைந்த கோவணத்துக்கு நிகரென அதைத் தூரத்தள்ளினார்.

இந்த ஸமயத்தில் இராமகிருஷ்ணர், தமது தேஹம் முழுவதும் விசேஷ தாபத்தால் ஒருவித எரிச்சல் உண்டானமையால் கங்காநதியில் அமர்ந்து பகலையெல்லாங் கழிப்பார். அவர் படும் வருத்தத்தைக் கண்ட ஒரு

பிராஹ்மணஸ்திரீ அவரது மேனி முழுவதும் திவ்விய கந்தத்தைப் பூசிக் கழுத்தில் புஷ்பஞ் சாத்தி சகிக்தற்கரிய அந்தத் தாபத்தை மூன்று தினங்களிற் போக்கடித்தாள்.

இந்தப் பிராஹ்மணி வங்காளதேசத்திற் பிறந்தவொரு சிறந்த பண்டிதையாவாள். முழந்தாள் வரையில் தொங்கும் நீண்ட கைகளும் சுந்தரவடிவமும் விவேகமும் பொருந்தி ஸரஸ்வதி விக்கிரஹம்போல் விளங்கிய அவ் யோகினீகுலரத்தினம் ஸகல சாஸ்திரபாரங்கதையாய் எத்தகைய கடின நூலையும் எளிதிற்படித்தறியும் சக்திவாய்க்கப்பெற்று எத்தகைய பண்டிதர்களுடனும் எவ்வித விஷயத்தைப்பற்றியும் ஆராய்ச்சிசெய்து நிமிஷத்தில் அவர்களை அபஜயப்படச்செய்துவந்தாள் அவள் இனிய குரலில் பகவந் கீர்த்தநங்களைப் பாடிக்கொண்டு உலக ஸுகத்தை விட்டொழித்து யோகாப்பியாஸஞ்செய்து யோகஸாம்ராஜ்யமடைந்து காஷாய வஸ்திரதாரிணியாய்த் தேசமெங்கணும் திரிந்துகொண்டிருந்தனள். பாபம் நிறைந்த இப்பிரபஞ்சத்தின் கண்ணுள்ள பாமரர்களைப் பவக்கடலினின்றும் கரையேற்ற வந்தருளிய தேவதைபோல் விளங்கிய அவள் தனது குலகோத்திரங்கள் இன்னவையென எவர்கேட்கினும் சொன்னளில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரும் தமக்கொரு யோகினியினுல் யோகஸாம்ராஜ்யபதவி ஸம்பூர்ணமாய்க் கிட்டப்போகின்றதென ஸ்ரீகாளிதேவியாலறிந்த அவ்யோகினியைக் கண்டவுடனே தம் மனோரதம் ஈடேறுமென்று தைரியங்கொண்டு, 'நான் உபதேசிக்க

வேண்டிய மூவர்களுள் இருவரைப்பார்த்தாய்விட்டது; மூன்றுவனுகிய உன்னைப் பலநாளுந்தேடிக் கடைசியாய் இங்கே கண்டேன்' என அவள் உரைத்த வசனத்தைக் கேட்டு எல்லையற்ற ஆநந்தக்கடலில் மூழ்கினுர்.

இவ்யோகினியின் கல்வித்திறத்திற்கும் ஸகல சாஸ்திர பாண்டித்தியத்திற்கும் எல்லாரும் ஆச்சரியப்பட்டு இப்பைத்தியக்கார ராமகிருஷ்ணனுக்கு இவள் செய்யுங் கௌரவத்தைக் கண்டு வியந்தார்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் பைத்தியக்காரரல்லர் என்றும் யோகாப்பியாஸம் செய்யும் அனைவர்க்கும் இத்தகைய மநோவிகாரங் களெல்லாம் தப்பாமல் உண்டாகுமென்றும் அவ்யோகினி யோகசாஸ்திரத்தினின்றும் பிரமாணங்களைக்காட்டி பண்டிதர்களுக்குச் சமாதானஞ் சொன்னுள். இராமகிருஷ்ணருக்கு இப்பொழுதுண்டான மனோவிகாரங்களை நானூறு வருஷங்களுக்குமுன் ஸ்ரீகிருஷ்ண சைதந்ய ஸ்வாமிகளுக்கும் ஸம்பவித்தனவென்று உரைத்தனள். ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சரீரத்தில் உண்டான தாபத்தைப்போன்ற தாபமே பூர்வம் பிருந்தாவனத்துக் கோபஸ்திரீகளுக்கும் இராதைக்கும் பின்னர் சைதந்யருக்குங் கூடப் பிரஹ்மாநுபவத்திற்காகப் பிரயத்தினப் படும்பொழுது ஸம்பவித்ததென்றும் அவர்கள் இவ்வாறே தம் சரீரத்துக்குச் சந்தனம் பூசிப் பூமாலை தரித்துக்கொண்டதனுல் அந்தத் தாபம் ஆறிற்றென்றும் நூல்களினின்று பிரமாணங்கள் எடுத்துக்காட்டினுள். ஸ்ரீராமகிருஷ்ணரை வருத்தும் சரீரதாபம் நோய் சம்பந்தமான தன்றெனவும், பக்தியோகத்தில் உந்நத பத

வியடைந்தவர் யாவருக்கும் சாமாந்யமாய் உண்டாகும் ஒருவித மநோவிகார ஜநித தாபமென்றும் அவள் உரைத்து அவரது சரீரதாபத்தை யெல்லாம் மூன்று தினங்களிற் போக்கினாள்.

அன்றியும் இராமகிருஷ்ணரிடத்தில் அவ்யோகினியிருந்த காலையில் அவருக்குப் பொறுக்கமுடியாத பசியுண்டாகி எவ்வளவு புசித்தாலும் தீராமலிருந்தது. அவ்யோகினி இத்தகைய க்ஷுத்பாதையே சைதந்யருக்கும் யோகாப்பியாஸம் செய்த அனைவருக்கும் பூர்வம் உண்டாயிற்றெனவுரைத்து இராமகிருஷ்ணருக்குப் பலவிதமான போஜன பதார்த்தங்களைக் கொடுக்கச்சொல்லி அவரது மநோவிகாரத்தை நீக்கினாள். பின்னர் சில வருஷங்கள் இவ்யோகினி இராமகிருஷ்ணரிடத்திலேயே இருந்து யோகாப்பியாசத்தின் இரகசியங்களையெல்லாம் அவருக்குப் போதித்து, அவர் பிரபோதோதயம் அடைந்து நிர்மலஞானம் விளங்க நிர்விகற்ப சமாதியில் இருக்குமாறு செய்தனள்.

இராமகிருஷ்ணர் யோகாப்பியாஸம் செய்யவாரம்பித்துப் பதஞ்சலி யோகசாஸ்திரத்திற் கூறப்பட்டுள்ள அஷ்டாங்கங்களாலும் சுவாஸத்தை உள்ளடக்கி இந்திரியங்களையும் மனதையும் சுவாதீனப்படுத்திக்கொண்டார். அவர் இவ்வாறு யோகசாஸ்திர ஸம்பிரதாயமனைத்தையும் வெகு சொற்பகாலத்திலேயே யுணர்ந்து யோகநிஷ்டை கைகூடப்பெற்றதைக் கண்டு அவரது ஆசாரியர்கள் ஆச்சரிய முற்றனர். ஒருநாளிரவு அவர் யோகாப்பியாஸஞ் செய்துகொண்டிருக்கையில் தமது

வாயிலிருந்து இரத்தம் வருவதைக் கண்டு பயப்படலா ஞர். அப்பொழுது தக்ஷிணேசுவராலயத்தின் பூஜா கைங்கரியங்களை அவரது தமக்கை மகனாகிய ஹலதாரி என்ற மஹாபண்டிதர் செய்துவந்தார். அவர் மஹாபரி சுத்தாத்மா; வாக்ஸித்தி முதலிய திவ்விய சக்திகள் பொருந்தியவர். சில தினங்களுக்கு முன் இராமகிருஷ்ணர் அவரிடத்திலுள்ள சிலகுற்றங்களை எடுத்துக்காட்டி அவரைக் கோபித்து அதிர்ப்திப் படுத்தியதால், அவர் 'உன் வாயிலிருந்து இரத்தம் கொட்ட' வென்று இராம கிருஷ்ணரை சபித்தார். இப்பொழுது அவரது வாக்கு பலித்துவிட்டதைக் கண்டு இராமகிருஷ்ணர் கலக்கமுற் றிருக்கையில் அச்சமயத்தில் அங்கிருந்த யோகீசுவரர் ஒருவர் அவரிடம் போந்து அவருக்கு நேர்ந்ததை விவ ரமாய் விசாரித்துத் தைரியங்கூறி அப்படி யவருக்கு இரத்தம் வந்தது மிகவும் நல்லதென்றும் அவர் உலகத் துக்கு உண்மையை உபதேசித்து விசேஷ உபகாரம் புரியவேண்டி யிருப்பதால் அவர் புநராவிர்த்தி ரஹித மான ஸமாதிநிலையிற் பிரவேசிக்கப் பகவான் திருவுள் ளம் பற்றவில்லையென்றும் உரைத்து அவரை ஸமாதா னப்படுத்தினர். அன்றியும் இராமகிருஷ்ணர் அப்பொ ழுது அப்பியஸித்துவந்த யோகத்தில் ஸித்தி பெற்ற வர்கள் ஸமாதியிலுள்ள ஸமயத்தில் அவர்கள் சரீரத் திலுள்ள இரத்தமெல்லாம் ஊர்த்துவமுகமாய்க் கபா லத்துக் கேறுமென்றும், அப்பொழுது ஜீவாத்ம பரமா த்ம அபேதத்தை அவர்கள் ஸாக்ஷாத்கரித்துத் தங்கள் அபரோக்ஷாநுபூதியை உலகத்துக் குரைக்க மீண்டும் திரும்பாமலே கைவல்ய பதவி யடைகின்றனரென்றும்

யில் தக்ஷிணேசுவராலயத்தில் இராமகிருஷ்ணரைக்
கண்டு அக்கணமே அவர் யோகியெனவறிந்து மிகுந்த
ஆதரத்துடன் அவருடன் உரையாடி "நினக்குவேதாந்
தரகசியங்களை யுபதேசித்துக் கைவல்ய பதவியடையும்
வழியைக் காட்டுகின்றேன்" என்றார். இராமகிருஷ்ணர்
காளிமாதாவின் ஆணையின்றி எப்பொழுதும் எதுவும்
செய்யா விரதமுடையாரானமையால் தமதன்னையைக்
கேட்டுவருவதாக விடைபெற்றுச் சென்று இரண்டு
நிமிஷத்தில் திரும்பிவந்து "தேவரீர் கடாக்ஷிக்க" என்
றார். தோதாபுரி அவருக்கு யோக ஸமாதியில் தம்ம
யத்துவம் அடைந்து ஜீவாத்ம பரமாத்மாக்கள் ஒன்
றேயென வுணரும் வழியைப் போதித்து நிர்விகற்ப
சமாதியில் அறிந்துகொள்ளவேண்டிய விசேஷ அம்
சங்களை மூன்று தினங்களில் உபதேசித்தார். தோதா
புரியார் நாற்பது வருஷம் அதிக கஷ்டப்பட்டு
அடைந்த நிர்விகல்ப ஸமாதியை இராமகிருஷ்ணர்
மூன்று தினங்களில் ஸித்தியாகப் பெற்றதற்கு ஆச்
சரிய மடைந்து, 'இனி நீ என் சிஷ்யனல்லை, எனக்
குச் சமமாய்விட்டாய்' என்றார். ஸ்ரீராமகிருஷ்ண
ரிடத்தில் அவர் அதிக வாத்ஸல்ய முடையவராகிப் பதி
னொரு மாதகாலம் அவருடனேயே யிருந்து அவரிட
த்திலிருந்து பல விஷயங்களைத் தெரிந்துகொண்டார்.
இராமகிருஷ்ணர் தோதாபுரியைவிட உயர்ந்த ஞானி
யென்பதற்கு ஒரு நிதரிசனம் கூறுகின்றோம். தோதா
புரி இரவும் பகலும் ஒரு அக்நிகுண்டத்தைத் தம்மிடம்
வைத்துக்கொண்டு அதிலுள்ள அக்நியைப் பரிசுத்த
மானதெனக் கருதிவந்தார். ஒருநாள் ஒருவன் அதி

னின்று கொஞ்சம் நெருப்பை எடுத்துக் கஞ்சாப்பற்ற வைத்துக்கொண்டு போவதைப் பார்த்து அவனைக் கடிந்தார் தோதாபுரியார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் தோதாபுரியை நோக்கி, 'ஸர்வமும் ப்ரஹ்மமயமென்று தாங்கள் கருதுவது இவ்வாறு தானே? இவ்வக்நியும் இதை யெடுத்துக் கொண்டுபோனவனும் பிரஹ்ம மயமல்லவோ? ஞானியின் திருஷ்டியில் உயர்வு தாழ்வு என்கிற வேற்றுமையும் உண்டோ?' என்று தர்மஸூக்ஷ்மத்தை யெடுத்து விளக்கியபொழுது தோதாபுரியார் வெட்கி, 'தம்பி நீ உரைப்பது உண்மையே. இன்று முதல் கோபத்தை விட்டுவிட்டேன்' என்றார். ஆனால், நிர்விகல்ப ஸமாதியை யடைந்தபின்னரும் இராமகிருஷ்ணர் காளியைத் தமது தாயெனக்கருதி வந்தமைக்குக் காரணமுணராமல் ஒருநாள் தோதாபுரியார் அவரை நோக்கி 'இன்னமும் பக்தியோகத்தை விட்டுவிட உன்னால் முடியவில்லையா?' என்றாக்ஷேபித்தார். அதற்கு இராமகிருஷ்ணர், 'சுத்த சைதன்யத்தில், நான், நீ, ஈசுவரன் என்றபேதம் கிடையாது. அது வாசாமகோசரமானது. ஆனால் அஹங்காரத்துடன் கூடிய நீ நான் என்ற வியவஹாரம் சிறிதேனும் உள்ளவரையில வாசமகோசரமாகிய ப்ரஹ்மம் ஈசுவர ரூபமாய் ஜீவனது மனதுக்கு விஷயமாகின்றபடியாலும் அஜ்ஜீவனது கண்டத்தன்மையுள்ள மனமானது அகண்ட சைதன்யத்துக்கு அதீனமானமையாலும் ஸர்வஞ்ஞத்துவாதி லக்ஷணங்கள் பொருந்திய அவ்வகண்ட சைதன்யத்தை ஈசுவர வடிவமாகவும் ஜகதம்பா வடிவமாகவும் நான் ஆராதிக்கின்றேன்' என விடையளித்தார்.

தோதாபுரி இராமகிருஷ்ணரை விட்டுப் பிரிந்து சென்ற பின்னர் இராமகிருஷ்ணர் பரப்ரஹ்ம ஐக்கியமடைந்து நித்திய நிர்விகல்ப ஸமாதியிலிருக்க முயன்று ஆறுமாசம் ஸம்பூர்ணமாய்ப் பரப்ரஹ்ம ஐக்கியமடைந்து நிர்விகல்பஸமாதியி லிருந்ததாயும் அவ்வித நிர்விகல்ப ஸமாதியை யொருவர் அடைகிறதென்றால் வெகு கஷ்டமென்றும் அப்படியின்றி ஒருகால் அடைந்த போதிலும் ஸமாதியைவிட்டு வருவது அஸாத்திய மென்றும் தம் சரீரம் ஸத்துவகுணம் நிறைந்ததானமையால் தாம் இந்தக் கடினமான யோகாப்பியாசத்தில் நிர்விகல்ப சமாதியைச் சம்பூர்ணமாய் அடைய முடிந்ததென்றும் இந்த ஆறு மாதங்களும் தாம் கேவலம் வெளிப்புலன்களின் தொழிலற்று நிர்விகல்ப சமாதியிலேயே கழிந்தனரென்றும் அச்சமயத்தில் ஸத்துவ குண சம்பன்னனாகிய ஒருஸாது தம்சரீரத்தை ரக்ஷிக்க நினைந்து தம்மை ஒரு பெரிய தண்டத்தால் அறைந்து ஸமாதியினின் றெழுப்பி அன்னபானாதிகள் கொடுத்துக்கொண் டிருந்தானென்றும் ஒரு ஸமயம் தம்மை எவ்வளவு நேரம் அடித்தபோதிலும் தாம் சமாதியை விட்டு எழாமலிருந்ததைக் கண்டு அவன் வியாகுலப் பட்டானென்றும் இவ்வாறே ஆறுமாதமும் கழிந்த பின்னர் தமதுசரீரம் சுஷ்கித்து இரத்தபேதிகாணவே இரண்டு மூன்று மாதத்திற்குள் சமாதியினின்று கண் விழித்து எப்பொழுதும்போல் சர்வேந்திரிய வியாபாரங்களும் பொருந்தப் பெற்றாரெனவும் தமது நண்பர்களுடனும் சிஷ்யர்களுடனும் கூறினார். பின்பு உடம்பு சொஸ்தமானவுடன் இராமகிருஷ்ணர் வைஷ்ணவ ஸித்

தாந்தத்தை யநுஸரித்து பக்தியோகத்தால் ஈசுவரனை யாராதிக்கத் தொடங்கினார். இந்தப் பக்தியானது சேவ்யசேவகபாவம், மித்ரபாவம், பித்ருபுத்ர பாவமாகிய வாத்ஸல்யம், நாயகநாயகிபாவமாகிய பிரேமை என நான்குவகைத்து. ஓர் உத்தமபத்தினியானவள் தன் பர்த்தாவை மனம், வாக்கு, காயம் என்கிற திரிகரணங்களாலும் உண்மையாய்க் காதலிப்பதுபோல் பக்தபராதந்திரனாகிய பகவானை ஜீவாத்மா பிரேமிக்குங் காலேதான் பக்தியோகத்தின் உத்தமநிலை கைகூடும். இவ்வாறே பக்திமூலமாய்ப் பூர்வம் பிருந்தாவனத்தில் வசித்த கோபிகாமணிகள் கண்ணனை யேத்தி உலக சுகங்களை வெறுத்து முக்திநெறியைக் கண்டனர். இராதையானவள் மாதவனிடத்தில் பக்திபண்ணி சாயுஜ்ய பதவி யடைந்த விதத்தை வர்ணித்துரைக்கும் அற்புத நூல்களை உலக இன்பங்களில் அழுந்தியுழலும் கயவர்கள் படித்தும் அவற்றின் சாரமான உண்மையை யுணரும் வகையறியாது தவிப்பர். இராமகிருஷ்ணர் இவ்வாறு லளிதமான பக்தியைப்பண்ணி சாயுஜ்யமடைய வெண்ணி இராதையைப்போல் பெண் வேஷம் பூண்டு ஸ்ரீகிருஷ்ணனைத் தமக்கு நாயகனாகக் கருதி அவரது ஸாந்நித்தியத்தை யடைந்தானந்தித்தார். இவ்வாறு வைஷ்ணவ சம்பிரதாயத்தை யநுஸரித்து பக்தியோகத்தால் ஸம்பூர்ண ஸாயுஜ்யாநுபவம் அடைந்த பின்பு, பரதகண்டத்திலுள்ள மகம்மதியமத முதலான இதர மதசித்தாந்தங்களையும் அப்பியசித்து அவற்றின் மூலமாயும் தமது இஷ்டசித்தியை வெகு துரிதகாலத்திலேயே யடைந்தார். இராமகிருஷ்ணர் எந்த மதசித்

தாந்தத்தையாயினும் தெரிந்துகொள்ள விரும்பிய பொழுது அம்மதசித்தாந்தத்தைப் பூர்ணமா யறிந்த ஒரு மகாநுபாவர் அவரிடம் வந்து அவருக்கு அம்மதசித்தாந்தத்தின் இரகசியங்களை யெல்லாம் நன்றாய் உபதேசித்துக் கொண்டிருந்தார். இவ்வண்ணம் தெய்வ சங்கற்பத்தால் தாம் கோரிய கோரிக்கைகளெல்லாம் ஈடேறப்பெற்றாரென்பதற்கு ஒரு நிதரிசனம் கூறுகின்றோம். ஒருநாள் தக்ஷிணேசுவரத்திலுள்ள பஞ்சவடியெனும் ஒரு பெரும் ஆலமரத்தினடியில் உட்கார்ந்து தாம் யோகாப்பியாசம் செய்வதற்குத் தகுந்த ஒரு பர்ணசாலை அமைக்க நினைத்துக்கொண் டிருக்கையில், அவர் நினைத்தவாறே ஒரு சிறு குடிசைக்கு வேண்டிய சாமான்க ளெல்லாம் கங்காநதியின் பிரவாஹத்தில் அடித்துக் கொண்டுவந்து அவருக்குச் சமீபமாகவே கரையோரமாக வந்தொதுங்கியதைக் கண்டு மகிழ்ந்து அவற்றைக்கொண்டு கங்காநதிதீரத்தில் ஒரு பர்ணசாலை அமைத்து அங்கே யோகாப்பியாசம் புரிந்துவந்தார்.

அநந்தரம் இராமகிருஷ்ணர் கிறிஸ்துமத சித்தாந்தத்தையுணர்ந்து பக்தியோகத்தில்அமர்ந்துஞானநிஷ்டையில் உள்ளபொழுதெல்லாம் கிறிஸ்துவையே கண்ணாரக் கண்டு வாயார வாழ்த்திவந்தார். அவர் பக்தியோகத்தினால் எந்தத் தெய்வத்தை யாராதித்தாலும் அந்தத் தெய்வம் அவருக்குப் பிரத்தியக்ஷமாகிறது வழக்கம். அவர் தமக்கும் அத்தெய்வத்துக்கும் ஐக்கிய முண்டாவதைக் கண்டு பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பேதமில்லையென பக்தியோகத்தாலும் தெரிந்துகொ

ண்டார். அவர் இவ்வாறு சகலமத ஸம்பிரதாய ரஹஸ்யங்களையும் ஸம்பூர்ணமாய்த் தெரிந்துகொண்டு 'ஏகமேவாத்விதீயம்' எனும் உபநிஷத் வாக்கியத்தின்படி அகண்ட ஸச்சிதாநந்த பரப்ரஹ்மம் ஒன்றேயென்றும் இவ்வகண்ட ஸச்சிதாநந்த பரப்ரஹ்மத்தையே ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொருவடிவமாக ஆராதிக்கின்றார்களென்றும், பரஸ்பர விரோதமாய்க் காணப்படும் இம்மதங்களெல்லாம் அப்பரப்ரஹ்மத்தை யடைவதற்காக வுண்டான பலவகை மார்க்கங்களேயென்றும் ஸித்தாந்தப்படுத்தினர்.

இராமகிருஷ்ணருக்கு இராமசந்திர முகோபாத்தியாயரது அஞ்சுவயதுள்ள மகள் கலியாணம் செய்யப்பட்டாள் என முன்னரே கூறியிருக்கின்றோம். அவ்வுத்தமிக்கு இப்பொழுது பதினெட்டுவயதாயிருந்தது. அவ்வம்மை தன் கணவன் பைத்தியம் பிடித்துத் திரிகின்றானென்று சிலராலும், பரப்ரஹ்மாநந்த பதவியை யடையும்பொருட்டு யோகாப்பியாசம் செய்து ஞானநிஷ்டையி லிருக்கிறாரென்று சிலராலும் கேள்வியுற்று அவர் மூலமாகவே தன் கதியை யறிந்துகொள்ள விரும்பித் தன் தாயின் அநுமதிபெற்றுப் புறப்பட்டுப் பாதசாரிணியாய் 80-மயில் தூரம் நடந்து தன் கணவனாகியஇராமகிருஷணர் இருக்குமிடம் வந்துசேர்ந்தாள். அவ்வாறு வந்த தமது பத்தினியை இராமகிருஷ்ணர் ஆதரவாய் எதிர்கொண்டழைத்து, அவளை மணந்த இராமகிருஷ்ணன் அப்பொழுதே மரித்தானென்றும், தாம் இப்பொழுது ப்ரபஞ்ச வியாபாரங்களை யொழி

த்து ஞானநிஷ்டையி லிருப்பதால் அவளை மனைவியாக ஏற்கமுடியாதென்றும் உரைத்து, 'நீ என் அன்னைக்குச் சமானம்' என்று அவளை நமஸ்கரித்தார். அவ்வம்மை யும் தன் புருஷனது உள்ளக்கருத்தை உணர்ந்து அவருக்கு சுசுரூஷை செய்துக்கொண்டு சிஷ்யையாய் இருக்க அநுமதி யருளுமாறு வேண்ட, அவர் மிக்க யோசித்துக் கடைசியில் சம்மதித்து அவ்வம்மை கோரியவாறு அங்கீகரித்தருளினார். அதுமுதல் அவ்வம்மை தன் கணவன் அருகிலேயே இருந்து சமீபத்திலுள்ள காளியாலயத்தில் நிவாசம் பண்ணிக்கொண்டு அவருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்துகொண்டும் அவர் உபதேசித்தருளியவாறு நடந்துகொண்டும் பக்தியோகத்தில் காலத்தைக் கழித்துவந்தாள். ஒருநாள் மதுரா நாதன் அவ்வம்மைக்குப் பதினாயிரம் ரூபாய் கொடுக்க வந்தபொழுது அவ்வம்மை அதனை யேற்காது தன் புருஷன் ஆசாபாசங்களை யறுத்தெறிந்து இம்மை யின்பங்களை வெறுத்து ஞானியாய் விளங்குகின்றாரென்றும், தானும் தன் கணவன் செல்லும் மார்க்கத்திலேயே செல்லவேண்டுமாதலால் தானும் அவ்வாறே பிரபஞ்சசுகங்களில் விரக்தியடைந்திருப்பதாயும் விடையளித்தனள். அவ்வம்மை தன் கணவனைப் பகவானது அவதாரமாகப் பாவித்து அவரது உபதேசங்களை மறவாது தன் கணவனைப்போலவே ஞானச் செல்வம் பெற்று பக்தகோடிகளின் கௌரவத்துக்குப் பாத்திரமாகி இப்பொழுது காச்மீரத்தில் வாழ்ந்துவருகின்றாள்.

இராமகிருஷ்ணர் கல்விமானா யில்லாதிருந்தும் சிறந்த புத்திமானா யிருந்தமையால் தாம் ஒருமுறை கேட்டதை என்றும் மறவாமல் ஞாபகத்தில்வைத்துக்கொள்ளும் வல்லமை வாய்ந்தவராயிருந்தார். அவர் ஒருநாள் அத்தியாத்ம ராமாயணத்தை சிரவணஞ் செய்ய விரும்பித் தமது சிஷ்யர்களுள் ஒருவரை அதைப் படிக்குமாறு நியமித்துத் தாம் கேட்டுக்கொண்டிருக்கையில் மற்றொரு சிஷ்யன் அவரை நோக்கி "வடமொழிப் பயிற்சி சிறிதேனு மில்லாத உமக்கு இந்நூல் எவ்வாறு அர்த்தமாகும்?" என்று வினவ, அவர் அந்நூலை அதற்குமுன் ஒருமுறை கேட்டிருப்பதாயும் அதை மீண்டும் கேட்கும் பொருட்டுப் படிக்கச் சொன்னதாகவும் உரைத்து அந்நூலின் ஸாராம்சம் அவ்வளவையும் சிறிதும் பிசகாமல் கூறினார்.

இராமகிருஷ்ணர் யோகாப்பியாசத்தால் உத்தம யோகசக்திகள் பெற்றிருந்தும் அம்மகிமைகளை இதரர்களுக்குக் காட்டி அவர்களால் புகழப்படவேண்டுமென்னும் விருப்பம் அவருக்கில்லை. யோகாப்பியாசத்தால் அஷ்டமாசித்திகளும் கைகூடுமென்பது உண்மையே யெனினும் தாம் உபதேசித்த யோகரஹஸ்யங்களால் ஸித்திக்கும் மகிமைகளைப் பிறர்களுக்குக் காட்டி அவர்களது புகழ்ச்சியை நாடவேண்டா மென்றும், யோகாப்பியாசம் செய்வது ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தை யெய்துவதற்கே யன்றி ஜனங்களுக்கு விநோதத்தை யுண்டாக்கும் பொருட்டன்றெனவும் அவர் தமது சிஷ்யர்களுக்குப் போதித்தார். மற்று, அற்புதஸித்திகளைச்

செய்யும் சக்தியானது யோகியின் முக்கிய உத்தேசமாகிய ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தினின்றும் அவன் மனதை விலக்கி விஷயாந்தரங்களில் புகச்செய்கிறமையால் பரிபூரணாநந்த மடைவதற்குப் பெரும் இடையூறாய் நிற்கின்றது. ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்றவர்கள் அவருக்கு மனக்கருத்தை யறிந்துரைத்தல், வருங்காலசம்பவ முரைத்தல், தூரதேச சமாசாரங்களை இருந்தவிடத்திலிருந்தே யறிந்து சொல்லுதல், இச்சாமாத்திரத்தால் வியாதிஸ்தர்களைச் சொஸ்த மாக்குதல் முதலிய சக்திகள் இருந்தன வென்பதை எண்ணிறந்த திருஷ்டாந்தங்களாற் கண்டார்கள். இராமகிருஷ்ணர் யோகாப்பியாஸத்தால் அடைந்த மகிமைகளுள் ஒன்றுமாத்திரம் ஜனங்களுக்கு வெளிப்படையாய்க் காணப்பட்டது. அஃதென்னவெனில், அவரைப் பார்க்க வருபவர்களுள் எவரையேனும் அவர் தொட்டமாத்திரத்தில் அவ்வாறு தொடப்பட்டவனுக்கு ஈஸ்வரத்தியான பரவசத்துவம் கைகூடுவதாயிருந்தது. அவ்வாறு அவரால் ஸ்பரிசிக்கப்பெற்றவர்களுட் சிலர் உலக வின்பங்களைத் துறந்து வைராக்கிய வாழ்க்கையினை யவலம்பித்தனர்.

இச்சமயத்தில் மதுராநாதன் பரதகண்டத்திலுள்ள பிரசித்தமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குக் குடும்பசமேதமாய் யாத்திரைசெய்ய புறப்பட்டுத் தன்னுடன் இராமகிருஷ்ணரையும் அழைத்துச்சென்றான். அவர் பிருந்தாவனம் முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கேகி அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி மூர்த்திகளைத் தரி

சித்து அங்கங்குள்ள மஹநீயர்களைக் கண்டு அவர்களுடன் சம்பாஷணைகள் புரிந்து காசிக்ஷேத்திரத்தில் த்ரைலிங்க ஸ்வாமிகளையும் பிருந்தாவனத்தில் கங்காமாதாவெனும் மகா யோகினியையுங் கண்டு அவர்களுடன் வேதாந்த விசாரம் செய்தார். இவ்வண்ணம் இராமகிருஷ்ணர் கண்டு சம்பாஷித்த சாதுக்கள் அனைவரும் அவருக்குப் பிரஹ்ம ஞானிகளுக்குள் அதி உத்தமமான பதவியை யளித்து அவரைப் பிரமஞானச்செல்வனெனப் புகழ்ந்து அதனோடும் திர்ப்தி யடையாராகி அவரை ஓர் உத்தம ஆசாரியரென்றும், ஈஸ்வராவதாரமென்றுங் கொண்டாடினார்கள். அவர் பிருந்தாவனத்தில் இருக்குங்காலையில் அங்குள்ள மகிமைகளைக் கண்டு வியந்து அங்கேயே நிரந்தரமாய் வசிக்க எண்ணங்கொண்டாரெனினும் தாம் முன்னறி தெய்வமாகக்கொண்ட தமது வயோதிகையான அன்னையைக் காண விரும்பி தாம் பிறந்த ஊருக்குத் திரும்பிச் சென்றார். வருகிற வழியில் வைத்தியநாத க்ஷேத்திரத்திற் கருகிலுள்ள ஒரு குக்கிராமத்தைக் கண்டு, அங்குள்ளவர்கள் ஏழ்மையால் வருந்துவதைப்பார்த்துத் துயரமுற்றுஅவ்வூரார து கஷ்டத்தை நிவிர்த்தித்தாலன்றி அவ்விடத்தைவிட்டு ஊருக்குப்போக தமக்கிஷ்ட மில்லையென்று மதுராநாதனுடன் சொல்லி அவன்மூலமாய் அவர்களுக்குச் சில தினங்கள் வரையில் அந்நவஸ்திரங்கள் வழங்கிக் கொஞ்சம் திரவியமும் கொடுப்பித்துப் பின்னர் மதுராநாதனுடன் ஊர்வந்து சேர்ந்தார்.

"மந்தமாய் வீசும் காலையிளங்காற்றால் மலர்ந்த மலர்களினிடம் தேனைப் பருகும்பொருட்டு வண்டு

கள் செல்லுமேயன்றி தேனைப் பருக விருப்பங்கொண்ட வண்டுகளினிடம் மலர்கள் வாரா"வென்று இராமகிருஷ்ணர் கூறிய வாக்கியத்திற் கநுகுணமாய் அவரைத் தரிசித்து அவரருளால் பிரஹ்மஞானோபதேசம் பெற விரும்பி தக்ஷிணேஸ்வரத்துக்கு அவரைப் பார்க்க வந்தவர்களை யெல்லாம் அவர் ஆதரித்து அவரவர்களது பக்குவநிலைக்கேற்ப ஞானோபதேசம் செய்து வந்தார். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணரண்டை வந்த மஹரிஷியர்களுள் பிரஹ்மஞான ஸம்பந்நர்களாகிய மஹாயோகிகள் கூட இக்கல்வியற்ற பரமஹம்ஸரை ஓதாதுணர்ந்த உயர்ஞானியெனக்கருதி, இவரது ஜிதேந்திரியத்தன்மையையும், அஹங்கார மின்மையையும், ஸர்வஸமத்வத்தையுங் கண்டு வியந்து ஆடம்பரரஹிதமான அவரது உபதேசமொழிகளை மிக்க ஆவலுடனும் அன்புடனும் கேட்டு அவரைத் தமக்கு உபதேசகுருவாகக் கருதினார்கள். இராமகிருஷ்ணரது மகிமையை மஹரிஷியர்கள் அறிந்திருந்தும் பிரஹ்ம ஸமாஜத்தின் உபாசாரியரும் பாரதவர்ஷீய பிராஹ்ம ஸமாஜத் தலைவரும் நவவிதான (New Dispensation) ஸம்பிரதாயப் பிரவர்த்தகருமான ஸ்ரீ கேசவசந்திரஸேநர் இவரைப்பார்த்து இவர் பிரஹ்மஞாணியென்றும் பரமஹம்ஸரென்றும் சொல்வதற்குமுன் இவரைப்பற்றி கல்கத்தாவாஸிகளுக்குக்கூடத் தெரியாமலிருந்தது. கேசவசந்திரஸேநர் 'பல்கேரியா' எனும் உத்தியான மாளிகையில் 1866-ம் வருஷத்தில் பக்தியோக பரவசராய்க் காலங்கழித்து வருகையில் அவரது தெய்வபக்தியைக் கேள்வியுற்ற இராமகிருஷ்ணர் ஒருநாள் அவரைப் பார்க்கச்

சென்றார். கேசவசந்திரஸேநர் அவரைக் கண்டவுடனே பிரஹ்மஞானியெனத் தெரிந்துகொண்டு அவரது உபதேச மொழிகளைக் கேட்டு களிப்படைந்தார். அன்றுமுதல் அவர் இராமகிருஷ்ணரது ஆசிரமத்துக்குச்சென்று பிரதிதினமும் அவர் உபதேசிக்கும் வாக்கியங்களைக் கேட்டு அவரைத் தமது குருவாய்க் கருதினார். இராமகிருஷ்ணர் ஸமாதிநிஷ்டையி லிருக்கும்பொழுது கேசவசந்திரர் அவரது திருவடிகளைத் தம் தலையின்மேல் வைத்துக்கொண்டாநந்திப்பார். ஒரு சமயம் அவரைத் தம் அகத்துக் கழைத்துக்கொண்டு போய் இருவரும் ஒரு படகில் ஏறிக் கங்காநதியில் செல்லுங்கால் கேசவசந்திரர் இராமகிருஷ்ணருடன் வேதாந்த விசாரம் செய்வார். இவ்வாறு இவ்விருவர்களுக்குள் பரஸ்பரம் அன்பு மேலிட்டது. இம்மகானுடைய ஸத்ஸங்க மகிமையால் கேசவசந்திரர் பக்திமார்க்கத்தில் அதிபக்குவ நிலையை யடைந்து தாம் அதுவரையில் பிரசரித்துவந்த பிராஹ்ம மத ஸித்தாந்தங்களுள் சிலவற்றை மாற்றி பக்திப் பிரதாநமான ஒரு நூதன பரிசுத்தாஸ்திகமத ஸித்தாந்தத்தை 'நவவிதாநம்' என்னும் பெயரால் ஸ்தாபித்து அதனைப் பிரவசனஞ்செய்யு மாசாரியரானார்.

கேசவ சந்திர ஸேநர் வெளிப்படுத்திய இராமகிருஷ்ணரது உபதேசவாக்கியங்களின் மூலமாய் ஜனங்களுக்குப் பரமஹம்ஸரிடத்தில் அதிக கௌரவ புத்தியுண்டாகவே அநேகர் அவரது வாக்கியங்களைக் கேட்கும்பொருட்டு அவரது ஆசிரமம் சென்றார்கள். இவ்

வாறு பரமஹம்ஸரிடத்தில் தினந்தோறும் கற்றோரும் மற்றோரும் மாதர்களுங்கூட ஆயிரக்கணக்காய்ச் சென்று அவரைத் தரிசித்து அவரது போதனைவாக்கியங்களை உள்ளன்புடன் கேட்டுவந்தார்கள். இராமகிருஷ்ணரும் தம்மைப்பார்க்க வந்தவர்களுடன் உதயம் முதல் அஸ்தமனம் வரையில் வேதாந்தவிசாரம் பண்ணி இரவிலும் தம்மைப் பார்க்கவந்தவர்களை மிக்க ஆதரவுடன் உபசரித்து அவர்களுக்கு பிரஹ்மவித்தையை உபதேசித்து வந்தார். இராமகிருஷ்ணர் தமது சரீரசௌக்கியத்தையுங்கூடப்பாராட்டாது இவ்வண்ணம் அல்லும் பகலும் பக்தியோகத்தைப் பற்றியும் ஞானயோகத்தைப் பற்றியும் ஜனங்களுக் குபதேசித்து யோகாப்பியாசத்தில் தாம் பட்ட கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டிருப்பார். இவ்வாறு தம் சரீரசவுக்கியத்தைச் சிறிதும் கவனிக்காமல் உழைத்து வந்தமையால் அவர் நோயால் வருந்தும்படி நேர்ந்தும் அதைச் சிறிதேனும் லக்ஷியஞ் செய்யாது தாம் எத்துணைத் துன்பங்களுக்கும் கூற்றுவனுக்குங்கூட உட்பட்டாயினும் ஒருவனையாவது ஸன்மார்க்கத்துக்குத் திருப்பி அவனுக்குப் பிரஹ்ம ஞானோபதேசஞ் செய்தாராயின் அதுவே தாம் ஜன்மம் எடுத்ததற்குச் சிறந்த பயனெனக் கூறுவார்.

1885-ம் வருஷத்தின் ஆரம்பத்தில் இராமகிருஷ்ணரது சரீரத்தில் ஒருபிரமாதமான நோய் தோன்றியது. கல்கத்தாவிலுள்ள மஹேந்திரலால் ஸர்க்கார் முதலிய சிறந்த வைத்தியர்கள் வெகுஜாக்கிரதையாய்ச் சிகிச்சை செய்து, இதரர்களுடன் பேசி சரீரத்திற்கு அயர்ச்சி

உண்டுபண்ணிக் கொள்ளவேண்டாமென்று எவ்வளவு சொல்லியும் அவர் கேளாது தம்மை அதிக பக்தியுடன் காணவந்தவர்களை ஆதரித்து உரையாடாமலிருப்பது உசிதமல்லவெனக் கருதி அவர்களுக்கெப்பொழுதும் போல் வேதாந்தோபதேசம் செய்து கொண்டிருந்தார். அவர் நோயாளியாயிருக்கும் தம்மைக் காண வந்தவர்களுக்கு உபதேசவாக்கியங்களைப் போதித்தும், ஸமாதிநிஷ்டராகிப் புலன்களின் தொழிலை யடக்கி நிச்சலநிலையில் இருந்தும், மறுபடியும் ஸமாதியிலிருந்து கண்விழித்து எப்பொழுதும்போலவே தம் சரீர சௌக்கியத்தையாவது நோயாலுண்டாகும் வருத்தத்தையாவது சிறிதும் பாராட்டாமல் அல்லும் பகலும் வேதாந்தோபதேசம் செய்துகொண்டிருந்தார். சிலநாட்களுக்குள் அவரது தேகவலிமை குன்றிப் பேசவும் சக்தியற்றிருந்தும், எவ்விதமாயினும் ஜனங்களுக்குபதேசம் செய்துகொண்டே இருந்தார். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணர் பரோபகார சீலராய்த் தம் தேக சௌக்கியத்தைக் கொஞ்சமேனும் பாராட்டாமல் சக்தி வஞ்சனையின்றி ஜனங்களுக்கு ஞானோபதேசஞ்செய்து அவர்களுக்குப் பிரஹ்மஞானச் செல்வம் கைகூடுமாறு அருள்புரிந்து ஜிதேந்திரியராய்க் கீர்த்தியோங்க அநுபவியாய் விளங்கி 1886-௵ ஆகஸ்ட்மீ 16௳ இரவு பத்துமணிக்கு ஸமாதியிற் சேர்ந்து பரபிரஹ்மத்தில் இரண்டறக் கலந்தனர். அச்சமயத்தில் அவரது சிஷ்யர்கள் அவர் எப்பொழுதும்போல் சாதாரண ஸமாதியில் வீற்றிருக்கின்றாரெனக்கருதி சிறிதுநேரம் சும்மாவிருந்தார்கள். ஆனால் அம்மஹாபுருஷன் ஸமாதியினி

ருந்து ஸமாதிமயமாயிருப்பதைக்கண்டு அவர் சாசுவத பிரஹ்ம பதவியை யடைந்துவிட்டாரெனப் பின்னர் அறிந்துகொண்டனர்.

இராமகிருஷ்ணர் ஆசாபாசங்களை யறுத்தெறிந்து இந்திரியங்களை வென்று பணம் என்ற பேச்சு கூடத் தன் மனதிற் புகவொட்டாது பொன்னை வெள்ளியைப் பரிசிக்காது துயிலிலுள்ள சமயத்திற்கூட அவ்வுலோஹங்களின் பரிசம் உண்டான மாத்திரத்திலேயே நடுக்கங்கொண்டு பயப்பிராந்தராகியும் பின்னர் சிலகாலம் இரும்பு முதலான உலோஹங்களைக்கூடத் தொடாமலும் நியமத்திலிருந்தார்.

இவர் கேவலம் மனிதரூபமாயவதரித்த பரமேஸ்வரனே யென்பதற்கு எட்டுணையும் ஸம்சயமே யில்லை. இவர் ஸாதாரண விவகாரநிலையில் ஸர்வ ஸமத்துவத்தோடு விளங்கி தாம் அனைவருக்கும் தாஸனென்று கூறி அஹம்பாவத்தை யொழித்திருந்தார். பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பாரமார்த்திகத்தில் பேதமில்லையென்று பூர்ணமாயறிந்து ஜனங்களனைவரையும் ஈசுவர ஸ்வரூபங்களாக மதித்துத் தாம் உபதேசகனெனவும் குருவெனவும் மற்றையோர் மொழிவதைக்கூட அங்கீகரியாதாராகி, தாம் ஒரு ஸாமாந்ய மனிதனென்றும் அனைவர்க்கும் தாஸாநுதாஸன் என்றும். கூறித் தமது சிஷ்யர்களுடையவும் மற்றையோர்களுடையவும் பாததூளியைத் தந்தலைமேற்கொள்வார். ஆனால் அவருக்கு சமாதியில் ப்ரஹ்ம ஸாக்ஷாத்கார மாகும்பொழுது தமக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லை யென

உணர்ந்து தாமே பரப்பிரஹ்மமென்றும் தாமே ஸர்வஜ்ஞரென்றும் ஸர்வசக்தரென்றும் ஸ்ரீராம ஸ்ரீகிருஷ்ண புத்த கிறிஸ்து முதலிய மஹாபுருஷரது அம்சமே தமது அம்சமென்றும் அவர்களுக்குந் தமக்கும் பேதமில்லையென்றும் பிரசங்கிப்பார். இராமகிருஷ்ணரது பெருமையை ஜனங்கள் அறிந்ததற்கு முன்னமேயே அவர் தமக்கு அநேக சிஷ்யர்கள் உளர் என்றும், அவர்களையெல்லாம் இன்னார் இன்னாரென்று அப்பொழுதே தமக்குத் தெரியுமென்றும், தாம் ஜன்ம கர்மங்க ளற்றவரென்றும், கேவலம் பரப்பிரஹ்மமேயென்றும், தாஞ்செய்துகொண்டுவரும் கர்மங்களைத்தம் பாமரர்களை மகிழ்வித்து அவர்களுக்கு பக்திமார்க்கத்தைக் காட்டும்பொருட்டு உதவும் ஸாதனங்களேயென்றும் தாம் நித்திய முக்தரென்றும் இதற்குமுன்னமே மதுராநாதனுடன் சொல்லி யிருந்தனராம். ஊஷ்மாண்டக்கு (பூசிணிக்காய்) க்கு முதலில் பிஞ்சுவிட்டு பின்னர் பூக்கள் அரும்புவதுபோல நித்திய முக்தனுக்கு முதலில் பிரஹ்ம ஞானோதயமாகிப் பின்னர் பிறர்க்குபதேசம் செய்யும்பொருட்டு சாதனங்கள் கைகூடுமென்றும் இராமகிருஷ்ணர் தம் சிஷ்யர்களுக்குச் சொல்வதுண்டு.

இராமகிருஷ்ணர் ஸமாதியிலிருந்த காலத்தில் வெளிப்புலன்களின் தொழிலை முற்றும் ஒழித்திருந்தார். அவர் ஒருநாள் ஸமாதியிலுள்ள காலையில் தமது அக்கி குண்டத்தில் தற்செயலாய் விழுந்து சரீரம் கொளுந்தப்பெற்று, இந்திரிய வியாபாரங்களை யொழித்

திருந்தமையால், அக்கி பாதகத்தைச் சிறிது முணரா மல் ஸமாதியினின்று விழித்துக்கொண்ட பின்னர் மிக்க வருந்தினார். மற்றொரு சமயத்தில் இராமகிருஷ்ணர் அஜாக்கிரதையால் தரையில் விழுந்து கையில் அபாய மான காயம் உண்டாக்கிக் கொண்டார். அக்காயத்தைப் போக்குவதற்காக வைத்தியர்கள் அவருக்கு வைத்தி யம் செய்து அக்கையால் யாதொன்றும் செய்யவேண் டாமென்று அவர்கள் எவ்வளவு சொல்லியும், தெய்வ சம்பந்தமான தொனிகள் அவர் செவியிற் பட்டவுடன் அவர் ஸமாதி நிஷ்டராகி கையிற் காயம் பட்டதென் றுணராது அதற்கு வைத்தியம் செய்துகொண் டிருந்தார் களென் றுணராது உணர்ச்சியின்றி மறுபடியும் கையில் காயம் பண்ணிக்கொண்டு, இப்படி இச்சிறிய புண்களை ஆற்றிக் கொள்வதிலேயே ஆறுமாசங் கழித்தார்.

வருஷமொன்றுக்கு இருபத்தையாயிரம் ரூபாய் வருமானமுள்ள சொத்தையும் தக்ஷிணேசுவரத் தோ ட்டத்தையும் என் நன்றியறிதலுக் கறிகுறியான குரு தக்ஷிணையா யளிக்கிறேன், திருவுள்ளம் பற்றவேண்டு மென மதுராநாதன் அவரைப் பன்முறை பிரார்த்தித் தும் இராமகிருஷ்ணர் அதை யேற்காது, நீ இன்னொரு தடவை இவ்வுத்தியானத்தை ஏற்றுக்கொள்ள வேண் டுமென்று கூறுவையேயாயின் நான் இவ்விடத்தை விட்டுப் போய்விடுவேன் என்றார். மற்றொரு சமயத் தில் ஒரு தனவான் இராமகிருஷ்ணருக்கு இருபத் தையாயிரம் ரூபாய் கொடுக்கவர அவர் அம்மொழி யைக் கேட்டமாத்திரத்தில் நடுக்கங்கொண்டு கண்ணீர்

ஆறுய்ப்பெருக அழத்தொடங்கினர். ஜிதேந்திரியரும் பிரஹ்மஞான ஸம்பந்நருமான இப் பரமஹம்ஸோத் தமருக்குப் பொருளாசை யில்லாமலிருப்பது சகஜந் தானே. கல்கதாவில் இப்பொழுதும் வெகு பிரசித்த மாய், துறவிகளுக்குக்கூட அவாவை யுண்டாக்கக்கூடிய இவ்விலையற்ற தக்ஷிணேசுவர ஆராமத்தை ஸ்ரீராம கிருஷ்ணர் ஒரு திருணமாய் மதித்தனர் என்ற இவ் வொரு விஷயமே அவரது ஒப்பற்ற ஜிதேந்திரியத் தன்மையையும், அவாவின்மையையும் உத்தமஞானச் செல்வத்தையும் ஆயிரம் நாவால் உத்கோஷிக்கின்றது.

ஸ்ரீ ராமகிருஷ்ணரது சிஷ்யர்களுட் சிறந்த கல்வி மானும், வேதாந்த சாஸ்திர பாரங்கதராயும், ஸர்வ ஸமராயும், பரோபகார தற்பரராயும், ஸந்நியாஸியாயும் 'திக்கொடு திகந்தங்களிலும்' பரவிய கீர்த்தியுடன் விளங்கி, பரதகண்ட நிவாஸிகளாகிய ஹிந்து மதாபிமா னிகளின் உள்ளங்களை முடிசூடா மன்னராய் ஆண்டு பூர்வபச்சிமகண்டங்களிலுள்ள ஜனங்களுக்குங்கூட ஹிந்து மதாபிமானத்தை யுண்டாக்கி, வேதாந்தத்தில் பரதகண்டம் அடைந்துள்ள மஹோந்நத நிலைமையை யும் பாரதவர்ஷ ஸநாதந தர்மத்தின் மேன்மையையும் விளக்கும் பிரசங்கமாரி பொழிந்து, அத்யாத்ம தா...க் தால் வருந்திய அசேஷ ஜீவகோடிகளுக்கு சாந்தியளித் துத் தாமும் சமீபத்தில் நிரதிசயாநந்த ஸாம்ராஜ்ய பத வியை யடைந்த ஸ்ரீமத் விவேகாநந்த ஸ்வாமிகளே ஸ்ரீரா மகிருஷ்ணரின் அத்தியாத்ம பிரபாவத்துக்குச் சிறந்த சான்றாய் நிற்கின்றார். ஆங்கிலக் கல்விப்பயிற்சியாற்

சிறிது பிரகிருதி நூலுணர்ச்சி வாய்ந்த நம்மவருட்பலர் இராமகிருஷ்ணரது மகிமையைப்பற்றி மேல் எழுதப்பட்டவை யாவும் ஒரு கல்பனைக்கதையெனக் கருதக் கூடுமாயினும், கேஸவசந்திரஸேநர் பிரதாப சந்திர முஜும்தார் முதலிய நவீனமஹான்கள் இம்மகா புருஷரது பிரஹ்மஞான சம்பத்தையும் பெருமையையும்பற்றி வரைந்துள்ளவற்று லாயினும் இஃதவ்வளவும் வெறுங் கற்பனையெனக் கருதாரென்று நம்புகின்றோம். யோகாப்பியாஸத்தால் அபாரசக்திகளைப் பெறுவது கடினமாயினும் அஸாத்தியமன்று, பிரகிருதி சாஸ்திரத்திற்கு விரோதமுமன்று. மாநுடர்களுள் மகாத்மாக்கள் எத்தனையோபேர் உளர் என்பதற்கு எட்டுணையும் சந்தேகமில்லை.

யதா யதா ஹி தர்மஸ்ய
ஸம்பவாமி யுகே யுகே |

என்கிற கீதா வாக்கியத்தின்படி ஸ்ரீராமகிருஷ்ணரைப்போன்ற மகாபுருஷ ரூபமாய் பகவான் அவ்வக் காலத்தில் அவதரித்து ஜனங்களுக்கு ஞானோபதேசம் செய்து வருகின்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் பத்தினியாகிய ஸ்ரீமதி சாரதாமணி தேவி இப்பொழுதும் காஸ்மீர தேசத்தில் ஸ்ரீநகரத்தில் யோகினியாய் விளங்குகின்றார்கள். அமெரிகாகண்ட நிவாஸினியாகிய Mrs. S. G. ஒல் புல் லென்னும் ஒரு ஹைணமாது ஹிந்து மதாபிமானியாகி நமது தேசத்தில் யாத்திரைசெய்து ஸ்ரீநகரத்தில் மேற்

சொல்லிய தேவியாரைத் தரிசித்து அவரால் கௌரவிக்கப்பெற்று குருபக்தியைப்பற்றி அவ்வம்மையால் உபதேசிக்கப் பெற்றாள். ஸ்ரீ சாரதாமணி தேவியார் இப்பொழுதும் தம் பர்த்தாவாகிய இராமகிருஷ்ணரைத் தெய்வமாகவும் குருவாகவும் கருதி அவரிடத்து அதிக பக்தி விசுவாசங்களுடன் காலத்தைக் கழித்து வருகின்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கல்வியில் தேர்ந்தவர் அல்லர். அவருக்கு வடமொழிப் பயிற்சி சிறிதேனும் கிடையாது. தமது தாய்மொழியாகிய வங்க பாஷையிலும் அவர் போதுமான பாண்டித்திய மடையவில்லை. ஆயினும் அவர் மகாத்மா என்று சொல்வதற்கு எவ்வளவும் சந்தேகமில்லை. கல்விமணம் இல்லாதவர்களுக்குக் கூட பூர்வஜன்ம சுகிர்தத்தாலும் ஈசன்திருவருளாலும் ஸம்பூர்ணப் பிரஹ்ம ஞானம் உண்டாவது திண்ணம்.

> யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்
> தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ||

அதாவது

> "பகவான் எவனுக் கருள் புரியவேண்டுமென்று ஸங்கல்பிக்கின்றாரோ அவன்தான் அவரை அடைவன். அவனுக்குத்தான் அவர் தம் ஸ்வரூபத்தைக் காட்டுகின்றார்."

என்று மறைகள் பறைசாற்ற வில்லையா?

---

𑌓𑌂 𑌨𑌮𑍋 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌰𑌾𑌮𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯

இரண்டாம் பாகம்.

# ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்.

[ஸங்க்ரஹம்.]

ஸ்ரீம—என்கிற பகவத் பக்தர்
திருவாய்மலர்ந்தருளியது.

(1885௵ அக்டோபர்௴ 27௳ மங்களவாரம்)

[ஸ்ரீ ராமகிருஷ்ணர், நரேந்திரன் (விவேகாநந்தர்) முதலிய சிஷ்யர்களுடன் வீற்றிருக்கை; கல்கத்தாவைச் சேர்ந்த சியாம்புகரில் பரமஹம்ஸர் வியாதிஸ்தராயிருக்க, டாக்டர் மஹேந்திரலால் ஸர்க்கார் முதலிய வைத்தியர்கள் சிகிச்சைசெய்தல்.]

## முதல் அத்தியாயம்.

அப்பொழுது மாலை சுமார் அஞ்சரைமணியிருக்கும். சில நாட்களுக்கு முன்புதான துர்க்கா பூஜையெனும் மஹோத்ஸவம் விசேஷ வைபவமாய் நடந்தேறிற்று. ஆனால் பரமஹம்ஸரது சிஷ்யர்களுக்கு மாத்திரம் அவ்வுத்ஸவத்தை மனதார அநுபவிக்க மிகக் கஷ்டமாயிருந்தது. தங்கள் பிரபு கோரமான வியாதியால் வருந்திக்கொண்டிருக்கையில் அவர்கள் எவ்வாறு உத்ஸவம் கொண்டாடுவார்கள்? அவருக்குக் கண்டிருந்த வியாதி தொண்டைப்பிளவை. இதை மனித

னுக்குத் தெரிந்த மருந்துகளால் நிவாரணமாக்குவது அசாத்தியமென்று இங்கிலீஷ் வைத்தியத்தில் தேர்ந்த டாக்டர் மஹேந்திரலால் ஸர்க்கார் குறிப்பாய்ச் சொல்லியிருந்தார். பரமஹம்ஸர் சாதாரணமாய் வலித்து வந்த தக்ஷிணசுவரமானது கல்கத்தா வைத்தியர்கள் சுலபமாய்ப் போய்வரும்படியான ஸமீபத்தி லில்லை. ஆகையால் சென்ற மூன்றுமாதகாலமாய்ப் பிரபு சியாம புகுரில் வாஸம்செய்துகொண்டு டாக்டர் ஸர்க்காரிடம் வைத்தியம் பார்த்துக்கொண்டிருக்கிறார். டாக்டர் குறிப்பாய்ச் சொன்ன விஷயம் சிஷ்யர்களுக்குப் பெருந் துயரத்தை விளைப்பதாயிற்று. நம்மை யிவ்விரிந்த வுலகில் நிர்க்கதியாய்த் தன்னந்தனியே விட்டுவிட்டுப் பிரபு போய்விடுவாரோ என்று ஏங்கினார்கள். அவருடன் இடைவிடாமல் ஒன்றன்பின் ஒன்றாய் ஆநந்தமாகக் கழித்த நாட்களெல்லாம் இனி முடிவுபெறுமே என்று எண்ணுந்தோறும் அவர்களுக்கு துக்கம் மேலிட்டது. அவர்கள் ஏகாந்தத்தில் கண்ணீர் வடித்துக் கரையலானார்கள். இனி அவர் பிழைப்பது அரிது என்று தெரிந்தும் அவரிடத்தில் வைத்த விசுவாஸத்தால், அவர் வியாதி சொஸ்தமாகி முன்போல் ஆரோக்கியமா யிருக்க வருள்புரியுமாறு பகவானைப் பிரார்த்தித்தார்கள். அவர்கள் அவருக்குத் திரிகரணங்களாலும் சுசுரூஷை புரிந்து அல்லும் பகலும் சகலவிதங்களாலும் உபசரித்து வந்தார்கள். ஸ்வப்ரயோஜனம் என்பதைச் சிறிதும் கருதாமல் அவர்கள் பிரபுவின் விஷயத்திற்செய்த சுசுரூஷையானது நரேந்திரநாதனை (விவேகாநந்தர்) த் தலைமையாகக்கொண்ட பாலிய சிஷ்யர்கள் பின்னர்ப்

பெருந்துறவுபூண்டு உத்தம ஸந்நியாஸிகளாய் விளங்கு வதற்குக் காரணமாய் நின்றது. பகவானையே பரமகதி யென்று நம்பி அவன் பொருட்டு உலகத்தையும் அதன் போலிச் சுகங்களையுந் துறந்து, பரமசாந்தமூர்த்தியாய், உருவெடுத்த வைராக்கியமென விளங்கும் பிரபுவைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டபிறகும் அவர்கள் ஸம்ஸார ஸுகங்களை விரும்பி அவற்றை நுகர்வரோ?

அவர் அவ்வளவு சுகவீனமான ஸ்திதியிலிருந்தும், அந்த மஹாநுபாவனைச் சிறிதுபார்த்தாலும் போதுமென்று ஜனங்கள் திரள்திரளாய் அவருடைய தர்சநத்துக்காக வந்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஸந்நிதானத்துக்கு வந்த மாத்திரத்தாலேயே சாந்தியும் ஆநந்தமும் உண்டாகுமென்பது அவர்களுடைய உறுதியான நம்பிக்கை. 'ஆ! என்ன அன்பு! என்ன கருணை!' என்று ஒருவர் தப்பாமல் யாவரும் சொல்லிக்கொண்டவண்ணமாயிருந்தார்கள். பொறுக்க முடியாத சரீரவேதனை அவருக்குண்டாயிருந்த காலத்திலும், தம்மைப் பார்க்கவந்தவர்களுள் கடையில் கடையவனானவனுக்குங் கூட,—அவனும் அருள்பெற்று கதியடைய வேண்டுமென்ற பரமகருணையால்— அவர் பகவானைப்பற்றியும், தம்மை யாட்கொண்ட ஜகந்மாதாவைப்பற்றியும் பேசுவார். கடைசியாக, அவரை வந்து பார்த்து அவருடன் பேச்சு கொடுக்கும்படி ஜனங்களை உள்ளே விடக்கூடாதென்று வைத்தியர்கள்—முக்கியமாக டாக்டர் ஸர்க்கார்—அவர் சிஷ்யர்களுக்குக் கண்டிதமாய்த் திட்டம் செய்தார்கள். டாக்டர் ஸர்க்

கர் மாத்திரம் வெகுநேரம் அவரிடத்தில் தங்கியிருந்து, அவருடன் "ஜாக்கிரதை, ஒருவரோடும் பேசவேண்டாம். என் விஷயத்தில் மாத்திரம் தேவர் அந்த நியமத்தைப் பாராட்டாமல் எவ்வளவு நேரமானாலும் பேசிக்கொண்டிருக்கலாம்" என்று சொல்வார். பிரபுவினுடைய வாக்கத்தியமும் அவரது திருவாயினின்று பெருகும் 'தேனினும் இனிய' அமிர்த வசனங்களும் டாக்டரை அவ்வளவு பரவசப்படுத்திவிட்டன.

இந்த ஸமயத்தில் விவேகானந்தரும் டாக்டரும் மாத்திரமேயன்றி வங்காளமெங்கும் பிரசித்த நாடகாசிரியரும் கவியுமாகிய கிரீசகோஷ், டாக்டர் தோகோடி, நரேந்திரர் இளையவர், (இப்பொழுது ஹைகோர்ட்டு அட்டர்னி) ராகால், ம—முதலிய பலரும் அங்கே கூடியிருந்தார்கள்.

டாக்டர் கையைப்பிடித்துப் பார்த்து, சாப்பிடவேண்டிய மருந்துகளைச் சொன்னார். பிறகு வியாதியின் சுபாவத்தைப்பற்றிச் சிறிது நேரம் பேசியானதும், பிரபு ஔஷதம் உட்கொண்டார். டாக்டர் வீட்டுக்குப் போவதற்காக எழுந்து போயவைஷியிடம் பேசிக்கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணருடன் 'தேவருடன் பேச [illegible] இருப்பதால், நான் போய்வர நியமனம் ஆகிறதா?' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கீர்த்தனங்களைக் கேட்டு விட்டுப் போகலாமே?"

டாக்டர்: "ரொம்ப ஆசைதான். ஆனால் தேவர் அதிசயமாகப் பரவசமாகி மெய்மறந்து இப்படிப்படிக்குத்

தாட ஆரம்பித்துவிடுமே யென் றஞ்சுகிறேன். தேவரீர் கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்'' என்று சொல்லி டாக்டர் மறுபடியும் ஆஸநத்தி லமர்ந்தார். விவேகாநந்தர் தம்பூருக்கும் மிருதங்கத்துக்கும் இசைய தமது மதுரமான கண்டத் தொனியை யெடுத்துப் புங்காநுபுங்கமாய்ப் பாடத்தொடங்கினார்.

அவர் பாடியது :

ஸங்கீர்த்தநம்—ஈசனும் அவன் செயல்களும்.

1. முடிவில்லா மூர்த்தியே, நின்னால் படைக்கப்பட்ட பிரபஞ்சம் அதியத்புதம், அநந்தம். அகில ஸௌந்தர்ய நிலயமன்றோ அது!

2. பதினாயிரம் நக்ஷத்திரங்கள் ரத்நமிழைத்த காஞ்சநமாலையென இலங்குகின்றன. சந்திரர் எத்தனை! சூரியர் எத்தனை! அவற்றின் கணக்கு அளவுகடந்தது.

3. நிலமகள் தனதானியங்களாற் பொலிவுற்று விளங்குகின்றாள். நினது நிதி நிறைந்திருக்கின்றது. எமையாளுடை இறைவ, 'நன்று நினது செயல், நன்று' என்றிடைவிடாமற் புகழ்ந்துபாடும் தாராகணங்கள் எண்ணிறந்தன.

அவர் மீண்டும் பாடலுற்றார்:—

ஸங்கீர்த்தநம்:—காளி (ஜகந்மாதா.)

1. அம்பிகே, காடாந்தகாரத்தின் நடுவே, உருவங்கடந்த நினது ஸௌந்தர்யச் செல்வமாகிற தேஜோலஹரியானது பிரவஹிக்கின்றது. இவ்வாநந்த வெள

னத்தைப் பருகவன்றோ யோகிகள் கிரிகுஹைகளில் தவம் புரிகின்றனர்.

2. அநந்த அந்தகாரத்தின் மடியிலே மஹா நிர்வாண ஸாகரத்தின்மேற் படிந்துவரும் சாந்தியின் பரிமளம் இடை விடாமல் ஸதா வாஸிக்கின்றது.

3. அம்பிகே! ஸமாதியாகிய ஆலயத்திலே மஹா காளி யெனும் திருவுருவத்துடன் கிருஷ்ணாம்பர மணிந்து தனியே விளங்கும் நீ யாரோ விளம்பாய்! நினது பாத பத்மங்கள் எங்களுக்கு அபயமளித்துக் காக்கின்றன. நினது குழவிகளின்பால் நினக்குள்ள கருணை மின்னல் அத்திருவடிகளிலன்றோ ஒளிவீசி மின்னுகின்றது. நினது மஹா அட்டஹாஸமானது நின் சின்மய முக மண்டலத்திற் பிரகாசிக்கின்றது.

டாக்டர் (ம—வைநோக்கி): இவ்விதப்பாட்டு அவரது தேகஸ்திதிக்குக் கொஞ்சமேனும் சரிப்படாது. அது அவருக்குப் பரவசத்தையுண்டாக்கி விபரீதமாய் முடியும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம—வுடன்): என்ன சொல்லுகிறார் டாக்டர்?

ம:—இந்த ஸங்கீர்த்தநம் தேவரீரை மெய்மறக்கச் செய்து பாவ (ஹாவ) ஸமாதியை யுண்டாக்கிவிடுமோ வென்றஞ்சுகிறார் டாக்டர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (அஞ்ஜலிஹஸ்தராய் டாக்டருடன்) இல்லை, இல்லை, நான் ஏன் மெய்மறந்து போக வேண்டும்? எனக்கு உடம்பு ஒன்றுமில்லை, சொஸ்தமாயிருக்கிறது.

இவ்வாறு பேசிக்கொண் டிருக்கையிலேயே பிரபு நிர்விகல்ப ஸமாதியில் அமர்ந்து விட்டார். அவரது சரீரம் செயலற்று நின்றது; கண்கள் இமைகொட்டவில்லை; அவர் சிலாவிக்கிரகம்போல் பேச்சற்று உட்கார்ந்துவிட்டார். இந்திரிய ஞானமே இல்லாமற் போய் விட்டது. மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் எல்லாம் தத்தம் தொழிலை யொழித்து அந்தர்முகமாகி, ஜகதம்பிகையாகிய அவ்வேக வஸ்துவின்கண் லீநமாயின.

மறுபடியும் விவேகாநந்தரது திவ்யகண்டத்தினின்றும் இனிய காநாமிருதம் பிரவஹிக்க வாரம்பித்தது.

**ஸங்கீர்த்தநம்:—பகவானே என் பிராணநாதன்.**

1. ஆஹா! இஃதென்ன மநோஹரமான ஸௌந்தர்யம்! ஆஹா! எவ்வளவு ஸுந்தரமான முகமண்டலம்! என் இன்னுயிர்நேசன்! என் ஆத்மநாதன்! இதோ என் குடிலுக்கு வந்துவிட்டார்.

2. ஆஹா! என் காதல் வெள்ளம் கரை புரள்கின்றதே!

3. என் இன்னுயிர் நேசனே, அன்பின் வடிவே, அடியேன் நினக்களிக்கும்படியான செல்வமும் உளதோ? என் இருதயத்தை, என் மனத்தை, எனதெனச் சொல்லக்கூடிய வனைத்தையும் ஏற்றுக்கொள்ளாயோ? ஹே தயாளோ! என் எல்லாவுடைமையையும் அங்கீகருத்தருளாய்.

என்று மனமுருகப்பாடி மீண்டும் பாடலானார்:—

**ஸங்கீர்த்தநம்: பகவத் ஸம்பந்தமுள்ளதே ஸத்து, ஸாந்தர மானது; அஃதில்லாதது அஸத்து, விகாரமானது.**

1. கருணாகரக்கடவுளே, நினது சரணாம்புஜத்தில் ஆத்மவாகிய தேனீ ஸதா மொய்த்துக் கொண்டு மெய்ம்மறந்து பரவசமாயிராவிடில், இவ்வாழ்க்கையில் என்ன ஸுகம் இருக்கின்றது?

2. விலையில்லா மாணிக்கமாகிய நினைப்போற்றா விடில் கணக்கற்ற ரத்நராசிகளிருந்தும் பயனென்ன?

3. ஸுகுமாரனான குமாரனது முகத்தையும் யான் பார்க்க விரும்பேன், சந்திரனை நிகர்த்த அம்முகத்தில் அன்பு நிறைந்த நின் முகச்சாயலைக் காணப்பெறேனாயின்.

4. சசாங்கனது ஜோதியால்தான் யாது பயன்! பௌதிக ஆகாசத்தில் சந்திரோதயமாகுங் காலையில், சிதாகாசத்தில் நினது அன்பின் வடிவமாகிய அம்புலி தோன்றாவிடில் எல்லாம் இருளே யன்றோ?

5. பதிவிரதையின் பவித்ரமான ப்ரேமையும் மலினமேயாகும், அவளது அன்பாகிய கநகத்தில் நினது அன்பாகிய ரத்நம் பதியாவிடில்.

6. பதிதபாவநா! நீயொருவன் இருக்கின்றனையோ இல்லையோ வென்று மோஹத்தால் ஸம்சயங்கொள்வது கொடிய விஷமுள்ள காளஸர்ப்பத்தின் இடைவிடாக் கடிக்கொப்பாகும்.

7. பக்தவத்ஸலா! இனி யான் என்ன சொல்லப் போகின்றேன்! நீயே என் மனத்தின் விலையில்லா மாணிக்கம்! நீயே நித்யாநந்த நிலயம்!

பாட்டில், 'பதிவிரதையின் பவித்ரமான பிரேமை, என்ற பாகத்தை டாக்டர் கேட்டுக் கேட்டு கண்ணீர் சொரிந்து 'ஆஹா! ஆஹா!' என்று வாய்விட்டலறினர்.

நரேந்திரர் மறுபடியும் பாடத் தொடங்கினர்.

ஸங்கீர்த்தநம்:—ப்ரேமை (அன்பு.)

1. என் கண்களில் அன்புநீர் ஆறுய்ப் பெருக யான் பூர்ணகாமனுய் ஹரிநாமஸ்மரணை செய்துகொண் டிருக்கும்படியான பிரேமை எனக் குண்டாவ தெந் நாளோ!

2. எனது ஆவியும் மனதும் தூய்மை யடைவ தெக்காலம்! பிரேமையெனும் பிருந்தாவநத்துக்கு யான் யாத்திரை செல்வ தெக்காலம்! நினது திருவருட் ப்ரகாசமாகிய ஞானாஞ்ஜனத்தால் என் கண்ணிருள் நீங்குவ தெக்காலம்!

3. இரும்பையொத்த என்னுடலம் நினது திருக்கர ஸ்பரிசமாகிய பரிசவேதியால் பொன்னுவதெக்காலம்! ஸர்வம் ஹரிமயமான ஜகத்தை யான் தரிசிப்பதெக்காலம்!

4. ஸத்கருமங்களைச் செய்யவேண்டுமெனும் விருப்பம் எனை விட்டொழிவ தெக்காலம்! ஜாதி குலமெனும் பேதம் எனைப்பிரிவ தெக்காலம்! பயம், கலக்கம்

வெட்கமெனு மிவற்றை யான் கடந்து செல்வ தெக்காலம்! அபிமான லோகாசாரங்களை யறவொழிப்ப தெக்காலம்!

5. அன்பர்களது பாததூளியை ஸர்வாங்கத்திலும் அணிந்து வைராக்கியக் கோலம் பூண்டு அன்பின் ஆளுயோடும் பிரேமயமுனா நதியில் பிரேமவாரியை (அன்பெனும் நீரை) இருகையாலும் அள்ளிக் குடிப்ப தெக்காலம்!

6. பிரேமையெனும் பைத்தியம் பிடித்து ஸச்சிதானந்தக் கடலில் மூழ்கி ஸகலமும் ஜகதம்பிகையின் ஸ்வரூப மெனக்கருதி ஸ்ரீஹரியின் பாதாரவிந்தத்தில் யான் நித்ய விஹாரம் பண்ணப்பெறுவ தெக்காலம்!

---

## இரண்டாவது அத்தியாயம்.

இவ்வாறு பாடிக்கொண்டிருக்கையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஸமாதியினின்று விழித்துக்கொண்டார். கானம் முடிவுபெற்றது. அப்பொழுது பண்டிதருக்கும், பாமரருக்கும், பாலருக்கும், விருத்தருக்கும், ஸ்திரீகளுக்கும் புருஷருக்கும் கீழோருக்கும் மேலோருக்கும் ஒருங்கே மனோரஞ்சகமாய் விளங்கும் ஸம்பாஷணை யாரம்பமாயிற்று. அனைவரும் மௌனமுத்திரை தரித்து பிரபு என்ன திருவாய் மலர்ந்தருளப் போகின்றாரோவென அவர் திருமுகமண்டலத்தை யாவலாய் நோக்கியவண்ணமாய் உட்கார்ந்திருந்தனர். இதுவரையில் அவரை வருத்திய கொடிய நோயின் அறிகுறிகள் இப்பொழுது சிறிதாயினும் தென்படுகின்றனவா?

மலர்ந்த செந்தாமரையை யொத்து திவ்யதேஜோமய மாய் விளங்கிய அவரது முகமண்டலத்திற் பேரின்பம் பொங்கி வழிந்தது. அப்பொழுது, அவர் டாக்டரை நோக்கி மொழியலுற்றார்:—

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—டாக்டரவாள்! லஜ்ஜையை விட்டுவிடும். பஹிரங்கமாய்ப் பகவந்நாமத்தைச் சொல் வதற்கும், நாமஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டு பிரஹ் மாநந்தமாய் நர்த்தநம் செய்வதற்கும் வெட்கப்படக் கூடாது. ஜனங்கள் என்ன சொல்வார்களோ வென் றஞ்சவேண்டாம். வெட்கமும் பெருமையும் பயமும் பாராட்டுபவர்களுக்குப் பரகதி கிட்டாது. "நான் எவ் வளவு பெரியமனிதன்! இது பெரியமனிதர்கள் காதுக் கெட்டினல், அவர்கள் என்ன சொல்வார்கள்! 'டாக் டர் பயல் ஹரி ஹரி யென்று கதறிக்கொண்டு கூத்தாடி ருனும்; அவனுக்கு மதியே போய்விட்டது' என்று ஜனங்கள் சொன்னல் அதைவிட வெட்கக்கேடு வே றென்ன வேண்டும்!" என்று சொல்லிக் கொள்வான் வெட்கப்படுகிறவன்.

டாக்டர்:—என்மாதிரி அப்படி யல்லவே யல்ல. ஜனங்கள் என்ன சொன்னபோதிலும் நான் பாராட்டு வதேயில்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—நீர்தான் அதை யதிகமாய்ப் பாராட்டுகிறவர். (யாவரும் சிரித்தல்.)

## ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—ஞாநம் அஞ்ஞானம் என்னும் இரண்டையும் கடந்து அக்கரை யடையுங்கள். பல

விஷயங்களின் அறிவு அஞ்ஞானம்,—ஏகமாகிய அத் விதீயப்பரம்பொருளையறியாது பற்பலவிஷயங்களையும் அறியும் வேற்றுமை யறிவே அஞ்ஞானமெனப்படும். பாண்டித்தியத்தினால் உண்டாகும் அகங்காரத்திற்குக் காரணம் அஞ்ஞானமேயாம். ஸர்வபூதங்களிலும் ஒரே ஈசுவரன் வியாபித்திருக்கிறாரென்னும் நிச்சயமான அறிவினுக்கு ஞானமெனப் பெயர். அவ்வீசுவரனை விசேஷமாயறியும் அறிவு விஞ்ஞானமெனப்படும். காலில் தைத்த முள்ளையெடுக்க வேண்டுமானால் வேறொரு முள்ளவேண்டும். தைத்த முள் வெளியே வந்துவிட்டால் இரண்டு முள்ளையும் எறிந்துவிடுகிறோம். அது போலவே அஞ்ஞானமென்னும் முள்ளை வாங்க ஞானமென்னும் மற்றொரு முள் வேண்டியிருக்கிறது. அது வந்துவிட்டால் ஞானம் அஞ்ஞானம் என்னும் இரண்டு முள்ளையும் வெளியே எறிந்துவிட வேண்டியதுதான். அப்பொழுதுதான் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் கைகூடும். ஞானத்தையும் அஞ்ஞானத்தையும் கடந்த தன்றோ ப்ரஹ்மம். ஒருகால் லக்ஷ்மணன் ஸ்ரீராமனை நோக்கி 'அண்ணா, மஹாஜ்ஞானியாகிய வஸிஷ்டமுனிவர் புத்திர சோகத்தாற் புலம்பினாரென்பது ஆச்சரியமன்றோ?' என்று வினவ, அதற்கு ஸ்ரீராமன்: 'தம்பி, எவனுக்கு ஞானமுண்டோ அவனுக்கு அஞ்ஞானமுமுண்டு. பல வகை விஷயங்களின் ஞானம் எவனுக்குண்டோ அவனுக்குத்தான் ஏக விஷயமான ஞானமுமுண்டாகின்றது. பிரகாசத்தின் அறிவு உள்ளவனுக்கு இருளின் அறிவும் உண்டு. ஆகவே ஞானம், அஞ்ஞானம், இருள், வெளிச்சம் என்பவை ஆபேக்ஷிகப் பொருள்களென்றும்

[illegible]டை. ப்ரஹ்மமானது ஞானாஞ்ஞானங்களையும், பாப புண்யங்களையும், தர்மா தர்மங்களையும் சுசி அசுசிகளையும் கடந்து அவைகளுக்கு மேலாக நிற்பதாம்" என்று விடையளித்தார். இவ்வாறு பிரஸங்கித்துவிட்டு, ஸ்ரீ ராமகிருஷ்ணர் பின்வருங் கருத்தமைந்த ஸங்கீர்த்தநத்தைப் பாடத் தொடங்கினார்.

ஸங்கீர்த்தநம்:—அபரோக்ஷாநுபூதி.

1. மநமே, உலாவப்போவோம் வா; என்னையீன்ற தாயாகிய காளியெனும் கற்பக விருக்ஷத்தின் அடியில் நால்வகைப் பழங்களைப் பொறுக்கிவருவோம் வா.

2. பிரவிர்த்தி, நிவிர்த்தியென்று இரண்டு மனைவிகள் உனக்குண்டல்லவோ? நீ வெளியே உலாவப்போகும்போது நிவிர்த்தியை ஸங்கியாக அழைத்துச்செல்.

நிவிர்த்திக்கு விவேகனெனும் மகன் ஒருவன் உளன். அவனிடத்தில் நீ எவ்வித தத்துவ ஆராய்ச்சியாயினும் செய்யலாம்.

3. முதன் மனைவியாகிய பிரவிர்த்தியின் ஸந்ததிகளினின்றும் எப்பொழுதும் ஜாக்கிரதையாய்த் தூரமாய் விலகி நின்று அவர்களை விவேகனிடம் கொண்டுவர முயலவேண்டும்.

அவர்கள் விவேகனது சொல்லைக்கேட்கமாட்டோமென்று முரட்டுத்தனம் செய்தால், ஓ மனமே, அவர்களை ஞானக்கடலில் அமிழ்த்திவிடு.

4. சுசி அசுசிகளுடன் மோக்ஷவீட்டில் சயனித்துக் கண்வளர்வதெக்காலம்?

இவ்விரு சக்களத்திகளும் பரஸ்பரம் பிரிந்த பொழுதுதான் எனை யீன்றெடுத்த தாயாகிய சியாம ஸௌந்தரியம்மையை நீ காணலுறுவாய்.

5. **தர்மம், அதர்மம்** எனும் இரண்டு ஆடுகளையும் அஜாக்கிரதையாய்த் தூணிற் கட்டிவை. பிறகு அவற்றை ஞானக் கத்தியாற் பலிகொடுத்து அவற்றிற்கும் கைவல்ய பதவியைக் கொடு.

6. மனமே, உன் தந்தை அஹங்காரன், உன் தாயார் அவித்தை; அவ்விருவரையும் நீ அனுப்பிவிட வேண்டும். நீ மோஹக் குழியில் விழும்படியான அபாய நிலையில் இருந்தால், தைரியமெனும் ஆதாரத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்.

7. "மனமே, நீ இவ்வாறு நடந்துகொண்டால் காலகாலனுக்குச் சரியான 'ஜவாப்' சொல்லத் தயாராயிருப்பாய்" எனப்புகன்றான் ப்ரஸாதன். *

அப்பொழுது தான் உனை என் கண்மணியே யென்றும், என் செல்வமே யென்றும், என் அப்பனே யென்றும், என் மனதையொத்த மனமே யென்றுஞ் சொல்லத்தகும்.

## ப்ரஹ்மம் அவாங்மாநஸகோசரம்.

[வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது.]

ஸ்யாமவஸௌ: ஸ்வாமி, ஞானம் அஞ்ஞானம் எனும் இரண்டு முட்களையும் எடுத்தெறிந்துவிட்டால் பிறகு என்ன இருக்கிறது?

* இந்தப்பாட்டை மூலபாஷையாகிய வங்காள பாஷையிற் பாடிய **ராமப்ரஸாத்.**

ஸ்ரீராமகிருஷ்ணர்: தங்கியிருப்பது நித்திய சுத்த போதரூபமென்று சுருதிகள் கூறும் பரப்ரஹ்மமேயாம். ஆனால் இதை உனக்குத் தெரியும்படி எப்படி யுரைப்பேன்? தினந்தோறும் நீ சாப்பிட்டு வருகிற நெய்யின் சுவை எப்படிப்பட்டதென்று உன்னை யொருவன் கேட்டால், அவனுக்குத்திருப்தி யுண்டாகும்படி அதை விளக்க உன்னாலாகுமா? நீ எவ்வளவுதான் முயன்றாலும், நெய்யின் சுவை சாக்ஷாத் நெய்யின் சுவையைப் போலவே யிருக்குமென்று மாத்திரம் தான் சொல்ல முடியும். (யாவரும் சிரித்தல்). கலியாணமாகாத கன்னிகை யொருவள் தன் தோழியை நோக்கி, "உன் புருஷன் வந்திருக்கிறானே, நீ அவனைக் கண்டு கூடிக்குலாவும் போதெல்லாம் உனக்கு எவ்விதமான சந்தோஷம் உண்டாகின்றது? எனக்குச்சொல்" என்று கேட்க, விவாகமான அத்தோழி சொல்வாள் "என்கண்ணே, உனக்குக் கலியாணமாகி நீ புருஷனை யடையும்பொழுது இதையெல்லாம் நீயே தெரிந்துகொள்வாய். இப்பொழுது நான் உனக்கு எப்படி அதைத் தெரியச்சொல்லுவேன்?

"உலகத்தை யீன்ற மாதாவாகிய உமையவள் மலையரசனாகிய ஹிமவானுக்குப் புத்திரியாய் அவதரித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. பார்வதிதேவி அவதரித்தபிறகு அந்த ஸர்வசக்திமதியாகிய ஜகந்மாதாவின் விசுவரூபதரிசனம் அக்கிரிராஜனுக் குண்டாயிற்று. அப்பொழுது அவன் அக்கண்கொள்ளாக்காட்சியைக் கண்டு தேவியை நோக்கி, "தாயே, வேதத்தில் பலவாறு புகழ்ந்து கூறப்பட்ட ப்ரஹ்மத்தின் தரிசனம் அடியேனுக்

துண்டாகும்படி அருளாயோ" என்று பிரார்த்திக்க, குழந்தையாய் அவதரித்திருந்த பார்வதிதேவி, "அப்பா ப்ரஹ்மதர்ஸநம் கிடைக்கவேண்டுமென்ற கோரிக்கை யுனக்கிருந்தால், நீ சாது சங்கத்திற் பழகவேண்டும். அப்பொழுது தான் உன் கோரிக்கை நிறைவேறும்" என்றாள். ப்ரஹ்மம் இன்னதென்று வாக்கினால் விளக்க முடியாது. 'இவ்வுலகத்தில் ப்ரஹ்மம் ஒன்று தவிர மற்றவையெல்லாம் உச்சிஷ்டமே(எச்சிலே)' என்று ஒருபெரியவர் கூறியிருக்கிறார். அவருடைய கருத்தென்னவெனில்: வேதம், புராணம், தந்திரம் முதலிய ஸர்வ ஶாஸ்த்ரங்களும் வாயினால் உச்சரிக்கப்படுகின்றமையால் உச்சிஷ்டமாய் விட்டன; ஆனால் பரப்ரஹ்மத்தின் பூர்ண லக்ஷண மின்னதென்று மாத்திரம் இதுவரையில் ஒருவரும் வாயினால் சொல்லவேயில்லை. ஆதலால் தான் ப்ரஹ்மத்துக்கு இன்றுவரையில் உச்சிஷ்ட தோஷம் உண்டாகாமலிருக்கின்றது. ஸச்சிதாநந்த ஸ்வரூபாநுபவத்தில் உண்டாகும் க்ரீடை, ரமணம் முதலிய ஆநந்தங்களை வாயால் சொல்ல முடியாது; அதை அநுபவித்தவனே அவ்வாநந்தத்தை யறிவான்; கடவுளைக் கண்டவர் விண்டிலர்.

---

## மூன்றும் அத்தியாயம்.

### கல்வியும் அகங்காரமும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பகவான் டாக்டரை நோக்கி 'அஹங்காரம் போனாலொழிய ஞானமுண்டாகாது. 'யானெனும் அகந்தை யொழியுங் காலையில் தான் முக்தி கைகூடும்'. 'யான்' என்பது தான் அஞ்ஞானம். 'நீ' 'உன

து' என்பது ஞானமாகும். மெய்யன்புள்ள பக்தன் 'ஈசா நீ யொருவனே கர்த்தா. அடியேன் உன் கையிலுள்ள கருவிமாத்திரமாயுள்ளவன். நீ சூத்திரதாரன், அடியேன் சூத்திரப்பாவை. நான் இயந்திரம். நீ அவ்வியந்திரத்தை யியக்குவோன். நீ ஏவுகின்ற வழியில் நான் ஏவல்புரிய வேண்டியவன். இங்குள்ள செல்வமும் உன்னுடையதே, வீடும் உன்னுடையதே, பரிஜநமும் உன்னுடையதே, யாவும் உன்னுடையதே, என்னுடையதென்பதெதுவுமில்லை. எல்லாம் உன்னுடைமை. எல்லாம் உன் அடிமை. யானும் நின் அடிமை. நீ எப்படி கட்டளை யிடுகின்றனையோ அப்படி நடப்பதற்கு மாத்திரந்தான் எனக்கதிகாரம்'' என்று விண்ணப்பஞ்செய்கிறான்.

"கொஞ்சம் கல்வி கற்றவர்களுக்குக்கூட அஹங்காரந் தலைகொண்டிருப்பது ஆச்சரியம். ஒரு சமயம் டாகூர் என்பவர் என்னுடன் கடவுள் விஷயமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் அவர், 'ஓ நீங்கள் சொல்வதெல்லாம் எனக்கு ஏற்கனவே தெரியும். அதையெல்லாம் நான் புஸ்தகங்களில் படித்திருக்கிறேன்' என்றார். அதற்கு நான் அவரை நோக்கி, "ஐயா, டில்லி பட்டணத்துக்குப் போய் வந்தவன் 'நான் டில்லிக்குப் போயிருந்தேன்' என்று பஹிரங்கமாய்த் 'தண்டோரா' போட்டுக்கொண்டு திரிவதில்லை. உயர்குடியிற் பிறந்த பெரிய மனிதன் 'நான் பெரிய மனிதன்' என்று சொல்லிக்கொண்டு திரிவதில்லை'' என்றேன். (யாவரும் சிரித்தல்.)

ஶ்யாமபாபு: ஸ்வாமீ, டாகூர் பாபு தேவரீரிடத்தில் பலமான விசுவாஸம் வைத்திருக்கிறாரே!

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஆஹா! நான் என்னென்று சொல்வேன்! தக்ஷிணேசுவரத்தில் காளிகா தேவாலயத்தில் குப்பை கூட்டும் வேலைக்காரியின் கர்வத்தை! அவள் இரண்டொரு நகைகள் போட்டுக்கொண்டிருந்தாள். அது அவள் தலையைக் கழுத்தில் நிற்கவொட்டவில்லை. ஒருநாள் அவள் செல்லும் வழியில் எதிரே வந்த சிலரை நோக்கி அவள் "ஏய் என்ன அய்யா! ஒதுங்கிப் போங்கோ அய்யா" என்று கத்தினள். (சிரித்தல்.)

"சாதாரணமான குப்பை கூட்டும் வேலைக்காரிக்கே அவ்வளவு அஹங்காரம் இருக்குமானல் மற்றவர்களின் அஹங்காரத்தைப்பற்றிப் பேசுவானேன்?

[பாபபுண்ணியங்கள்.]

ஶ்யாமபாபு:—ஸ்வாமி! பாபத்திற்குத் தண்டனையுண்டென்று சொல்லுகிறார்கள். ஸர்வத்துக்கும் ஈசுவரனே கர்த்தாவென்றும் ஜீவகோடிகள் அவன் கையில் கேவலம் கருவி மாத்திரமாய் விளங்குகின்றனவென்றும் சொல்லுகிறார்கள். ஒன்றற்கொன்று விரோதமுள்ளவைபோல் தோன்றும் இவ்விருவகைக் கொள்கைகளையும் ஸமரஸப்படுத்துவதெப்படி?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—நீ என்ன! பொன் நிறுக்கும் வர்த்தகனைப்போல் நிறுக்காய்ப் பேசுகிறாயே.

நரேந்திரர்: பொன் நிறுக்கும் வர்த்தகனைப்போல என்றால், அவனைப்போல் அவ்வளவு calculating(கணக்கு) ஆய்ப் பேசுகிறார் என்பது பிரபுவின் கருத்து.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—நான் சொல்வ தென்னவெனில்; அப்பா, மாங்கனிகளைத் திருப்தியாய்த் தின். தோட்டத்தில் எத்தனை நூறு மாமரம் இருக்கிறதென்றும், அம்மரங்களில் எத்தனை யாயிரம் கிளை இருக்கிறதென்றும், எத்தனை கோடி இலை இருக்கிறதென்றும் எண்ணுவதில் என்ன பயன்? நீ மாம்பழம் தின்னவந்திருக்கிறாய். அதைத் தின்றுவிட்டுப் போ! [சியாமவஸுவை நோக்கி] நீ இந்த ஸம்ஸாரத்தில் ஈஸ்வர ஸாதனம் பண்ணி பரமகதி யடையும் பொருட்டு மானுடப் பிறவி பெற்றிருக்கிறாய். எம்பெருமானது மலரடிகளில் பக்திசெய்ய முயல்வதேஉன் முக்கியமான கடமை. அதை விட்டுவிட்டு மற்ற ஜோலிகளெல்லாம் உனக்கு எதுக்கு? தத்துவ விதண்டாவாதங்களால் உனக்கு உண்டாகும் பயன் என்ன? ஒரு அவுன்ஸ் சாராயம் வெறி உண்டாவதற்குப் போதுமென்று தெரியாதா? ஆகவே வெறிக்கக் குடிக்க வேண்டியதே உன் முக்கிய கருத்தாயிருக்க, ஊரிலுள்ள சாராயக்கடைகளில் எத்தனை மணங்கு சாராயம் இருக்கிறதென்பதை விசாரிப்பதில் என்ன பிரயோஜனம்?

டாக்டர்:—வாஸ்தவம், ஸ்வாமி! மேலும் பகவானுடைய மதுவிக்கிரயசாலை (சாராயக்கடை) யிலுள்ள மதுவுக்கு அளவே யில்லை. அஃது என்றும் வற்றாக் காவேரி.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—(சியாம வஸுவை நோக்கி) இவ்வளவு ஏன்? பகவானுக்கே நீ ஒரு 'வக்காலத்து நாமா' (Power of attorney) எழுதிக்கொடுத்து விடக்

கூடாதா? உன்னுடைய ஸமஸ்த பாரங்களையும் அவனிடத்தில் ஒப்பிவித்துவிடு. நீ ஒரு தக்க மனிதனை உன் காரியங்களைப் பார்த்துக்கொள்ளும்படி நம்பி ஏற்படுத்தின பிறகு அவன் உன்னை மோசம் செய்வானா? செய்யவேமாட்டான். பாபம் செய்தவனுக்குத் தண்டனை உண்டா இல்லையா என்று விஷயத்தைப் பகவானுக்கு விட்டுவிடு.

டாக்டர்:—அவர் திருவுள்ளத்தில் இருப்பது அவருக்குத்தான் தெரியும். மனிதன் உத்தேசம் வெகுதூரம் செல்லாது. அவர் மானுட உத்தேசத்துக்கு எட்டாதவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்:— (சியாமவஸுவுடன்) இக்காலத்தில் கல்கத்தாவில் எங்கே பார்த்தாலும் இதே பேச்சாய்ப் போய்விட்டது. பகவான் மனுஷ்யர்கள் விஷயத்தில் ஸமத்துவமாயிராமல் பக்ஷபாதமாயிருக்கிறாரென்று அனைவரும் குறை கூறுகிறார்கள். பகவான் சிலரைத் தனவான்களாயும் சிலரைத் தரித்திரராயும் ஏன் செய்யவேண்டுமென்று முறைப்படுகிறார்கள். பகவானுடைய ஸ்வபாவமும் தங்கள் ஸ்வபாவத்தைப் போன்றதேயென்று நினைக்கிறார்கள் இம்முழுமூடர்கள்.

உலகப் புகழ்ச்சியே உத்தம புருஷார்த்தமாகுமா?

“ஹேமசந்திரன் தன் நேசர்களாகிய ஜான் பஜாபாபுக்களுடன் தக்ஷிணேசுவரத்திலுள்ள காளிகோவிலுக்கு வருவதுண்டு. அவன் என்னைக் காணும் பொழுதெல்லாம், “என்ன பட்டாசாரிய ஸ்வாமிகளே,

உனக்குத் தீர்மானித்துக் கேட்கவேண்டியது 'புகழ் தன்றா தானோ?' என்று கேட்பான். ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமே பரம புருஷார்த்த மென்று அறிபவர் வெகு சிலரே!

[ஸூக்ஷ்ம சரீரம்.]

சியாமவஸு:—ஸ்வாமி, ஸூக்ஷ்ம சரீரத்தை யாராவது காட்டமுடியுமா? ஸூக்ஷ்ம சரீரம் ஸ்தூல சரீரத்தை விட்டுப் பிரிந்து வெளியே செல்கின்ற தென்பதைக் காட்ட முடியுமா?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—எவன் உண்மையான பக்தனோ, அவனுக்கு, இதையெல்லாம் உனக்குக் காட்டவேண்டுமென்ற அவசியமில்லை. எந்த மூடனாவது தன்னைக் கவனிக்கின்றானோ இல்லையா என்று அவன் கவனிப்பதில்லை. தன்னைப் பெரிய மனிதர்கள் அறிந்திருக்கவேண்டுமென்ற எண்ணமும் அவனுக்குக் கிடையாது.

சியாமவஸு:—சரி, ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களுக்குள்ள பேதத்தை நீங்கள் தான் சொல்லுங்களேன்.

[ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, மஹாகாரண சரீரங்கள்.]

ஸ்ரீராமகிருஷ்ணர்:—ஸ்தூல தேஹமென்பது பஞ்சபூதங்களால் அமைந்தது. மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் என்னும் இவைகளாலானது ஸூக்ஷ்மதேஹம். பகவானுடைய ஆனந்தத்தை அநுபவிக்கும் உட்சரீரத்துக்குக் காரண சரீரமென்று பெயர். இதைத்தான் பகவத் தநு என்று தந்திரங்கள் கூறுகின்றன. எல்லாவற்றிற்கும் அதீதமானது மஹாகாரண சரீரம். இதையே

துரீயநிலை யென்றும் சொல்வர். இது வாக்கினால் விளக்கற்பாலதன்று.

---

## நான்காம் அத்தியாயம்.

### [ஸாதநத்தின் பிரயோஜநம்.]

ஸ்ரீராமகிருஷ்ணர்:—கேவல ஶ்ரவணத்தால் என்ன பிரயோஜநம்? உபந்நியாஸங்களைச் சும்மா கேட்பதில் மாத்திரம் யாதுபயன்? முக்கியமாய் இருக்கவேண்டியது ஸாதநமேயாகும். ஸித்தி, ஸித்தியென்று வாயால் சொல்லிக்கொண்டிருப்பதால் மாத்திரம் என்ன ஆய்விடும்? குடியினால் உண்டாகும் 'நிஷா' (மயக்கம்) வை அநுபவிக்க வேண்டுமானால் லாகிரி வஸ்துவைக்கொண்டு வந்து அறைத்து உடம்பில் பூசிக்கொள்வதால் நிஷா உண்டாகிவிடுமா? ஒருகாலும் உண்டாகாது. அந்த லாகிரி வஸ்துவில் கொஞ்சம் உட்கொண்டால் தான் நிஷா உண்டாகும். நூல்களில் 40-ம் நம்பர் நூலென்றும், 41-ம் நம்பர் நூலென்றும் பலவகைகள் இருக்கின்றன. நூல் வியாபாரத்தில் உனக்குப் பழக்கமிருந்தாலொழிய ஒரு நம்பர் நூலுக்கும் மற்றொரு நம்பர் நூலுக்குமுள்ள வேற்றுமை உனக்குத் தெரியவராது. அதே வியாபாரமாயுள்ளவர்கள் இந்தப் பேதத்தை வெகு எளிதில் கண்டுகொள்வார்கள். ஆகையால் தான் சிறிது சாதனத்திற் பழகுங்கள் என்று நான் சொல்வது. அப்பொழுதுதான் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, மஹாகாரண சரீரங்களின் இயல்பை உண்மையாய் அறிந்துகொள்வீர்கள்.

[ஈஸ்வரபக்தி இன்றியமையாதது.]

"பகவானை நோக்கிப் பிரார்த்தனை செய்யும்பொழுது, அவனது பாதபத்மங்களில் உங்களுக்கு பக்தி உண்டாகவேண்டுமென்று பிரார்த்தியுங்கள். அஹல்யைக்குச் சாபவிமோசநமான பிறகு ஸ்ரீராமசந்திரர் அவ் இருஷிபத்நியை நோக்கி, "நீ கோரியவரத்தை என்னிடத்தில் கேட்கலாம்" என, அஹல்யை, ராமா "அடியாளுக்கு வரமளிக்க வேண்டுமென்ற விருப்பம் உனக்கிருந்தால், இந்த வரம் அளித்தால் போதும். அதாவது, எனக்குப் பன்றி ஜன்மம் வாய்ப்பினும் கெடுதல் இல்லை. நினது திருவடித் தாமரைகளில் மாத்திரம் அசலமான பக்தி எனக்கு உண்டாகுமாறு அருள்புரிய வேண்டும்" என்றாள்.

"என் வரையில், பக்தி ஒன்று மாத்திரம் எனக்களிக்க வேண்டுமென்றே நான் ஜகதம்பிகையைப் பிரார்த்திக்கின்றேன். அம்பிகையின் பாதபத்மங்களில் புஷ்பம் சமர்ப்பித்து, அஞ்சலி ஹஸ்தனாய் "என் தாயே, இதோ அஞ்ஞானம், இதோ ஞானம் இவ்விரண்டும் எனக்கு வேண்டாம். இவற்றை நீ எடுத்துக்கொண்டு சுத்தமான பக்தியை யளித்தருள்வாய். இதோ சுசி, இதோ அசுசி. இவற்றை வைத்துக்கொண்டு நான் என் செய்வது? எனக்கு சுத்தமான பக்தியைத் தந்தருள்வாய். இதோ பாபம், இதோ புண்ணியம். எனக்குப் பாபமும் வேண்டாம், புண்ணியமும் வேண்டாம். நிஷ்களங்கமான பத்தியையே தந்தருள்வாய். இதோ நன்மை இதோ தீமை இவ்விரண்டும் எனக்கு வேண்டாம். சுத்

தமான பக்தி யொன்றையே எனக்குத் தந்தருள்வாய். இதோ தர்மம், இதோ அதர்மம் இவை யெனக்குவேண்டாம். சுத்தமான பக்தி யொன்றையே கொடுத்தருள்வாய்'' என்று பிரார்த்தித்தேன்.

"தர்மமென்பது தானம் முதலிய நற்கருமங்கள். நற்கருமங்களின் பயனை அநுபவிக்கக் கோரினால், துஷ்கருமங்களின் பயனையும் நீ அனுபவிக்கவேண்டும். புண்ணிய கர்மங்களின் பயனை அநுபவிக்கக் கோரினால் பாப கர்மங்களின் பயனையும் அநுபவிக்க வேண்டும். ஞானமென்ற விவகாரம் வரும்பொழுது அஞ்ஞானமும் கூடவேவரும். சுசி என்று ஒன்றை வைத்துக்கொண்டிருக்கும் வரையில் அசுசி தொலையாது. எவனுக்கு ஒளியின் அறிவு உண்டோ அவனுக்கு அதன் எதிர்மறையாகிய இருளின் அறிவும் உண்டு. எவனுக்கு ஏகத்துவ ஞானமுண்டோ அவனுக்கு அநேகத்துவ ஞானமுமுண்டு.

"பகவானது பாதபத்மங்களில் ஸ்திரமான பக்தியுள்ளவனே பாக்கியவான், கிருதார்த்தன். அவன் பன்றியின் மாம்சம் தின்பவனாயினும் பாதகமில்லை. அப்படிக்கின்றி ஒருவன் * ஹவிஷ்யத்தைப் புஜிக்கின்றவனாயிருந்தும் ஸம்ஸாரத்தில் அழுந்தி யுழல்பவனாயிருந்தால்,—

டாக்டர்:—அவன் கதி அதோகதிதான்! இந்த சந்தர்ப்பத்தில் ஒரு விஷயம் சொல்லவேண்டியிருக்கிறது. ஒரு சமயம் புத்தர் பன்றியின் மாம்ஸம் தின்றார். உடனே Colic (வயிற்றுவலி) உண்டாகிவிட்டது.

* யஜ்ஞ சேஷமான அந்நம் ஹவிஷ்ய மெனப்படும்.

அதைப் போக்கிக் கொள்வதற்காக அவர், பாவம்! opium (அபினியை) உட்கொண்டார். நிர்வாணம் நிர்வாணம் என்பதெல்லாம் இவ்வளவுதான். அபினியைத் தின்றார்; ஸ்மரணையற்று ஸ்தப்தமாய்ப் போய்விட்டார். இதைத்தான் 'நிர்வாணம்' என்கிறீர்கள்.

புத்த தேவருடைய நிர்வாண விஷயமாய் இந்த நூதந வியாக்கியாநத்தைக் கேட்டு அனைவரும் நகைத்தார்கள்.

---

## அஞ்சாம் அத்தியாயம்.

### [கிருஹஸ்தனும் நிஷ்காம கர்மமும்.]

ஸ்ரீராமகிருஷ்ணர்:—(சியாமவஸுவுடன்) இல்லறத்திலேயே இரு, அதில் யாதொரு தோஷமுமில்லை. ஆனால் பகவானது பாதபத்மங்களில் மனதை நிறுத்தி நிஷ்காமனாய்க் காயகர்மங்களைப் புரியவேண்டும். முதுகில் பிளவை நோயால் வருந்துகிறவன் எல்லாரையும் போலவே பேசிக்கொண்டு, தான் செய்யவேண்டிய தினசரி காரியங்களை மற்றவர்களைப்போல் செய்துவந்தபோதிலும், அவன் படும் பாதையால் ஸதா பிளவை நோயைப் பற்றியே நினைத்துக்கொண்டிருப்பான். அதுபோலவே நீங்களும் ஸம்ஸாரத்தில் இருந்தபோதிலும் உங்கள் மனதை மாத்திரம் கடவுளிடத்திலே செலுத்தவேண்டும்.

ஸம்ஸாரத்திலேயே இருந்துகொண்டு அந்நிய புருஷன்மேல் காதல்கொண்ட ஒரு ஸ்திரீயானவள் வீட்டுக்

காரியங்களைச் செய்துகொண்டிருப்பதாய் வெளிக்குத் தென்பட்டாலும் உண்மையில் தன் ஆசை நாயகனையே நினைத்துக்கொண் டிருப்பதுபோல, நீங்கள் ஸம்ஸார கிருத்தியங்களை நடத்திவந்தபோதிலும், உங்கள் மனது மாத்திரம் பகவானிடத்திலேயே பொருந்தி யிருக்க வேண்டும்.

(டாக்டரை நோக்கி) விளங்குகிறதா ?

டாக்டர்:—ஸ்திரீகளின் எண்ணங்களே இன்னவை யென்று ஒருபொழுதும் அறியாத எனக்கு இவை எப்படி விளங்கும் ?

சியாமவஸு:—இல்லை இல்லை, டாக்டரவாள் ! உங்களுக்குக் கொஞ்சமாவது விளங்கியிருக்கவேண்டும். (சிரித்தல்).

ஸ்ரீராமகிருஷ்ணர்.—கொஞ்சமேன்! அதிகமாகவே தெரிந்திருக்க வேண்டும். அவருக்கந்த வியாபாரத்தில் வெகு நாளைய பழக்கமாயிற்றே ? (யாவரும் கொல்லெனச் சிரித்தல்.)

[திவ்யஜ்ஞானம். (Theosophy.)]

சியாமவஸு:—Theosophy (திவ்யஜ்ஞானம்)யைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள் ?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—சொல்லுகிற தென்ன ? சிஷ்யர்களைச் சேர்த்துக்கொண் டிருப்பவர்கள் தாழ்ந்த படியிலுள்ளவர்கள். அஷ்டமாசித்திகள் முதலிய பலவித சத்திகளைத் தேடித்திரிகிறவர்களும் குறைந்த நிலையிலுள்ளவர்களே. சித்திகளென்றால் வாயுஸ்தம்பம், ஜலஸ்

தம்பம், தூரதேசத்தில் நடப்பதை இருந்த விடத்தி லிருந்தே அறிந்துரைத்தல் முதலியன. இவ்விதமான வர்களுக்கு சுத்தமான ஈசுவரபக்தி உண்டாவது வெகு துர்லபம்.

சியாமவஸு:—ஆனால் அவர்கள் (Theosophist கள் திவ்யஜ்ஞாந சங்கத்தார்) இந்து மதத்தை மீண்டும் நிலை நாட்டுவதற்குப் பெரும் முயற்சி செய்துவருகின் றார்களே.

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—அவர்கள் சங்கதி எனக்கு நன்றாய்த் தெரியாது.

சியாமவஸு:—இறந்தபிறகு ஜீவாத்மா எங்கே போகின்றது? சந்திர லோகத்துக்கா? நக்ஷத்திர லோக ங்களுக்கா? என்ற இவ்வித விஷயங்களைப்பற்றி தியா ஸபியில் விவரமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—இருக்கலாம். ஆனால் என் அபிப்பிராயத்தையுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள். மகாபக்தனுகிய ஹநுமானை நோக்கி ஒருவன் "இன்றை க்கு என்ன திதி?" என்று கேட்க, அவர், "எனக்கு வாரம், திதி, நக்ஷத்திரம் இதுகள் ஒன்றும் தெரியாது. கேவலம் அந்த ராமன் ஒருவனையே சிந்தை செய்து கொணடிருக்கிறேன்" என்றார். இதுதான் என் வழி யும்.

சியாமவஸு:—அவர்கள் மஹாத்மாக்கள் இருப்ப தாகச் சொல்லுகிறார்களே. அதைத் தேவரீர் நம்பு கிறீர்களா?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—நான் சொல்வதை நம்பும் பக்ஷத்தில் அவர்கள் சொல்வது வாஸ்தவமென்றே சொல்வேன். ஆனால் இப்படிப்பட்ட விஷயங்களையெல்லாம் விட்டுவிடுங்கள். எனக்கு உடம்பு குணமான பிறபாடு வாருங்கள். நான் சொல்வதை மாத்திரம் நம்புங்கள். உங்களுக்கு சாந்தி அவசியம் உண்டாகும். இதுதான் உபாயம். நான் பணம் வஸ்திர முதலிய எதுவும் பெற்றுக்கொள்வதில்லையென்பது உங்களுக்குத் தெரியாதா? சில தெருக்கூத்துகளில் பெரிய மனிதர்கள் ஆட்டக்காரர்களுக்கு இனாம் அளிப்பது வழக்கம். அப்படிப்பட்டது இங்கே ஒன்றுமில்லை. ஆகையினால்தானே இங்கே இத்தனை ஜனங்கள் வருகிறார்கள்? (எல்லோரும் சிரித்தல்.)

(டாக்டரை நோக்கி) உமக்கு நான்சொல்லவேண்டியதொன்றுண்டு. ஆனால் என்மேல் மனவருத்தம் வேண்டாம். நீர் இவ்வுலக சுகங்களாகிற செல்வம், புகழ், Lecture (பிரசங்கம்) முதலிய வெல்லம்போதுமானவரையில் அநுபவித்தாய் விட்டது. இனியாவது சிறிது ஈசுவரனை மனதில் நினையும். இங்கே அடிக்கடி வந்துக்கொண்டிரும். பகவானைப்பற்றிய வசனங்களைக் கேட்பது பரம சுகிர்தம். அது ஜீவாத்மாவை மூடியிருக்கும் அவித்தையிருளை நீக்கி ஞானோதயத்தையுண்டாக்கும்.

---

## ஆறும் அத்தியாயம்.

சிறிது நேரம் கழித்து, டாக்டர் புறப்பட்டுப் போவதற்காக எழுந்தார். அப்பொழுது கிரீச சந்திர

கோஷ் வந்து பரமஹம்ஸர் முன் விழுந்து பணிந்து அவரது பாத தூளியைச் சிரமேற் கொண்டார். டாக்டர் அவரைப் பார்த்து சந்தோஷித்து மறுபடியும் உட்கார்ந்தார்.

டாக்டர்: நான் இங்கே இருக்கிறவரையில் கிரீச கோஷ் வரமாட்டார். நான் புறப்படப்போகிற சமயத்தில்தான் அவர் வருவார். (யாவரும் சிரித்தல்.)

பிறகு அவர்கள் (Science Association) பதார்த்த விஞ்ஞான சாஸ்திர சபையைப்பற்றியும் அங்கு நடக்கும் பிரசங்கங்களைப் பற்றியும் பேசினார்கள். கிரீச கோஷுக்கு இந்தப் பிரசங்கங்களில் ஆஸக்தி அதிகம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (டாக்டரை நோக்கி) என்னை ஒரு நாளைக்கு அங்கே (Science Association) அழைத்துக்கொண்டு போகிறீர்களா?

டாக்டர்: ஸ்வாமி, தேவரீர் ஒருமுறை வந்தால் அங்கேயுள்ள ஈசுவர சிருஷ்டியின் விந்தைகளைக் கண்டு ஆநந்தத்தால் மெய்மறந்து போய்விடுவீர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: அப்படியா!

## குருபூஜை.

டாக்டர்: (கிரீசருடன்) எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். But pray do not worship him as God (ஆனால் அவரைக் கடவுளாகக் கருதி மாத்திரம் பூஜிக்கவேண்டாம்.) அப்படிச் செய்வதனால் இப்படிப்பட்ட மஹானுக்குப் பெருங் கெடுதியைச் செய்கிறீர்களே யன்றி வேறில்லை.

கிரீச:— நீங்கள் சொல்வது வாஸ்தவமாயிருக்கலாம். ஆனால் நான் என்ன செய்வேன்? என்னை இச்சம்சார சாகரத்தையும் ஸம்சய ஸமுத்திரத்தையும் தாண்டுவித்த மகாநுபாவனை யான் வேறெவ்விதத்தில் ஸேவிப்பேன். அவரிடத்தில் நான் பூஜிக்கக்கூடாத அம்சம் ஒன்றும் எனக்குத் தோன்றவில்லையே.

டாக்டர்:—எல்லா மனிதர்களும் சமம் என்பதே என் கொள்கை. ஒரு தடவை ஒரு கடைக்காரனது குழந்தையை வைத்தியத்திற்காக எங்களிடம் கொண்டுவந்திருந்தார்கள். அந்தக் குழந்தை அங்கே மலவிஸர்ஜனம் செய்துவிட்டது. அங்கிருந்தவர்களெல்லாரும் துணியால் மூக்கை மூடிக்கொண்டார்கள். நான் மாத்திரம் அப்படி செய்யவில்லை. அக்குழந்தையின் பக்கத்திலேயே அரைமணி நேரம் உட்கார்ந்திருந்தேன். அவ்வாறே குப்பைக்காரன் மலக்கூடையை வைத்துக்கொண்டு சமீபத்திற் செல்லும்பொழுது நான் மூக்கைத் துணியால் மூடிக்கொள்வதில்லை. அப்படிப்பட்ட காரியங்கள் என் சுபாவத்துக்கு முற்றும் விரோதமானவை. ஒருவன் குப்பை யெடுப்பதனாலேயே மாநுடன் என்ற விவகாரத்தில் என்னைவிடத் தாழ்ந்துபோய் விடுவானா? அவனும் என்னைப்போல் ஒரு மனிதன்தானே? அவனை ஏன் நான் இழிவாய் நினைக்கவேண்டும்? அப்படியிருக்க, இந்த மஹாநுபாவரது திருவடிகளில் ஸாஷ்டாங்கமாய் விழுந்து இவரது பாததூளியை நான் சிரமேற் கொள்ளேனென்று நினைக்கிறீர்களா? இதோ பாருங்கள். (டாக்டர் பிரபு

வின் திருவடிகளைப் பணிந்து அவரது பாததூளியைச் சிரமேற் கொள்ளுகிறார்.)

கிரீச:—'இந்தமுகூர்த்தம் தன்யம், தன்யம்' என்று ஆகாயத்தில் Angles (தேவதைகள்) பாடுகிறார்கள்.

டாக்டர்:—ஒருவன் காலில் விழுவதில் ஆச்சரியமென்ன? நான் ஒவ்வொருவரையும் அப்படியே நமஸ்கரிப்பேன் என்பது உங்களுக்குத் தெரியாதுபோலும். ஐயா இதோ உங்களை நமஸ்கரிக்கிறேன். இதோ உங்களையும். ஐயா உங்களையும் இதோ பணிகிறேன்.(என்று டாக்டர் அங்கிருந்த பலபேருடைய பாதங்களையும் பணிகின்றார்.)

நரேந்திரர்:—(டாக்டருடன்) எமது பிரபுவை நாங்கள் பகவானைப்போன்ற புருஷரெனக்கருதுகின்றோம். எப்படியெனில், Vegetable creation (உத்பிஜ்ஜம்) ணுக்கும் Animal creation (ஜீவஜந்துக்கள்) ணுக்கும் இடையில் ஒரு (point) ஸ்தானம் இருக்கிறது. அதில் இது உத்பிஜ்ஜமா ஜீவஜந்துவாவென் றறிந்து சொல்வது கடினமாயிருக்கும். அதுபோலவே man-world (நரலோகத்து)க்கும் God-world (தெய்வலோகத்து)க்கும் நடுவே ஒரு நிலை இருக்கிறது. அதில் ஒருவன் மனிதனா கடவுளா என்று நிச்சயிப்பது கடினம்.

டாக்டர்:—கடவுளைப்பற்றிய விஷயங்களை உபமானங்களால் விளக்க முடியாது.

நரேந்திரர்:—நான் God (கடவுள) என்று சொல்லவில்லை, God-like man (கடவுளை யொத்தவர்) என்றுதான் சொன்னேன்.

டாக்டர்:—இந்தமாதிரி அவரவர்கள் பக்தி மூல மான பாவ (ஹாவ)ங்களை வெளியிடுவதில் பயனில்லை. எனது பா (ஹா) வங்களை எனக்குத் தெரிந்தவரையில் ஒருவரும் அறியக் கூடவில்லை. My best friends (எனது ஆப்த ஸ்நேஹிதர்கள்) என்னைக் கொடூரமானவ னென்றும் நிர்த்தயையா யிருப்பவனென்றும எண்ணு கிருர்கள். நீங்களும் ஒருநாள் என்னை ஜோட்டால் அடித்து ஓட்டிவிட்டாலும் விடலாம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—(டாக்டருடன்) டாக்டரவாள், அப்படி சொல்லவேண்டாம். இவர்களுக்கு உம்மிடத் தில் அத்தியந்தபிரீதி. கலியாணப்பெண் மணவறைக்கு எப்பொழுது வருவாளோ என்றெதிர்பாக்கும் சுமங் கலிகள்போல் இவர்கள், நீர் எப்பொழுது வரப்போ கிறீரென்று தினந்தோறும் ஆவலாய் எதிர் பார்க்கிருர் கள். (சிரித்தல்)

கிரீச — Every one has the gratest respect for you (ஒவ்வொருவருக்கும் உம்மிடத்தில் அத்தியந்த பிரீதி யிருக்கிறது.)

டாக்டர்:—(விசனமாய்) என்னைச்சேர்ந்தவர்களே —என் மகன், என் மனைவிகூட,—என்னை hard hearted (கடினசித்த முள்ளவன்) என்று கருதுகிருர்கள். இவ்வளவும் எதனுல்? என் உள்ளத்தில் உண்டாகும் சுக துக்க முதலான மனோபாவங்களை நான் சிலரைப் போல் வெளிக்காட்டிப் பாராட்டுவதில்லை. இதுதான் என் குற்றம்.

கிரீச—அப்படியானால், at least out of pity for your friends (உங்கள் நண்பர்களுக் கிரங்கியாவது) உங்கள் மனதின் கதவைத் திறந்துவிடுவது நல்லதல்லவா? உங்கள் மனோபாவத்தை உங்கள் நண்பர்களும் அறிந்து கொள்ள வில்லை யென்பதை நீங்கள் நன்றாய் அறிந்திருக்கிறீர்கள்.

டாக்டர்:—அதைச் சொல்லட்டுமா? உங்கள் மனோ பாவங்களைவிட என்னுடைய feelings அதிகமாய் worked up ஆயிருக்கின்றன (அதாவது அவ்வளவு நிறைந்திருக்கின்றன.)

(விவேகாநந்தருடன்) I shed tears in solitude. (நான் ஏகாந்தத்தில் கண்ணீர் தாரை தாரையாய் விடுகின்றேன்.)

[தருவும் பாபஸம்பர்க்கமும்.]

டாக்டர் (ஸ்ரீ ராமகிருஷ்ணருடன்) :— நல்லது ஸ்வாமீ, தேவரீர் பாவ (ஹாவ) ஸமாதியிலிருக்கையில் ஜனங்களை தேவரீர் திருவடிகளைத் தொடும்படி விடுவது நன்றாயில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—அவர்கள் என் காலைத் தொடுவது எனக்குத் தெரியுமென்று நீர் சொல்லவில்லையே.

டாக்டர்:—அப்படி செய்வது சரியன்றென உங்களுக்குப் படுகிறதல்லவா?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—பாவஸமாதி காலத்தில் என் மனது இருக்கும் நிலைமையைப் பற்றி நான் என்ன

சொல்வேன்? சமாதியிலிருந் தெழுந்தபிறகு, இதுதான் எனைவருத்தும் நோய்க்குக் காரணமோ என்று சிலசமயம் நான் நினைப்பதுமுண்டு. ஈசுவர பக்தியானது என்னை உன்மத்தனுக்கி விடுகிறது. அந்த உன்மாதத்தின் பலன்தான் இது. நான் என்ன செய்வேன?

டாக்டர் :—(சிஷ்யர்களுடன்) :—He expresses regret for what he does (அவர் தாம் செய்வதைப் பற்றி விசனப்படுகிறார்.) இந்தக் காரியம் sinful (பாவமானது) என்றுணர்கிறார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் : (நரேந்திரருடன்):—நீ நல்ல புத்திமானுயிற்றே. இதையெல்லாம் அவருக்குத் தெரியும்படி விளக்கக்கூடாதா?

கிரீச :—(டாக்டருடன்) :—டாக்டரவாள், நீங்கள் சொல்வது சரியன்று. அவர்தம் பாதம் பக்தர்களுடைய தேகங்களின்மேற் படுகிறதே யென்று சிறிதும் வியசனப்படுகிறு ரில்லை. அவர் தேகம் பரிசுத்தமானது, பாபரஹிதமாமது. அவர் ஜீவர்களின் மங்களத்தின் பொருட்டுக் கருணைகூர்ந்து தமது திருவடிகள் அவர்கள் தேகங்களின்மேல் படும்படி திருவுளம் பற்றுகிறார். அதனுல் அவர்களுடைய பாபத்தை அவர் கிரஹிக்கும்படி நேர்வதால், ஒருகால் அந்தப் பாவத்தால்தான் தம் தேகம் நோயால் வருந்துகிறதோ என்று சிலசமயத்தில் சிந்திக்கிறார், அவ்வளவு ஏன்? உங்கள் சமாசாரத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். ஒருசமயம் நீங்கள் இரவில் அதிகநேரம் படித்தபடியால் வயிற்றுவலி வந்து

விட்டதென்று நீங்களே சொல்லியிருக்கிறீர்கள். அப்பொழுது நீங்கள், இரவில் வெகு நேரம் படித்துக் கொண்டிருந்ததற்காக விசனப்பட்ட துண்டல்லவா? அதனால் இரவில் வெகுநேரம் படிப்பது தவறென்றேற்படுமா? நோயால் உண்டாகும் வருத்தத்தை உத்தேசித்து பிரபு வியசனிக்கலாம். ஜீவகோடிகளின் மங்களத்தின்பொருட்டு அவர்பரமாசாரியராய் எழுந்தருளியிருக்கிறபடியால், அதை யுத்தேசித்துத் தம் பாதம் பக்தர்களின்மேல் படுவதைப்பற்றி அவர் கிஞ்சித்தும் வியசனிக்கவேயில்லை.

டாக்டருக்கு இதன்மேல் ஒன்றும் சொல்லத் தோற்றவில்லை; அவர் மனமழிந்து தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டார்.

டாக்டர் (கிரீசருடன்):—நான் தோல்வியடைந்து விட்டேன். இப்பொழுது உமது பாதத்தூளியை எனக் களியும்.

(நரேந்திரருடன்) இது இருக்கட்டும் The acuteness of his intellectual powers (கிரீசருடைய புத்தி சூக்ஷ்மத்தை) நான் ஒப்பியே தீரவேண்டும்.

நரேந்திரர்: (டாக்டருடன்):—இதை மற்றொரு விதமாயும் விளக்கலாம் பாருங்கள். பதார்த்தவிஞ்ஞான விஷயமாய் எதையேனும் ஒன்றைப் புதிதாய்க் கண்டு பிடிப்பதற்காக சில சமயத்தில் நீங்கள் உங்கள் ஜீவகாலத்தை வினியோகிக்கிறீர்களே, அப்பொழுது சரீரத்தையேனும் சுகத்தையேனும் கவனிக்கிறீர்களா? அதுபோலவே, கடவுளை யறியும் அறிவு சகலசாஸ்திரங்களி

னும் சிறந்த சாஸ்திரம்,—grandest of all sciences! அதை அடைவதற்காக, பிரபு தம் சுகாசுகங்களைக் கவனிக்கவில்லை யென்பது ஸஹஜமேயன்றோ?

[அவதாரங்கள்.]

டாக்டர்:—யேசு, சைதந்யர், புத்தர், முகம்மது முதலிய எல்லா மதாசாரியர்களும் அஹங்காரம் நிறைந்தவர்களாய்த்தானே இருந்தார்கள். அவர்களெல்லாரும் ஒருவர் தப்பாமல், "நான் என்ன சொல்லுகிறேனோ, அதுதான் சரியான உண்மை; வேறெதுவுமன்று" என்றிப்படித்தானே சொன்னார்கள். இது எவ்வளவு அநியாயம் பாருங்கள்.

என்று சொல்லிவிட்டு டாக்டர் வீட்டுக்குப்போக எழுந்தார்.

கிரீச (டாக்டருடன்):—ஐயா, உங்களிடத்திலும் அதே தோஷம் இருக்கிறதென்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? அவர்களெல்லாரும் ஒருவர் தப்பாமல் அஹங்காரிகளே என்று நீங்கள் சொல்லுகிறீர்களே! அப்படி இதரர்களின்மேல் குற்றங் கண்டுபிடிப்பதும் அஹங்காரத்தினால்தானே. ஆகையால் நீங்களும் அதே தோஷத்துக் குட்பட் டிருக்கிறீர்களென்பதை நீங்கள் பார்க்கவில்லையே.

இதற்கு டாக்டர் ஒன்றும் பேசவில்லை.

நரேந்திரர்:—We offer to him worship bordering on diveine worship. ஈசுவர ஆராதநத்துக்கு ஏறக்குறைய சமானமான ஆராதனத்தை நாங்கள் அவருக்கு ஸமர்ப்பிக்கிறோம்.

---



"நான் உபதேசிக்கிற அவ்வளவு அநுஷ்டிக்க உங்களால் ஆகுமா? நான் உங்களுக்குச் சொல்வதில் வீசம் பங்காயினும் நீங்கள் அநுஷ்டிப்பீர்களாயின், நீங்கள் வீடுபெறுவதில் ஐயமே யில்லை."

ஸ்ரீ

பகவான்

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர்

திருவாய்மலர்ந்தருளிய

# உபதேசரத்நமாலை.

ஈசன்.

கடவுளிருப்பு.



1. ஆகாயத்திலே இரவில் அநேக நக்ஷத்திரங்களைக் காண்கின்றாய். ஆனால் அவை சூரியோதயமானபொழுது காணப்படுவதில்லை. அந்தக்காரணத்தைக்கொண்டு பகலில் ஆகாயத்தில் நக்ஷத்திரங்களே இல்லையென்று கூறலாமா? அவ்வாறே, உன்னுடைய அஞ்ஞானதசையில் நீ ஈசனைக் காணப்பெறாத காரணத்தால், ஈசனே இல்லையென்றுரையாதே.

2. ஈசனது பெயர் அநந்தம், அவனது ஸ்வரூபத்தை நாம் அறிந்துகொள்ளும் பொருட்டு ஏற்பட்ட ரூபமும் அநந்தம். நீ எந்தெந்த நாமரூபங்களால் அவனை யழைக்க விரும்புகின்றனையோ அந்தந்த நாமரூபங்களில் அவனைக் காண்பாய்.

## கடவுள் ஒருவரே.

3. நீர் என்ற ஒரு பொருளையே சிலர் 'ஜலம்' என்றும், சிலர் 'வாரி' என்றும், சிலர் 'பாணி' என்றும் சிலர் 'ஆக்வா' என்றும் இவ்வாறு பலர் பலபெயர்களால் வழங்குவதுபோலவே ஸச்சிதாநந்த ஸ்வரூபியாகிய ப்ரஹ்மத்தைச் சிலர் ஈசனென்றும் சிலர் அல்லாவென்றும் சிலர் ஜெஹோவா என்றும் மற்றுஞ் சிலர் ஹரியென்றும் இன்னுஞ் சிலர் ப்ரஹ்மமென்றும் பலவகைப் பெயர்களாற் போற்றுகின்றனர்.

4. குயவனது கடையில் குடம், பானை, ஜாடி, கலயம், தாலம் முதலிய பலவகையுருவமமைந்த பாத்திரங்கள் இருந்தபோதிலும் அவையாவும் மண்ணாற் செய்யப்பட்டனவேயாம். அவ்வாறே ஈசன் ஒருவரே யாயினும், வெவ்வேறு தேசங்களிலே வெவ்வேறு காலங்களிலே வெவ்வேறு நாமரூபங்களால் பூஜிக்கப்படுகின்றார்.

## கடவுளின் பிரகாரம் பல.

5. வி:—உலகத்திலுள்ள எல்லாவித சமய ஸித்தாந்தங்களிலும் விளங்கும் ஈசன் ஒருவரே யாயின், அவர் வெவ்வேறு சமயங்கள் கூறும வண்ணம் வெவ்வேறு தன்மையராய் இருப்பதாகக் காணப்படுவதென்ன காரணம் ?

விடை:—ஈசன் ஒருவரேயாயினும் அவரது பிரகாரங்கள் பல. வீட்டின் ஒரே யஜமானன் ஒருவனுக்குப் பிதாவாயும், இன்னொருவனுக்குச் சகோதரனாயும், ஒருத்திக்குக் கணவனாயும் இவ்வாறு பல பிரகாரங்க

ளிற் காணப்படுவதுபோல், ஒரே ஈசனார் எந்த எந்த பக்தனுக்கு எந்த எந்த பிரகாரமாய்க் காட்சி அளித்தாரோ அந்த அந்த பிரகாரங்களாக வர்ணிக்கப்படுகிறார்.

6. வீட்டின் கூறையின்மேல் ஏறுவதற்கு ஏணி, மூங்கில், படிக்கட்டு, கயிறுமுதலிய ஸாதனங்கள் பயன் படுவதுபோல், ஈசனைக் காண்பதற்கும் பலவகை மார்க்கங்களும் ஸாதனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. உலகத்திலுள்ள பிரதி சமயமும் இவ்வழிகளில் ஒன்றைக் காட்டுகின்றது.

**ஸர்வ சமயங்களும் கடவுளை நோக்கிச் செல்லும் மார்க்கங்களே.**

7. சமயபேதங்கள் யாவும் ஸர்வ சக்தியுள்ள பகவானைப்போய் அடைவதற்காக ஏற்பட்ட மார்க்கபேதங்களாம். காளிகட்டத்திலுள்ள ஸ்ரீகாளிதேவியின் ஆலயத்துக்குச்செல்ல வெவ்வேறான பலவகை வழிகளிருக்கின்றன. அவ்வாறே பகவானுடைய வீட்டுக்குச்செல்லும் வழிகளும் பலபலவேயாம். ஒவ்வொரு சமயமும் பகவானை நோக்கிச் செல்வதற்கான ஒவ்வொரு மார்க்கமே யன்றி வேறில்லை.

8. ஒரே தங்கத்தினால் வெவ்வேறு வடிவமும் பெயருமமைந்த பலவகை நகைகளைச் செய்வதுபோல், ஒரே பகவானை வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு நாமரூபங்களால் உபாஸிக்கின்றார்கள். சிலர் அவனைத் தந்தை யென்றும் சிலர் தாயென்றும், சிலர் அவனை நண்பனென்றும் சிலர் நாயகன்

என்றும், சிலர் அவனைத் தங்கள் ஹிருதய கமலத்தில் விளங்கும் மாசிலாமணி யென்றும், சிலர் ஜகந்மோஹந பாலகோபால னென்றும் இவ்வாறு பற்பல பாவனைகளாலும் பிரகாரங்களாலும் உபாஸித்தாலும், இப்பல வகைப் பிரகாரங்களாலும் உபாஸிக்கப்படுகிற பகவான ஒருவரே யாவர்.

9. ஒரு குடும்பத்திலுள்ள நாட்டுப்பெண் தனது மாமனார், மாமியார், முதலானவர்களிடத்தில் அன்போடும் வணக்கத்தோடும் பிரவர்த்திப்பதுடன், தன் கணவனை மேற்சொல்லிய எல்லாரினும் அதிக அன்புடன் சேவிப்பதுபோல், நீ உன் இஷ்ட தேவதையினிடத்தில் ஸ்திரமான பக்தி வைப்பதுடன் இதர தேவதைகளை இகழாமலிருப்பதுமன்றி அவர்களை யெல்லாம் போற்றவும் வேண்டும்.

10. எங்கே மற்றவர்கள் ஸாஷ்டாங்கமாய் விழுகின்றார்களோ அங்கே நீயும் பணிந்து பஜனம் செய்வாய். ஏனெனில் அத்தனை பக்தர்கள் ஒன்று சேர்ந்து பரமனைப் போற்றும் ஸ்தானத்தில் அபார கருணாநிதியான பகவான் அவசியம் வீற்றிருப்பார்.

11. சர்க்கரை யென்னும் ஒரே பதார்த்தத்தினின்றும் பறவை, விலங்கு முதலிய பலவகை யுருவங்களை யமைப்பதுபோல், அருளமுதம் அளிக்கும் அத்விதீயப் பரம்பொருளாகிய ஜகதம்பிகையைப் பற்பல தேசங்களிலும் காலங்களிலும் பலவகை நாமரூபங்களால் பக்த கோடிகள் ஆராதிக்கின்றனர்.

ஸாகார நிராகார ஈசன்.

12. பச்சோந்தியின் நிறத்தைப்பற்றி இருவர் வழிப்போக்கர் உக்கிரமாய் வழக்காடிக்கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் "அதோ அந்த மரத்திலுள்ள பச்சோந்தி அழகிய செந்நிறமாயிருக்கிறது பார்" என, மற்றவன். "இல்லை இல்லை, நீ கூறுவது பிசகு, பச்சோந்தியின் நிறம் செந்நிறமன்று, நீலநிறம்" என்றான். இவ்வாறு இவர்கள் வழக்காடிக்கொண்டே யாதொரு தீர்மானத்துக்கும் வராமல், ஸதா அந்த மரத்தடியிலேயே இருந்துகொண்டு பச்சோந்தியின் நிறத்தைக் கவனித்து வந்த ஒருவனிடம் சென்று, 'ஐயா அந்தமரத்திலுள்ள பச்சோந்தி செந்நிறமானதன்றோ?' என்றொருவன் வினவ, மரத்தடியிலுள்ள மனிதன் 'ஆம்' என விடையளித்தான். "என்ன ஐயா, அது நீலநிறமாயிற்றே, செந்நிறமென்று எவ்விதம் செப்பினீர்?" என்று மற்றவன் கேட்க, அதற்கும் 'ஆமாம்' என்று மறுபடியும் அம்மனிதன் உரைத்தான். பச்சோந்தியின் நிறம் ஸதா மாறிக்கொண்டேயிருக்குந் தன்மையதென்று அம்மனிதன் அறிந்தவனானபடியால், பரஸ்பரம்விரோதமான அவ்விருவர் வினாக்களுக்கும் அவன் 'ஆம்' என ஒரே விடையளித்தான்.

அதுபோலவே ஸச்சிதாநந்தப் பரம்பொருளும் அநந்தரூப விசிஷ்டமானது. அவ்வுருவங்களுள் ஒன்றை மாத்திரம் கண்டவன் அதுதான் கடவுளினுருவம் என்றுணர்கின்றான். ஆனால் அவரது அநந்த கோடி லீலாவிபூதிகளையுங் கண்டுகளித்த ஞானி ஒருவனே "இவ

வனந்த கோடி ரூபங்களெல்லாம் அவ்வநந்த மூர்த்தியின் விபூதிகள்" என்று கூறமுடியும். கடவுள் ஸகளமாயும் நிஷ்களமாயும் விளங்குகின்றார். அவரது மஹிமா ரூபங்கள் அநந்தம். அவற்றை முற்றுங் கண்டவர் ஒருவரு மில்லை.

13. அக்னிக்குப் பிரத்யேகமான உருவம் ஒன்றில்லாமற் போயினும் கட்டைகளிற் பற்றி யெரியும் பொழுது அதற்குச் சில உருவங்கள் அமைகின்றன; ஆகவே உருவமில்லா அக்னியானது உருவத்துடன் கூடியதாகின்றது. அவ்வாறே உருவமற்ற கடவுளும் சில சமயங்களில் திவ்ய மங்களத் திருமேனிகளுடன் விளங்குகின்றார்.

14. மணியின் ஓசை காதில் பட்டுக்கொண்டிருக்கிறவரையில் அது ரூபப்பிரதேசத்தில் இருக்கின்றது. அது காதிற் படுவது நின்று விடும்பொழுது ரூபரஹிதமாகின்றது. அதுபோலவே கடவுளும் ரூபியாயும் அரூபியாயும் விளங்குகின்றார்.

### ப்ரஹ்ம லக்ஷணம்.

15. வின:—ப்ரஹ்மத்தின் லக்ஷணம் யாது?

விடை:—ப்ரஹ்மம் நிர்விசேஷமாயும் நிர்விகாரமாயும், நிச்சலமாயும் மேருகிரியைப்போல் ஸ்திரமாயும் உள்ளது.

16. அவரது நாமதேயம் சின்மயம்; அவரது இருப்பிடமும் சின்மயமே. அவரோ அகண்ட சித்ஸ்வரூபியான பிரபு.

17. பகவான் ஓர் ஊசியின் காதினூடே ஒருயானை யைப் புகுத்துவார். அவர் சங்கற்பித்ததை யெல்லாம் செய்ய அவராலாகும்.

18. சூரிய பிம்பம் எவ்வளவோ மடங்கு பூமியை விடப் பெரியதாயிருப்பினும் வெகுதூரத்திலிருப்பதால் மிகச்சிறிய சக்கிரத்தைப்போற் காணப்படுகின்றது. அதுபோலவே பகவானும் அநந்தராயும் பெரிதினும் பெரியவராயும் இருப்பினும், அவரைவிட்டு வெகுதூ ரம் விலகி யிருக்கிற நாம் அவரது நிஜமான பெருமை யைஅறிய அசக்தர்களாயிருக்கின்றோம்.

19. பகவான் அகண்ட நித்யப்ரஹ்ம ஸ்வரூபியா யும் ப்ரபஞ்சத்தின் பிதாவாயும் இருக்கின்றார். ஸச்சி தாநந்த ஸ்வரூபமாகிய அகண்ட பரப்ரஹ்மமானது எல்லையும் வரம்புமில்லாத அகன்ற கரையற்ற கடலுக் கொப்பாக, அத்தகைய பெருங் கடலில் நான் தட்டித் தடுமாறி அழுகின்றேன். ஆனால் நித்ய லீலாவிநோதி யாய் விஹரிக்கும் ஸகுணப்ரஹ்மமாகிய ஸ்ரீஹரியை நான் அண்டும்பொழுது, கடலில் மூழ்கிப்போகும் ஒரு வன் கரையைக் கண்டதுபோல் ஆறுதல் அடைந்தாநந் திக்கிறேன்.

**ஸகுண நிர்க்குண ப்ரஹ்மம்.**

20. இறுகிப்போன நீர் பனிக்கட்டியாவதுபோல் கடவுளின் ஸகுண ஸ்வரூபமானது ஸர்வ வ்யாபியான நிராகார ப்ரஹ்மத்தின் ஸங்குசித (குறுகிய) ரூபமா கும். அதாவது கநீபூத (வநீஹூத - கட்டியான) ஸச் சிதாநந்தமென்றும் சொல்லலாம். பனிக்கட்டியானது

நீரினின்றும் வேறாகாது, நீரிலேயே யிருந்து பிறகு நீரி லேயே கரைந்துபோய்விடுவதுபோல், ஸகுணப்ரஹ்ம மும் நிர்க்குண ஸ்வரூபத்தினின்று வேறாகாது நிற்ப தாம். ஸகுண ப்ரஹ்மமாகிய பகவான் நிர்க்குண ப்ரஹ்ம மத்தினின்று ஆவிர்ப்பவித்து அதிலேயே இருந்து கடைசியில் அதிலேயே லீநமாகி மறைகின்றார்.

21. கடவுள் ரூபியாயும் அரூபியாயும் ரூபாரூபங் களைக் கடந்தவராயும் விளங்குகிறார். அவர் இன்னும் எத் தகையவர் என்பதைச் சொல்ல அவரால்தான் ஆகும்.

22. பக்தி மார்க்கத்தாற் பரமனைப் போற்றும் பக்தன் ஓர் அவஸரத்தில் ரூபவிசிஷ்டமான ஈசுவரனை யநுபவிப்பதிலும், மற்றோர் அவஸரத்தில் ரூபரஹித மான ஈசுவரனை யநுபவிப்பதிலும் ஆநந்தமடைகின் றான்.

23. நமது ஆப்தமித்ரனை நாம் பிரத்யக்ஷமாய்க் காண்பதுபோல, ரூபத்துடன் விளங்கும் ஈசுவரனையும் கண்ணாரக்கண்டு களிக்கலாம்.

24. * மீன் என்ற ஒரே வஸ்துவானது குழம்பு, கறி, வறுவல் எனப்பலவாறு பக்குவம் செய்யபடினும், ஒவ்வொருவனும் தனக்கிஷ்டமான பக்குவ வகை யையே விரும்புவதுபோல், ஜகதீசன் ஏகனே யாயி னும், பக்தகோடிகளின் அபீஷ்டப்படி அநந்தவிதமான

* வங்காளத்திலே பிராமணர்கூட மத்ஸ்ய போஜிகளான மையின், இத்தகைய உதாரணங்களை ஸாதாரணமாய்க் கூறு வர்.

திருக் கோலத்துடன் விளங்குகின்றமையால், ஒவ்வொரு பக்தனும் தனக்கு பகவான் எந்தக் கோலத்துடன் காட்சி யளித்தாரோ அதனையே சிறந்ததெனக் கொள்கின்றான். சிலருக்கு அவர் பட்சமுள்ள யஜமானனாயும் அன்புள்ள தந்தையாயும் நகை முகத்துடன் சீராட்டும் செல்வத்தாயாயும், மற்றுஞ் சிலருக்குக் காதல் நிறைந்த கணவனாயும், சொற்றவரா தொழுகும் அரும் புதல்வனாயும் அமைகின்றார்.

**மாயையும் ப்ரஹ்மமும்.**

25. வினா:—மாயைக்கும் ப்ரஹ்மத்துக்கு முள்ள ஸம்பந்தம் என்ன?

விடை:—மாயையைச் சுறுசுறுப்பாயும் அசைவுடன் கூடியும் உள்ள ஸர்ப்பத்துக்கு ஒப்பிட்டால், ப்ரஹ்மம் அசைவற்று நிலையாய் நிற்கும் ஸர்ப்பத்துக்கு நிகரெனக் கூறலாம். ப்ரஹ்மமென்ற பெயரால் வழங்கலுறும் அகண்ட நிச்சல தத்வத்தின் சக்திவிசிஷ்டமான தோற்றத்துக்கே மாயையென்று பெயர்.

26. பிரபஞ்சத் தோற்றமெனும் வலைக்குள் விழுந்த நித்யாநந்த ஸ்வரூபமாகிய ப்ரஹ்மம் அழுவதுபோலவும் புலம்புவதுபோலவும் காணப்படுகின்றது.

27. சிஷ்யர்களுக்கு உபதேசித்துக் கொண்டிருக்கையில் குருவானவர் இரண்டு விரல்களை யுயர்த்தி, அதனால் "ப்ரஹ்மம், **மாயை**" என்ற த்வைத பாவனையையும், பிறகு ஒரு விரலைத் தாழ்த்தி, அதனால் மாயை மறையுங்கால் பிரபஞ்சத்தில் எஞ்சியிருப்பது அகண்

டமான பரப்ரஹ்மமே யென்பதையும் காட்டியருளி னார்.

28. மாயாசக்தியும் அவளது லீலாவிலாஸங்களும் இல்லாவிடில் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைய யாரால் முடிந்திருக்கும்?

**ப்ரஹ்மம் வாக்கினல் வர்ணிக்க முடியாதது.**

29. வி:—ப்ரஹ்மத்தை வர்ணிக்க முடியுமா?

**விடை:**—அதை வாக்கினல் விளக்கமுடியாது. கடலையே பார்த்திராத வொருவனுக்குக் கடலை வர்ணிக்க வேண்டுமாயின், "அது பெரும் நீர்ப்பரப்பு, விரிந்த வாரிதி, எங்கு பார்க்கினும் ஒரே ஜலராசி" என்று மாத்திரம் சொல்லக்கூடியதுபோல் ப்ரஹ்மாநுபவியாயுள்ளவன் "ப்ரஹ்மம், எங்கணும் ப்ரஹ்மமே" என்றுமாத்திரமே யுரைப்பான்.

30. வெறும் நூலறிவால் மாத்திரம் ப்ரஹ்மத்தை யறிவிக்க முயல்பவன், வெறும் படத்தாலும் சித்திரத்தாலும் காசியைப் பற்றிப் பிரஸங்கிப்பவனுக் கொப்பாகின்றான்.

31. வேதங்களும், தந்திரங்களும், புராணங்களும் மற்றும் உலகத்திலுள்ள ஏனைய மதநூல்களும் எல்லாம் உச்சிஷ்ட (எச்சில்) ஸமானமேயாம். அவைகள் அடிக்கடி மனிதர்களது வாயால் உச்சரிக்கப் படுவதால் அவற்றிற்கு அத்தோஷம் வாய்த்தது. ஆனல் ப்ரஹ்மத்தின் பூர்ணலக்ஷணம் இன்னதென்று இதுவரையில் ஒருவரும் மனிதவாக்கால் சொல்லவில்லை யாகையால் ப்ரஹ்மம் நிர்த்தோஷமா யிருக்கின்றது.

## ஸவிசேஷ நிர்விசேஷ ப்ரஹ்மம்.

32. நான் ஒரு சமயத்தில் உடையணிந்தும், மற் றொரு சமயத்தில் உடையின்றி நிர்வாணமாயும் இருப் பதுபோல் ப்ரஹ்மமும் சில சமயங்களில் ஸவிசேஷ மாயும் (குணங்களை பொருந்தியும்) சில சமயங்களில் நிர்விசேஷ (குணரஹித)மாயும் விளங்குகின்றது.

33. கடவுள் ஒரு சர்க்கரைக் குன்றைப் போன்ற வர். ஒரு சிற்றெறும்பு அதிலின்று ஒரு துளி சர்க்க ரையையும், அதைவிட பெரிய எறும்பொன்று இன் னும் அதிகமான சர்க்கரையையும் எடுத்துக்கொண்டு போனபோதிலும், சர்க்கரைக்குன்று மாத்திரம் முன் போலவே பெரிதா யிருக்கிறது. பகவத் பக்தர்களும் அவ்வாறே. ஒரு பகவத் குணத்தின் லேசலேசத்தை யவர்கள் அநுபவிக்கும்பொழுதே ஆநந்த பரிதர்களாகி விடுகின்றார்கள். அப்ரமேயனுடைய அநந்த கல்யாண குணங்கள் அனைத்தையும் பூர்ணமாய் அநுபவிக்க ஒரு வர்க்கும் ஆகாது.

## சிவனும் ஜீவனும்.

34. வினா:—சிவன் (கடவுள்) முடிவற்றவர். அநந் தன். ஜீவன் முடிவுள்ளவன்-ஸாந்தன். முடிவுள்ளது முடிவற்றதை யெவ்வாறு அறிய முடியும்?

விடை:—எவ்வாறெனில் அது, ஒரு உப்புப் பது மை கடலின் ஆழத்தைக் கண்டறிவதை யொக்கும். அவ்வாறு செய்வதில் உப்புப் பதுமை கடலிற் கரை ந்து அதனுடன் கலந்து போகின்றது. அவ்வாறே

சிவனை (ப்ரஹ்மத்தை) யடைந்திய முயலும் ஜீவன் தன் ஜீவத்வலக்ஷணமான அஹங்காரத்தை யொழித்து அவனுடன் இரண்டறக் கலக்கின்றது.

35. பாதரஸக் கலயத்தில் போட்ட ஈயத்துண்டு விரைவிற் கரைந்துபோய் விடுவதுபோல் ஜீவனும் சிவாநந்த ஸாகரத்தில் விழும்பொழுது தன் அளவுடன் கூடிய தன்மையையிழந்து கரைந்துபோய் சிவ ஐக்கியத்தை யடைகின்றது.

### ஜீவாத்ம பரமாத்ம ஸம்பந்தம்.

36. வி:—ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தம் யாது?

விடை:—ஒரு மரப் பலகையை ஜலப் பிரவாஹத்தில் மிதக்க விடும்பொழுது, ஜலமானது இரு பிரிவாய்ப் பிரிவதாகக் காணப்படுவதுபோல், அபேத வஸ்துவாகிய ப்ரஹ்மமும் மாயையினால் ஏற்படும் உபாதியால் இரண்டு பட்டதாகக் காணப்படினும், உண்மையில் அவ்விரண்டும் ஒன்றேயாகும்.

37. பந்தத்துக் குட்பட்ட ஆத்மா ஜீவனென்றும் பந்தத்தினின்று விடுபட்ட ஆத்மா சிவனென்றும் பெயர் பெறும்.

38. நீரும் அதில் உண்டாகும் குமிழியும் ஒன்றேயன்றோ? குமிழியானது சிறிதுகாலம் நின்று பிறகு உடைந்து கடைசியில் நீரிலேயே கலந்து போய்விடுகின்றது. அதுபோலவே ஜீவாத்ம பரமாத்மாக்கள் இரண்டும் ஒன்றே. அவர்களிருவருக்குமுள்ள வேற்றுமை அள

வில் மாத்திரமேயாம். ஒன்று அந்தத்துடன் கூடினதாயும் சிறிதாயும் உள்ளது; மற்றொன்று அநந்தமானது. ஒன்று ஆசிரயித்ததாயும் மற்றொன்று ஆசிரயபூதமாயுமிருக்கின்றது.

39. எதுவரையில் ஒருவனுக்கு ப்ரஹ்ம ஸாக்ஷாத்கார பாக்கியம் கிட்டவில்லையோ, எதுவரையில் தாழ்ந்த லோஹமானது ஸ்பர்சவேதியாற் பொன்னாக மாறவில்லையோ, அதுவரையில் 'நான் கர்த்தா' என்ற ப்ரமம் (ப்ரமம்—மயக்கம்) இருந்தேதீரும்; அதுவரையில் "நான் இந்தப் புண்யத்தைச் செய்தேன், நான் அந்தப் பாபத்தைச் செய்தேன்" என்ற த்வைத பாவனை அல்லது பேதஜ்ஞானம் அவசியம் இருந்தேதீரும். இந்த த்வைத பாவனைதான் ஸம்ஸார ப்ரவாஹம் நிரந்தரமாய் ப்ரவஹிப்பதற்குக் காரணமாயுள்ள மாயையென்பது. நல்லொழுக்கத்தைப் பின்பற்றுவதற்கு ஆதாரமாயுள்ள வித்யாமாயை (ஸத்வகுணம் நிறைந்த மாயை)யைத் தஞ்சமென அடைந்தவர்களுக்குப் பரகதி ஸித்திக்கும். எவன் பகவானை ப்ரத்யக்ஷமாய்க் காண்கின்றானோ, எவன் அவனது குணநுபவம் பண்ணுகின்றானோ அவனே மாயைக் கடலைக் கடக்கின்றான். பகவான் கர்த்தா, தான் அகர்த்தா என்றறிபவனே இத்தேஹத்திலிருந்து கொண்டே நிச்சயமாய் விடு பெறுகின்றான்—ஜீவன்முக்தன் ஆகின்றான்.

40. ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தின் இயல்பு யாது? அது கடியாரத்தில் பன்னிரண்டு மணியாகும் பொழுது நிமிஷத்தைக் காட்டும் முள்ளுக்கும் மணி

யைக் காட்டும் முள்ளுக்கும் நிகழும் ஐக்கியத்தை யொக்கும்.

41. கடவுள் எல்லா மனிதர்களிடத்திலும் இருக்கின்றார். ஆனால் எல்லா மனிதர்களும் கடவுளிடத்தி லில்லை. ஆகையால்தான் அவர்கள அல்லற்படுகின்றனர்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள ஸம்பந்தம்.

42. இரும்புக்கும் காந்தத்துக்கும் உள்ள ஸம்பந்தத்தைப் போன்றது கடவுளுக்கும் மனிதனுக்குமுள்ள ஸம்பந்தம். அப்படியாயின் கடவுள் ஏன் மனிதனைக் கவர்வதில்லை? சேற்றில் அழுந்திக் கிடக்கும் இரும்பு காந்தத்தின் கவர்ச்சியால் இழுக்கப் படாததுபோல், மாயையில் அழுந்தியுழலும் ஆத்மாவும் பகவானுடைய கவர்ச்சியை யுணர்கின்றானில்லை. ஆனால் மண்ணானது நீரால் கழுவப்பெற்றுக் கழிந்த காலையில் இரும்பு தாராளமாய் அசைவதுபோல், ஜீவாத்மாவும் தன்னை உலகத்தில் இழுத்துக் கட்டும் மாயையாகிய சேற்றை பிரார்த்தனை, பச்சாத்தாபம் முதலியவற்றால் ஸந்ததம் உண்டாகும் அன்பு நீரால் கழுவுங் காலையில், விரைவில் பகவானால் பிரேமபாசங்கொண்டு இழுக்கப் படுகின்றான்.

43. காந்த ஊசி எப்பொழுதும் உத்தரதிக்கையே சுட்டிக் காட்டுகின்றது. அதனால்தான் கப்பல்கள் தம் வழிதவறாது செல்கின்றன. மனிதனது ஹிருதயமும் பகவானை நோக்கி எதுவரையில் ப்ரவர்த்தித்து நிற்கின்றதோ அதுவரையில் அவன் ஸம்ஸார ஸாகரத்தில் விழுந்து மூழ்கிப்போகாம லிருப்பான்.

44. கடலில் மறைந்துகிடக்கும் காந்தக்கல்லானது அதன்மேற் செல்லும் மரக்கலத்தைக் கவர்ந்து, அதன் இருப்பாணிகளை யெல்லாம் வெளியே பிடுங்கி, பலகைகளையெல்லாம் வெவ்வேருக்கிக் கப்பலைக் கடலில் அமிழ்த்தி விடுகின்றது. அவ்வாறே ப்ரஹ்மஞ்ஞானமென்னும் காந்தமானது ஜீவாத்மாவை யிழுக்கும்பொழுது, அது, மனிதன் இம் மண்ணைச் சேர்ந்தவனென்னும் உணர்ச்சியையும் அவனது அஹங்காரத்தையும் ஒரு நொடிப்பொழுதில் அழித்து, அவ்வாத்மாவைப் பகவானது* அபாரகருணார்ணவத்தில் அமிழ்த்திவிடுகின்றது.

45. எண்ணெயின்றி விளக்கு எரியாததுபோல், கடவுளின்றி மனிதனும் ஜீவிக்க முடியாது.

## கடவுள் வேட்கை.

46. பகவானை யடையவேண்டுமென்று ஆவலாய் மனமுருகி மன்றுடுகிறவன் அவரை நிச்சயமாய்க் காண்கிருனென்று உறுதியாய்ச் சொல்வேன்.

47. எவனது ஆவலும் அன்பும் தியானமும் அதிகமா யிருக்கின்றனவோ அவன் விரைவில் பகவானைக் காண்கின்றான்.

48. பொன் வேண்டுமென்று ஆவலுறும் லோபியைப்போல் உன் ஹிருதயமும் பகவானையடைய ஆவல் கொள்ளட்டும்.

49. சிலர் தங்களுக்குப் புத்திரபாக்கியம் கிடைக்கவில்லையேயென்று கண்ணீர் ஆருய் வடிக்கின்றார்கள்,

* கரையில்லாக் கருணைக்கடலில்.

சிலர் தங்களுக்கு ஸம்பத்து கிடைக்கவில்லையே யென்று துயரத்தால் வருந்தி மெலிந்து போகின்றார்கள். ஆனால் பகவானைத் தாங்கள் பார்க்கவில்லையே யென்று கரைந்துருகுகிறவர்கள் எத்தனைபேர் உளர்? அவரைத் தேடுகிறவன் காண்கிறான். ஆழ்ந்த அன்புடன் கடவுளை நோக்கிக் கரைபவனே அவரைக் கண்டுகொண்டவன்.

50. குழந்தையானது ரோதநம்செய்து பொம்மை ஆட்டு முதலியவை கொடுக்கும்படித் தன் தாயாரை நிர்தாந்திரவு செய்து கேட்டுவாங்கிக் கொள்வதுபோல், எவனொருவன் பகவானைத் தன் அன்பார்ந்த ஆப்தனெனவும், தனக்குச் சொந்தமானவ னென்றும் அறிந்து, எம்பெருமானைக் காணவேண்டுமென்று களங்கமற்ற பாலகன்போல் உள்ளன்புடன் தன்னுள்ளத்தில் கரைந்துருகுகின்றானோ, அவனுக்குக் கடைசியில் பகவான் தமது திவ்யஸௌந்தர்ய தர்ஸநம் அளிக்கின்றார். அத்தகைய நிரதிசயமான பக்திக்குப் பகவான் கட்டுப்படாமல் ஒளிந்திருக்க முடியுமா?

51. எவன் பகவானைப் பெறவேண்டு மென்று பேராவல்கொண் டிருக்கின்றானோ, அவனுக்கு அவசியம் அவர் ப்ரஸந்நமாகிறார் என்பது ஸத்யம் ஸத்யம். இதன் உண்மையை நீங்கள் அநுபவத்தில் கண்டுகொள்ளலாம். உண்மையான உள்ளன்புடன் அடுத்து மூன்றே நாள் முயன்று பாருங்கள், உங்களுக்குக் கார்யஸித்தியாவது திண்ணம்.

52. "நான் இந்த ஜந்மத்திலேயே பூர்ணாநுபவம் அடையவேண்டும்,மூன்றுநாளில் எனக்குப்ரஹ்மதர்ஸந

...கவேண்டும்; எம்பெருமானது திருநாமத்தை யொரு தரம் உச்சரித்த மாத்திரத்திலேயே அவரை என் ஹிருதயகமலத்தில் எழுந்தருளச் செய்வேன்" என்ற இத்தகைய தீவிரமான பக்திக்குப் பகவான் சீக்கிரம் கட்டுப்படுகிறார். மந்த பக்தர்களுக்கு ஒருகால் அவரது ஸாக்ஷாத்காரம் கிடைப்பதாயிருந்தால்கூட அநேக யுகங்கள் செல்லும்.

53. பகவத் ஸாக்ஷாத்காரம் கிட்டுவதற்கு எதை அர்ப்பிக்கவேண்டும்? பகவானைத் தரிசிக்கவேண்டுமாயின் அவனுக்கு உன் * தநுவையும், மனத்தையும், தனத்தையும் ஸமர்ப்பிக்கவேண்டும்.

ப்ரஹ்மாந்வேஷணம்.

54. கள்ளனொருவன் ஓர் இருட்டறையினுட் புகுந்து அங்குள்ள பலவகைப் பொருள்களையும் தொட்டுக்கொண்டே போய், மேஜை யொன்றின்மேல் தன் கைபட, 'ஈதல்ல' வென்று அப்புறம்சென்று, அங்கே நாற்காலி யொன்று கையிற்பட 'இதுவுமல்ல' என்றிவ்வாறு அவ்வறையிலுள்ள வஸ்துக்களை யெல்லாம் ஒவ்வொன்றாய்ப் பரிசோதனை செய்து பார்த்து விலக்கி, கடைசியில் ஆஸ்தி நிறைந்த பெட்டியானது அவன் கையில் அகப்பட்டவுடனே 'இதோ இருக்கிறது' என்று சொல்லிக்கொண்டு மகிழ்கின்றான். இதனுடன் அக்கள்ளனது சோதனை முடிந்துவிட்டது. இதைப் போல்தான் ப்ரஹ்மாந்வேஷணமும். (ப்ரஹ்மாந்வேஷணம் - ப்ரஹ்மத்தைத் தேடுதல்).

* உடல் பொருள் ஆவிகளை.

55. உனக்குக் கார்யஸித்தியாக வேண்டுமாயின் நீ ஸாதனஸம்பன்னன் ஆதல்வேண்டும். "பாலில் வெண்ணெய் இருக்கிற" தென்று நீ எவ்வளவு தான் கத்தினாலும் அணுமாத்திரமும் வெண்ணெய் உனக்குக் கிடைக்காது. உனக்கு வெண்ணெய் வேண்டுமானால், பாலைத் தயிராக்கிப் பிறகு நன்றாய் அதைக் கடைந்தால் வெண்ணெய் கிடைக்கும். அதுபோலவே ப்ரஹ்மஸ்வரூப ஸாக்ஷாத்காரம் கிட்டவேண்டுமாயின், பக்தி, யோகம் முதலிய ஸாதனங்களை ஜாக்கிரதையாய் அநுஷ்டிக்க வேண்டும். அப்படிக்கின்றி 'ஈஸ்வரா! ஈஸ்வரா!' என்று வீணே கதறுவதில் யாது பயன்?

56. பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்கவேண்டும்.

57. நிஸ்ஸப்தமான ஒரு ரஹஸ்ய ப்ரதேசத்திலாவது நிர்மாநுஷ்யமான ஓர் அரண்யத்திலாவது பவித்ரமான ஹிருதய கமலத்திலாவது பகவானை யாராதிக்கக் கடவாய்.

58. **வினா:**—பகவானை நோக்கி உரத்த குரலிற் ப்ரார்த்திக்கவேண்டுமா?

**விடை:**— நீ எவ்விதமாவது உன் இஷ்டப்படி ப்ரார்த்திக்கலாம். எறும்புகளின் காலடி சப்தத்தைக் கூடக் கேட்கும் பகவானுக்கு உன் ப்ரார்த்தனைச் சப்தம் கேட்காமற் போகுமா?

59. எதுவரையில் ஒருவன் அல்லாஹோ! அல்லாஹோ! (ஈஸ்வரா! ஈஸ்வரா!) என்று உரத்துக் கத்து

கிறதோ அதுவரையில் அவனுக்கு அல்லா (கடவுள்) ப்ரத்யக்ஷமாகவில்லையென்று நினைத்துக்கொள். ஏனெனில் பகவத் ஸாந்நித்யத்தைப் பெற்றவன் அமைதியடைந்து ஶாந்தமூர்த்தியாய் விளங்குவனன்றோ!

60. வின:—பகவான் எங்கே வீற்றிருக்கிறார்? அவரைத் தரிசிப்பது எப்படி?

விடை:—ஆழ்ந்த கடலிலுள்ள முத்தைப் பெற வேண்டுமாயின் மிகவும் சிரமப்பட்டு உயிரைக்கூடப் பொருட்படுத்தாது முழுகவேண்டுவதுபோல, ஸச்சிதாநந்த ஸ்வரூபியைத் தரிசிக்கவேண்டுமானால் விஶேஷ பிரயாஸைப் பட்டு இடைவிடாத யோகாப்யாஸம் முதலிய ஸாதனங்களைச் செய்யவேண்டும்.

61. கடலில் ஒருதடவை முழுகி முத்துக்கள் அகப்படாவிட்டால், கடலில் முத்துக்களே கிடையாவென்று கூறிவிடாமல், விடாமுயற்ச்சியுடன் பலதடவை முழுகும் பக்ஷத்தில் எல்வாறு கடைசியில் கார்ய சித்தியாகுமோ, அவ்வாறே ப்ரஹ்மஜ்ஞானத்திலும் முதலில் இடையூறுகள் நேரிடினும் வெறுப்படையாமல் ஊக்கமாய் முயலும் பக்ஷத்தில் முடிவில் ஈசனருளைப் பெறுவது நிச்சயம்.

62. வின:—எம்பெருமானை யாம் எவ்வாறு தரிசிக்கலாம்?

விடை:—ஒரு பெரிய அழகிய ரோஹித மத்ஸ்யத்தைப்பிடிக்க விரும்பிய செம்படவன் தூண்டிலில் ஒரு மாம்ஸத்துண்டைக் கட்டி அதை நீரில் எறிந்து

அவ் இரையை மீன் விழுங்கும் வரையில் பொறுமை யாய்ப் பார்த்துக்கொண்டு நாழிகைக் கணக்காய்க் காத் திருப்பதுபோல், ஸாதனங்களையெல்லாம் பொறுமை யாய் ஆசரிக்கும் பக்தனும் கடைசியில் எம்பெருமா னது காட்சியைப் பெறுகின்றான்.

**பகவானைத் தரிசிக்கும் விதம்.**

63. **வினா:**—பகவான் ஸர்வவியாபியாயின், அவ ரை நாம் ஏன் காண்பதில்லை. ?

**விடை:**—நீர்ப்பாசி பரவிய பொய்கையின் கரைப் பக்கமாய் நின்று பார்த்தால் அதில் ஜலம் இருப்பதாக வே தெரியாது. அதுபோலவே, உன் கண்கள் மாயை யால் மூடப்பட்டிருப்பதால், கடவுள் காணப்படவில்லை யென்று முறை யிடுகிறாய். எம்பெருமானைக் காணவே ண்டுமாயின் உன் கண்ணிலுள்ள மாயா படலத்தை நீக் கவேண்டும்.

64. ஆதித்தியனை மேகம் மறைப்பதுபோல் ப்ர ஹ்மத்தை மாயை மூடி யிருக்கின்றது. மேகம் அகலும் பொழுது ஆதித்திய தரிசனம் உண்டாகின்றதுபோல், மாயை தொலையும்பொழுது ப்ரஹ்மமும் ப்ரகாசிக் கின்றது.

65. நாணலும் நுரையும் மூடிய பொய்கையில் விளையாடும் மீன்களை வெளியிலிருந்து பார்க்க முடியா ததுபோல், மாயை யெனும் திரையால் மூடப்பெற்று மனிதர் பார்வைக்குத் தென்படாமல் ஜீவர்களது ஹிரு தயங்களில் அதிருசியராய்த் திருவிளையாடல் புரிகின் றார் தேவதேவன்.

66. ஆசையின் வாசனை சிறிதேனும் உள்ளவரைக்கும் கடவுளைக் காண முடியாது. ஆகையால் உன் அற்ப ஆசைகளைத் திருப்திசெய்வதாலும், பேராசைகளை விவேக விசாரணைகளாலும் ஒழித்துவிடு.

67. நூலின் நுனியில் ஒரு சிற்றிழை பிரிந்து நின்றாலும் அந்நூல் ஊசியின் காதில் நுழையாதது போல், அவாவின் அடையாளம் சிறிதிருந்தாலும், மோக்ஷஸாம்ராஜ்யத்தை அடைய முடியாது.

68. ஒரு மஹாராஜாவைத் தரிசிக்க விரும்புகின்றவன் த்வாரபாலகர் ஸிம்ஹாஸன ரக்ஷகர் முதலிய ஆஸ்தான உத்தியோகஸ்தர்களுடைய தயவை ஸம்பாதிக்கவேண்டியது அவசியமாவதுபோல், பகவானைத் தரிசிக்க விரும்பும் பக்தனும் பக்தியோகம் முதலிய பலவகை ஸாதனங்களை யநுஷ்டிப்பதன்றி அநேக பக்தர்களுக்குத் தொண்டுபுரிந்து ஞானிகளுடன் ஸஹவாஸமும் செய்யவேண்டும்.

69. 'கஞ்சா' அல்லது 'பங்கி' என்னும் சொல்லையுச்சரித்த மாத்திரத்தினலேயே மனிதனுக்கு மயக்கம் உண்டாகிவிடாது. மயக்கம் உண்டாகவேண்டுமானல் கஞ்சாவைக் கொண்டுவந்து அரைத்து நீரிற் கலந்து குடிக்கவேண்டும். "ஈசுவரா! ஈசுவரா!" என்று வாளா உரக்கக் கத்துவதிற் பயனில்லை. பக்தியோகத்தைக் கிரமமாய் அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் பகவத் ஸந்தர்ஶனம் உண்டாவது திண்ணம்.

**பகவந்நாமம்.**

70. பக்தவத்ஸலனாகிய பரந்தாமனுடைய நாமத்தை யிடைவிடாமல் உச்சரிப்பதாகிய பக்தியோகமே இக் கலியுகத்திற்கேற்ற சிறந்த முக்திஸாதனமாகும்.

71. தேவதேவனைத் தரிசிக்கவேண்டுமாயின் ஹரிநாம பஜனையில் பூர்ணவிச்வாஸமும் நித்யாநித்ய வஸ்து விவேகமும் அவசியம் இருத்தல் வேண்டும்.

72. அறிந்தோ அறியாமலோ எவ்விதத்திலாவது அமிர்த ஸரஸ்ஸில் (அமுதப் பொய்கையில்) விழுந்த மனிதன் இறவாமை யடைவதுபோல், பகவந் நாமத்தை பிரயத்தினமூலமாகவோ, பிரயத்தினமின்றியோ, எவ்விதத்திலாவது உச்சரிப்பவனுக்கு இறுதியில் அமிர்த வடிவமாகிய முக்தி கைகூடுவது நிச்சயம்.

73. ஒளியளித்தல் விளக்கின் இயல்பு. அதன் உதவியைக்கொண்டு சிலர் அந்நம் ஆக்கலாம், சிலர் பொய்ப்பத்திரம் ஸ்ருஷ்டனை செய்யலாம், மற்றுஞ் சிலர் பாகவத பாராயணமுஞ் செய்யலாம். அதுபோலவே பகவந்நாமத்தின் ஸஹாயத்தால் சிலர் மோக்ஷம் அடைவதற்கும், சிலர் தங்களுடைய தீயவெண்ணங்களை நிறைவேற்றிக்கொள்வதற்கும் முயல்கின்றனராயினும், எம்பெருமானது திருநாமம் மாத்திரம் அவற்றால் பாதிக்கப்படாமல் என்றும் நிஷ்களங்கமாய் விளங்குகின்றது.

74. புத்திபூர்வகமாயோ, புத்தியின்றியோ, பிரயத்தின சகிதமாகவோ, பிரயத்தின மின்றியோ, நாம

பகவந் நாமத்தை எந்நிலையில் உச்சரித்தபோதிலும் அந்நாமோச்சாரணத்தின் பலன் நமக்குத் தவறாமல் கிடைக்கும். சுயபுத்தியால் ஆற்றுக்கேகி ஸ்நாநம் செய்பவனும், மற்றொருவனால் நீரிற் பிடித்துத் தள்ளப்பெற்று ஸ்நாநம் செய்பவனும், தூங்குங் காலையில் தன்மேல் ஜலம் ஊற்றப் பெறுகிறவனும் நதிஸ்நாநபலத்தை ஸமானமாய் அடைகின்றார்கள்.

### கடவுளைக் கண்டவர்சள்.

75. கடவுளைக் கண்டவனே உண்மையான ஞானியாவான். அவன் நிலை குழந்தையின் நிலையைப் போன்றது. குழந்தைக்கும் ஒருவித அஹங்காரம் இருப்பதாகத்தோற்றினும், அது வெறுந் தோற்றமேயன்றி தேற்றமான அகந்தையன்று. வளர்ந்த மனிதனது அஹங்காரத்தை நோக்கப் பால்மணம்மாறாப் பசிய குழந்தையின் அஹங்காரம் சூனியமேயாகும்.

76. குழந்தையின் அஹங்காரத்தைக் கண்ணாடியிற்றோன்றும் முகத்துக் கொப்பிடலாம். கண்ணாடியிலுள்ள முகமானது உண்மையான முகத்தைப் போலவே தோற்றினும், அதனால் ஒருவருக்கும் யாதொரு தீங்கும் விளைவதில்லை.

77. வினா:—எல்லோரும் கடவுளைக் காண்பார்களா?

விடை:—எவனும் சுத்த உபவாஸம் இருப்பதில்லை. சிலர் காலை 9-மணிக்கும் சிலர் பகலுக்கும் மற்றுஞ் சிலர் மாலை சூரியாஸ்தமன மானபிறகும் போஜனம் செய்வார்கள். அதுபோலவே இப்பிறவியிலாகிலும்

அல்லது பல பிறவிகள் கழித்தாகிலும் எப்பொழுதாவது ஒருகால் எல்லோரும் கடவுளைக் காண்பார்கள்.

### கடவுள் தாமே ப்ரயத்யக்ஷமாகிறார்.

78. காவலாளன் தன் கையிலுள்ள கருநிறமான லாந்தரைக்கொண்டு, அதன் கதிர்களை எவரெவர்மீது வீசச்செய்கிறானோ அவர்களை யெல்லாம் பார்க்கிறான். ஆனால் அவன் அந்த லாந்தரைத் தன் பக்கமாய்த் திருப்பாதிருக்கும் வரையில் அவனை மற்றொருவரும் பார்க்க முடியாது. அதுபோலவே கடவுள் எல்லோரையும் பார்த்துக் கொண்டிருந்தும், அவரே கருணைகூர்ந்து பிரத்யக்ஷமாகிற வரையில் அவரை ஒருவராலும் பார்க்க முடியாது.

79. வினா:—ஜகதம்பிகையை நாம் ஏன் காணமுடியாது?

விடை:—அவ்வம்மை உயர்குலத்தி லுதித்த உத்தமிபோல் அந்தப்புரத்தில் திரைக்குள்ளிருந்தே தான் எல்லோரையும் பார்த்துக்கொண்டிருந்தும் தன்னைமாத்திரம் ஒருவரும் பார்க்கவொட்டாமல், எல்லாக்காரியங்களையும் நடத்திவருகிறாள். அவளது அன்பிற்குரிய பக்தர்கள் மாத்திரம் மாயையெனும் திரையைத் தள்ளிக்கொண்டு அவளது ஸந்நிதானஞ்சென்று அவளைத் தரிசிக்கின்றார்கள்.

80. ஓர் அன்னைக்கு அநேக குழந்தைகள் உள. அவள் ஒரு குழந்தைக்குப் பவளசரமும் மற்றொன்றுக்குப் பொம்மையும், இன்னொரு குழந்தைக்குச் சில

தின்பண்டங்களும் கொடுக்க, அக் குழந்தைகள் அவற்றைப் பெற்றுக்கொண்டு மகிழ்ந்து தங்கள் தாயாரையே மறந்துவிட் டிருக்கின்ற சமயத்தில் அவள் தன் வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொள்ளுகிறாள். ஆனால் அக்குழந்தைகளுக்குள் எதுவாயினும் ஒன்று தன்விளையாட்டு சாமான்களை யெறிந்துவிட்டு "அம்மா, அம்மா" என்று கத்துமாகில், அவள் உடனே அதனிடம் ஓடி அதைத் தன் கையாற் கட்டியணைத்து முத்தமிடுகிறாள். அவ்வாறே ஏ மனிதனே, நீயும் உலக வின்பங்களைக்கண்டு மயங்கி உனைப் பெற்றெடுத்த லோக மாதாவை மறந்துவிட்டனை. ஆனால் நீ அவற்றைத் தூரத்தள்ளிவிட்டு அவளை நோக்கி ஓலமிடுவாயாகில் அவள் உடனே ஓடிவந்து உன்னை வாரியணைத்தாட்கொள்வள்.

81. மநமே! உள்ளன்புடன் உலக மாதாவைக் கூவியழை. அப்பொழுது அவள் ப்ரேமையுடன் விரைவாய் உன்னை யாட்கொள்ள ஓடிவரும் விதத்தைப் பார்க்கலாம். அன்பர்கள் உள்ளங் கசிந்துருகிக் கடவுளைக் கூவியழைக்கும்பொழுது அவர் நொடிப்பொழுது கூட மனங் கனியாமலிரார்.

### கடவுள் அதிஅற்பமான காணிக்கையையும் திருவுள்ளம் பற்றுகிறார்.

82. நல்ல பூஸ்திதியுள்ள கனவான் எவ்வளவு செல்வவானா யிருப்பினும், தன் கீழ் வேலைசெய்து பிழைக்கும் குடியானவன் அன்பாய்க் கொண்டுவந்தளிக்கும் அற்ப காணிக்கையையும் அங்கீகரித்து சந்தோஷிப்பதுபோல், கடவுள் எவ்வளவு மகிமையும்

மேன்மையும் பொருந்தியவரா யிருப்பினும், தமது அடியார்கள் அன்புடன் மனப்பூர்வமாய் அர்ப்பிக்கும் அற்ப வஸ்துவையும் பெரிதாய்க்கருதி ஆநந்திக்கின் றூர்.

83. குளங்கள் முதலிய நீர்நிலைகளில் மீன்கள் எவ் வளவு தூரத்தில் இருந்தபோதிலும் ருசியும் மணமும் பொருந்தி மநோஹரமாயுள்ள மாம்ஸத்துண்டு கட்டிய தூண்டிலை நீரில் எறிந்தவுடனே அவை யாவும் எல்லாப் பக்கங்களினின்றும் அவ்விடத்தை நோக்கி வேகமாய்த் துள்ளிவருவதுபோல், பக்தியும் பிரேமையும் நிறைந்து ததும்பும் ஹ்ருதயமுள்ள பக்தர்களுக்குப் பகவான் சீக் கிரத்திற் பிரத்யக்ஷமாகிறூர்.

**கடவுள் அன்பர்களது ஹ்ருதயத்தில் எழுந்தருளல்.**

84. வினு:—அன்பர்களது ஹிருதயத்தில் கடவு ள் எழுந்தருளி யிருப்பதற்கு அடையாளங்கள் எவை?

**விடை:**—அருணோதயமானது சூர்யோதயத்தை முன் அறிவிப்பதுபோல், அவாவின்மையும், அகத்தூய் மையும், நல்லொழுக்கமும் ஜீவனுக்கு ஜகதீசன் பிரத்ய க்ஷமாவதை முன் நின்று காட்டுகின்றன.

85. அரசன் தன் சேவகன் தனக்குச் செய்யும் விருந்தை ஏற்பதன்பொருட்டு அவன் குடிலுக்குச் செல்லுமுன்னமே, அச்சேவகன் தன்னை முறைப்படி யெதிர்கொண்டு மேன்மைப்படுத்துவதற்கு வேண்டிய ஆஸனம் பூஷணம் போஜனபதார்த்தம் முதலியவற்றை தன் சொந்தத்திலிருந்தே அனுப்பவதுபோல, பகவான்

மனிதனது ஹிருதயத்தில் பிரஸங்கமாவதற்கு முன்னமே, வாத்ஸல்யம், பக்தி, பிரேமைமுதலிய ஸத்குணங்கள் பக்தனது அன்பாற் கசிந்துருகும் ஹ்ருதயத்தில் உதிக்குமாறு அருள்புரிகின்றார்.

86. வினா—மனம் எந்நிலையில் இருக்கையில் பகவத் தரிசனம் உண்டாகின்றது?

விடை:—மனம் நிச்சலமாயும் நிர்மலமாயு மிருக்கையில்தான் பகவானைத் தரிசிக்கலாம். இகலோக வாஞ்சையெனும் காற்றினால் சஞ்சலமாய் அலையும் மனக்கடலில் ஈசுவர பிரதிபிம்பமாவது ஈசுவர தரிசனமாவது உண்டாவது அசாத்தியம்.

87. ஆசையெனும் சண்டமாருதத்தால் இருதயாகாசம் மோதப்பட்டிருக்கிறவரையில் அதில் ஈசுவரப்ரகாசத்தைக்காண வழியேயில்லை. பகவத்குணாநுபவத்தில் பதிந்து நிச்சலமாயும் ப்ரசாந்தமாயும் நிற்கும் இருதயத்திற்றான் அத்திவ்ய தேஜோர்மய தரிசனம் உண்டாகின்றது.

88. (i) இவையெல்லாம் யானே (ஸோஹம் ப்ரஹ்ம) (ii) இவை யெல்லாம் நீயே (தத்வம் அஸி, ஸர்வம் ப்ரஹ்மமயம்) (iii) நீ ஆண்டான் நான் அடிமை (ஸேவ்யஸேவகபாவம்) எனும் இம் மூவகை நிலைகளில் எதையாயினும் பின்பற்றி பரிபக்வம் அடையும் மனிதனுக்குப் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் கைகூடுகின்றது.

89. பதியே பரதெய்வமென்று போற்றிப்பக்தி செய்யும் பெண்மணியானவள் ஸதீ யென்றும் பதிவிரதை யென்றும் புகழ்பெற்றுத் தன் பிராணநாயகனது அன்பைப் பெற்று மகிழ்வதுபோல், தன் இஷ்ட தேவதையைப் பக்தியோடு வழிபடும் அன்பனும் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றாநந்திக்கின்றான்.

90. ஸ்பரிசவேதிக்கல்லின் பரிசத்தால் எஃகாலான கத்தி பொன்மய கத்தியாகமாறி, அதன் வடிவம் மாத்திரம் முன்போலவே இருப்பினும் எஃகுகத்தியைப்போல் எவருக்கும் தீங்குசெய்ய முடியாமற்போகின்றதுபோல், ஸர்வேசுவரனது சேவடிகளைப் பணிந்த மனிதனது வெளிவடிவம் மாறாதிருப்பினும்அவன் பாவச்செய்கைகள் மாத்திரம் முன்போல் ஒன்றும் புரியான்.

91. அவன் கடவுளது திருவுருவக் காட்சியைக் கண்டுவிட்டான், அவன் இயல்பும் அதுமுதல் மாறிவிட்டது.

### கடவுளைக் கண்டவனை உலகம் பாதிக்காது.

92. ஒருவன் சந்தை கூடும் இடத்திற்குத் தொலைதூரத்திலுள்ளவரையில் ஹோ ! ! ஹோ ! ! என்ற ஒருவித ஆரவாரத்தை மாத்திரம் கேட்கின்றானாயினும், சந்தைக்குட் சென்ற பிறகு முன்போல் ஆரவாரம் கேட்பதொழிந்து, ஒருவன் உருளைக்கிழங்கு 'பேரம்' செய்வதையும், மற்றொருவன் கத்தரிக்காய் 'பேரம்' செய்வதையுந் தெளிவாய்த் தெரிந்துகொள்வதுபோல்,

ஸாதகன் ஸர்வேசுவரனுக்குத் தூரமாயிருக்கும் வரையில் மதவாதிகளின் வாதப்ரதிவாத விதண்டாவாத கோலாஹலத்தை மாத்திரம் கேட்பவனாகிறான். ஆனால் அவன் பகவத்ஸாமீப்யத்தை யடையும்பொழுது இச்சமயவாதிகளின் விதண்டாவாதங்கள் ஒழிந்துபோகப், பரமபதியின் அரிய ரஹஸ்யங்களை யெல்லாம் அவன் கரதலாமலகம்போல் அறிகின்றான்.

93. 'கண்ணாம்பூச்சி' யெனும் விளையாட்டில் தாய்ச்சியைப்போய்த் தொட்டுவிடுகிறவன் குருடனாவதில்லை. அதுபோல் கடவுளை யொருமுறைக் கண்டுவிட்டவனை இவ்வுலகபாசங்கள் கட்டுப்படுத்தா. தாய்ச்சியைப் போய்ப்பிடிக்கிறவன் திருடனாக்கப்படாமல் சுயேச்சையாய்த் திரிவதுபோல் எம்பெருமானது திருவடிகளைத் தொட்ட தொண்டர்கள் இப்பிரபஞ்சநாடக அரங்கத்தில் நிர்ப்பயமாய் ஓடியாடி உலக மாயாபாசங்களினின்றும் விடுதலை பெறுகின்றமையால் அவர்களை மீண்டும் எதுவும் ஒருகாலும் பந்திக்காது.

94. பால் நீருடன் விரைவாய்க் கலப்பதுபோல் அதினின்று எடுக்கப்பட்ட வெண்ணெய் மாத்திரம் நீருடன் கலக்காது அதின்மேலேயேமிதக்கின்றதுபோல், ஆத்மா ப்ரஹ்ம ஸ்வரூபமானபின்னர் பக்குவமடையாத பலகோடி ஆத்மாக்களுடன் அளவளாவி யிருப்பினும் அப்பிரபஞ்ச ஸஹவாஸத்தால் அவனுடைய நிர்மல வியல்பினுக்கு மாத்திரம் யாதொரு ஹாநியும் நேரிடாது.

95. பரிசவேதியின் பரிசத்தால் தங்கமாய் மாறின இரும்பு பூமியின்கீழ் புதைக்கப்படினும், குப்பை

யுடன் குப்பையாய் எறியப்படினும், எப்பொழுதும் தங்கமாகவே யிருக்குமேயல்லாது பழைய நிலையாகிய இரும்பின் நிலையை யடையாது. அதுபோலத்தான் ஒருமுறையேனும் எம்பெருமானது திருவடிகளில் மன த்தைப் பதித்தவனுடைய நிலையும். அவன் ஜனங்களின் ஆரவாரம் நிறைந்த உலகத்தில் இருப்பினும், நிர்மா நுஷ்யமான அரண்யத்தில் இருப்பினும், ஒருகாலும் எதனாலும் களங்கமடையான்.

### கடவுளைக் கண்டவனுக்கு உலகவின்பங்களிலுள்ள பராமுகம்.

96. அமுதத்துக்கொப்பான இனிமையுள்ள கரு ம்பை ஒருமுறை சுவைத்தவன் பேய்க்கரும்பைத் தின்ன விரும்பாததுபோலும், அரசர் மாளிகைகளில் ஹம்ஸதூலிகாதல்பத்தில் நித்திரைச்சுக மநுபவித்த வன் அழுக்குநிறைந்த அற்பக் குடிசைகளில் தூங்க ஆசைகொள்ளாததுபோலும்,ப்ரஹ்மாநந்த திவ்யாமிர்த ரஸத்தை யொருமுறைப் பருகினவன் உலகத்தின் நிலை யில்லா அற்ப சுகங்களில் மகிழ்வடையான்.

97. அரசனையே அருங்காதலனாய்ப் பெற்ற பாக் கியவதி தெருவில் திரியும் பிச்சைக்காரனுடைய காதல் விண்ணப்பத்தை யேற்காது துச்சமாய்க் கருதுவது போல், எம்பெருமானது திருவருளைப் பெற்ற பக்தன் உலகத்தின் தாழ்ந்த சுகங்களை விரும்பான்.

98. நூதனமாய் விவாஹம் செய்யப்பெற்ற வனி தையானவள் பிள்ளை பெறுந்தவரையில் வீட்டுக் காரி யங்களைச் செய்வதிலேயே சிரத்தையா யிருக்கின்றாள்.

ஆனால் அவளுக்கு ஒரு பிள்ளைமாத்திரம் பிறந்துவிட்டு டும், அதுமுதல் வீட்டுக் காரியங்களில் அவளுக்குக் கவ னம் குறைகின்றது. அவற்றைச் செய்வதில் அவ்வளவு திருப்தியும் உண்டாவதில்லை. அதற்குப் பதிலாக அவ ள் புதிதாய்ப் பிறந்த குழந்தையை நாள்முழுவதும் தாலாட்டிச் சீராட்டி உள்ளம் பூரித்து முத்தமிடுகின் றாள். அதுபோலவே மனிதனும் அஞ்ஞான தசையில் பலவிதத் தொழில்களைப் புரிவதில் சுறுசுறுப்பா யிருந் தாலும் ஹிருதய கமலத்தில் எம்பெருமானைத் தரிசித்த வுடனே, அவற்றிலெல்லாம் திருப்தி யடையாதாகி அவ ற்றை விட்டுவிடுகின்றான். அதுமுதல் எம்பெருமானை சேவிப்பதிலும் அவனது திருவுள்ளத்துக் குகப்பான கைங்கர்யங்களைப் புரிவதிலுமே ஆநந்தமடைந்து மற் றெத்தொழில் புரிவதிலும் மனமற்றவனாகி அப் பிரஹ் மானந்தானுபவத்தினின்றும் மனதைப் பறிக்க விரு ப்பமற்றவனாகின்றான்.

### ஞானமும் பக்தியும்.

99. ஞானமும் பக்தியும் முடிவில் ஏகமேயன்றி வேறல்ல. சுத்த ஞானத்திற்கும் சுத்த பக்திக்கும் வேற் றுமையே கிடையாது.

100. ஞானத்தைப் புருஷனுக்கும் பக்தியைப் பெண்ணுக்கும் ஒப்பிடலாம். புருஷனாகிய ஞானமா னது எம்பெருமானது மாளிகையின் வெளியறைகள் வரையில்தான் செல்லலாம். ஆனால் அவனுடைய அந் தப்புரத்தில் ஸ்திரீரூபமாகிய பக்தி தவிர வேறெவரும் பிரவேசிக்க முடியாது. இந்தப் பக்தி ஒன்றுக்குத்தான்

பரமேசுவரனது அந்தரங்க ரகஸ்யங்களை யெல்லாம் அறியும் சுதந்தரமுண்டு.

101. ஸ்ருஷ்டிக்குச் சிவன் சக்தி எனும் இருவரும் அவசியம். உலர்ந்த மண்ணால் ஒரு குயவனாலும் குடத்தைச் செய்தல் முடியாது. ஜலமும் வேண்டியிருக்கிறது. அதுபோல் சக்தியின்றி சிவனே சிருஷ்டித்தொழிலை நடாத்துதல் முடியாது.

விக்ரஹாராதனம்.

102. குழந்தைகள் விளையாடுவதன்பொருட்டு மரத்தாற் செய்யப்பட்ட பழமும் யானையும் உண்மையான பழத்தையும் உயிருள்ள யானையையும் ஞாபகப்படுத்துவதுபோல், ஜனங்கள் ஆராதிக்கும் விக்ரஹங்களும் நிராகாரமாயும் நித்தியமாயுமுள்ள பிரஹ்மத்தை ஞாபகப்படுத்துகின்றன.

103. விக்ரஹாராதனம் கூடாதென்று கண்டித்து வந்த கேசவ சந்திரஸேனரைநோக்கிப் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணதேவர் கூறியது:—"இவ்விக்ரஹங்கள் ஏன் உமது மனதில் மண், கல், கட்டை முதலிய எண்ணங்களை உண்டாக்குகின்றன ? இவ்வுருவங்களிலே கூட நித்யாநந்த சித்ஸ்வரூபிணியான ஜகதம்பிகையின் ஸ்வரூப ஸாந்நித்யத்தை நீர் ஏன் அநுபவித்தல் கூடாது ? நித்யமாயும் நிராகாரமாயும் உள்ள ப்ரஞ்ஞாநகநமாகிய பரப்ரஹ்மத்தின் திவ்யமங்கள விக்ரஹங்களே இப்பிரதிமைகள் என்றறிந் துய்வீராக."

104. தான் பூஜிக்கும் தேவதாவிக்ரஹங்களை ஸர்வேசுவரனது லிங்கங்கள் (குறிகள்) எனக் கருதுகின்ற

வன் ஈசுவரனையே யடைகின்றான். ஆனால் அவைகளை மண்ணாலும கல்லாலும் கட்டையாலும் செய்த வெறும் பொம்மைகளென்று நினைப்பவனுக்கு அவ்விக்ரஹாராதனம் யதொரு பயனையும் அளிக்காது.

## ஸர்வம் ப்ரஹ்மமயம்.

105. குருவானவர் ஸகல பதார்த்தங்களும் நாராயணஸ்வரூபம் என்றுசொல்ல, அதன் லக்ஷ்யார்த்தத்தை யுணராது வாச்சியார்த்தத்தை மாத்திரம் அறிந்த சிஷ்யன் தெருவிற் போய்க்கொண்டிருக்கையில் ஒரு யானையைக் கண்டான். யானைப்பாகன் அம்பாரியின்மேலிருந்து 'ஒதுங்கு! ஒதுங்கு!' என்று உரத்துச் சொல்வதைக்கேட்ட சிஷ்யன் தனக்குள், 'நான் ஏன் ஒதுங்க வேண்டும்? நானும் நாராயணன், யானையும் நாராயணன். நாராயணனிடத்தில் நாராயணனுக்கு என்ன பயம்?' என்று சிந்தித்தான். இவ்வாறு சிந்தித்துக்கொண்டே அவன் ஒதுங்காமலிருந்தான். கடைசியில் யானை அவனைத் தன் துதிக்கையால் தூக்கித் துப்புறக் கீழே மோதிற்று. அதனால் அவன் மிக்க காயப்பட்டுத் தன்குருவினிடம் சென்று தன் திருவிளையாடலையெல்லாம் அவருக்குரைத்தான். அதற்கவர் "சரிதான், நீயும் நாராயணன், யானையும் நாராயணன்தான், ஆனால் யானைப்பாகனாகிய நாராயணன் மேலேயிருந்து உன்னையெச்சரித்தானே, அதை யேன் நீ லக்ஷ்யம் செய்யவில்லை?" யென்றார்.

106. கடவுள் நம்மைப் பசிதீரப் போஷித்து வருவதாலேயே அவர் கருணாநிதி என்று நாம்

சொல்லக்கூடாது. ஏனெனில் பிரதி தகப்பனும் பெற்ற குழந்தைகளுக்கு அன்ன மளித்துக் காத்தே தீரவேண்டும். ஆனால் அவர் நம்மைத் தீயநெறியிற் செல்லாதபடி பாதுகாத்துப் பாவமெனும் படுகுழியில் விழாதபடி தடுத்தாட்கொள்ளுங் காலையில்தான் அவர் உள்ளபடி கருணாகரக்கடவுளாய் விளங்குகின்றார்.

### பாபவிமோசனம்.

107. மண்ணிற் புரண்டு உடம்பை யழுக்காக்கிக் கொள்வது குழந்தையின் சுபாவமாயினும், அதன் தாய் மாத்திரம் அதை அழுக்குடன் இருக்கவிடாமல் அடிக்கடி நீராட்டுகின்றாள். அதுபோலவே பாவம்புரிவது மனிதனது சுபாவமாயிருப்பினும், அவன் பாவம் புரிவது வாஸ்தவமாயின், அவனைப் பாவத்தினின்று விமோசனம் செய்விக்க எம்பெருமான் ஏற்படுத்தும் சாதனம் அதைவிட இருமடங்கு வாஸ்தவமா யிருக்கின்றது.

108. அறையில் விளக்கைக் கொணர்ந்தமாத்திரத்தில் அங்கே கற்பகோடிகாலமாயிருந்த இருளெல்லாம் சொல்லாமல் ஓட்டம் பிடிக்கிறது. ஸர்வேஸ்வரனது கருணைநிறைந்த ஒரு கடாக்ஷ லேசத்தின்முன் எண்ணித்தொலையாப் பிறவிகளின் ஸஞ்சிதப் பழவினைகள் பிறந்தோடிப் போகின்றன.

109. ஹ்ருதயத்தைச் சுட்டிக்காட்டிப் பகவான் ராமகிருஷ்ணர் கூறியதாவது: இதை யிங்கே யுடையவன் அங்கேயும் (வெளியுலகத்தைச் சுட்டி) உடையனே. கடவுளைத் தன் அகத்தே காணாதவன் புறத்

தேயும் ஒருகாலும் காணான். ஆனால் எம்பெருமானைத் தன் உள்ளமாகிற ஆலயத்திலே பார்க்கின்றவன் அவரைப் பிரபஞ்சமாகிற ஆலயத்திலும் பார்க்கின்றான்.

---

110. ஒரு சிறுவன் தனக்குப் பசியுண்டாகும் பொழுது தன்னைத் தூக்கத்தினின் றெழுப்புமாறு தன் தாயை வேண்ட, அவள் 'உன் பசியே உன்னை யெழுப்பிவிடும்' என்றாள்

111. பகவானை யாராதித்தலே பரமவிரதமெனக்கொண்டு பரப்ரஹ்மத்தினிடத்தே ஸதா சித்தத்தைச் செலுத்தியுள்ள புருஷனது மனம் இவ்வுலக வியாபாரங்களிற் பற்றுகொள்ளாது. மற்று ஆசாபாசத்தாற் கட்டுண்டவனது மநம் இவ்வுலக வியாபாரங்களிற் பற்று வைத்திருக்கின்றமையால், அவன் மதத்துவேஷங்களைப் பெரிதும் பாராட்டி அஹங்காரத்துடன் கூடி யிருப்பான்.

112. ஜீவாத்மாவின் இயல்பை யறிந்துகொண்டு, 'நான் நீ' என்ற சொற்களின் உண்மைப்பொருளை யுணர்ந்தவனே பரப்ரஹ்மத்தை யறிந்தவன் ஆவான். 'என் வீடு, என் சரீரம், என் குடும்பம்' என்ற அஹம் பாவம் தீர்க்க விசாரணையுள்ளவனுக்கு உண்டாகாது. ஞானோதயம் உண்டான பிறகு அஹம்பாவம் அழிந்து போய் விடும். உள்ளிப் பூண்டின் மேலுள்ள புரைகளை ஒவ்வொன்றாய் உரித்துக் கொண்டே வந்தால், கடைசியில் ஒன்றும் மிகுந்து நிற்காததுபோல், ராக த்வேஷாதிகளைப் படிப்படியாய் வென்று விட்டால், பின்னர்

'நான்' என்ற பாவனையே அழிந்துபோய்விடும். தத்வ விசாரம் பூர்ணமாய்ச் செய்தவனுக்குப் பரப்ரஹ்மம் ஒன்றே நித்யமாய்த் தோற்றும். அஹம்பாவம் அழியாமல் பரப்ரஹ்மஸ்வரூப ஸாக்ஷாத்காரம் உண்டாகாது.

113. பாரிஜாதாபஹரண நாடகமாடுகையில் சூத்திரதாரன் வாழ்த்துரையில் ஸ்ரீகிருஷ்ணனைப் பிரார்த்திக்கும்பொழுது ஸ்ரீகிருஷ்ணவேஷம் அரங்கத்துக்கு வராமல், நாடகத்தொடக்கத்தில் நாரதர் பிரவேசித்து ஸ்ரீருஷ்ணனை பிரார்தித்த வுடனே கிருஷ்ண வேஷம் ப்ரவேசிக்கின்றதுபோல், மனிதன் உரத்த குரலால் பகவானை எவ்வளவு பிரார்த்தித்தும் அவர் பிரத்யக்ஷமாகாமல், உள்ளன்பாற் கசிந்துருகி ஓலமிடும்பொழுது பிரஸன்னராகின்றார்.

114. அஹம்பாவம் அழிந்தாலன்றி கைவல்லியம் கைகூடாது.

115. மாயா படலத்தைப்பிளந்து பரப்ரஹ்வஸ்வரூபத்தைக் காணப்பெறுவதற்கு உபாயம் பகவானேயருளவேண்டு மாகையால் மாயையை யொழிக்கவேண்டு மென்ற நிலையான விரதம் பூண்டு அவரையே ஸந்ததம் ஆராதிக்க வேண்டும்.

116. ஆக்குவோனும், அழிப்போனும், காப்போனும் கடவுளே யென்றும், அவனே அனைத்துக்கும் ஆதாரமென்றும் ஆதிகாரணமென்றும் உறுதியாப் நம்பி, அஹங்காரமென்பது சிறிதுமின்றி உயிர்வாழ்வதே மோக்ஷமடைவதற்கு உத்தமமான ராஜமார்க்கமாம்.





"தாயே, நான் பெரியவனென்றும் நான் பிராமணனென்றும், அவர்கள் தாழ்ந்தவர்களென்றும் பறையர்களென்றுமுள்ள எண்ணத்தை என் உள்ளத்தினின்றும் அகற்றிவிடு. அவர்களும் அத்தனை வடிவமாய்த் தோன்றும் நீயேயன்றி வேறியார்?"

# அவதார புருஷர்கள், ரிஷிகள், ஆசார்யர்கள்.

அவதார புருஷர்கள் ஸர்வேசுவரனது தூதர்கள்.



117. அவதார புருஷனைக் கடவுளின் தூதனெனக் கருதலாம். அவன் ஒரு மகாராஜாவின் பிரதிநிதியைப் போன்றவனென்றும் சொல்லலாம். தன் ராஜ்யத்தின் தூர பிரதேசத்தில் ஏதேனும் கலஹமுண்டானால், அதை யடக்க மஹாராஜா தன் பிரதிநிதியை யனுப்புவதுபோல், உலகத்திலே எவ்விடத்திலாவது தர்மம் குறைவுறும் பொழுது பகவான் தம்முடைய அவதார மூர்த்தியை யங்கே அனுப்புகின்றார்.

118. ஒரே அவதார மூர்த்திதான் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கி ஓரிடத்திலே மேலெழுந்து ஸ்ரீ கிருஷ்ணனென்றும், மறுபடியும் அக்கடலில் மூழ்கி மற்றோரிடத்தில் மேலெழுந்து கிறிஸ்துவென்றும் விளங்குகின்றார்.

119. கடலின் அலைகளுக்கும் கடலுக்கும் என்ன ஸம்பந்தமோ அந்த ஸம்பந்தந்தான் ராம, கிருஷ்ண, புத்த, கிறிஸ்துவாதி அவதாரங்களுக்கும் அகண்ட பரப்ரஹ்மத்துக்கும் உள்ளது.

120. ஸ்ரீராமசந்திர பகவான் இவ்வுலகத்திற்கு வந்த பொழுது அவர் ஈசுவராவதார மென்பதையுணர்ந்தவர்கள் எழுவர் முனிவர்களே யாவர். அவ்வாறே கடவுள் இவ்வுலகத்தில் அவதரிக்கும்பொழுது அவரது திவ்விய சக்தியை யறிந்துகொள்வோர் வெகு சிலரே யாவர்.

121. ஈசுவரன் மனிதரூபமாய் அவதரிக்கும் பொழுது ஈசுவர மஹிமைக்கு உண்டாகும் கஷ்டங்கள் இத்தனையென்று ஒருவருக்குந் தெரியாது.

அவதார புருஷர்களின் ரக்ஷக சக்தி.

122. சில காலங்களில் கிணறுகளிலே ஆழத்தில் தான் ஜலங்கிடைக்கும். அதுவும் அதிக பிரயாஸையின் பேரில் கிடைக்கும். ஆனால் தேசமெங்கணும் மழைகாலத்தில் ஜலபிரவாஹமாயிருக்கும்பொழுது எவ்விடத்தில் வேண்டுமானாலும் வெகு சுலபமாய் ஜலம் கிடைக்கும். அதுபோலவே சாதாரணமாய் ஜபதபங்களால் ஞானிகள் கடவுளை யடைய வேண்டி யிருப்பினும், அவதாரமென்னும் பிரவாஹம் உண்டாகும்பொழுது எங்கு பார்த்தாலும் பகவானுடைய மஹிமாதிசயங்கள் காணப்படுவதால், எம்பெருமானுடைய திருவருளால் ஒவ்வொருவனும் பரமகதி யடைகிறான்.

123. அதிக சக்தி வாய்ந்த பெருத்த நீராவிக்கப்பலானது கடலின்மேல் வேகமாய் அசைந்து சென்று தன்பின்னே சிறு கப்பல்களையும் படகுகளையும் இழுத்துக்கொண்டு கரை சேர்வதுபோல்,ஒரு மஹா அவதார

புருஷன் அவதரிக்கும்பொழுது அவன் ஆயிரக்கணக்கானவர்களை மாயாஸாகரத்தைத் தாண்டுவித்து மோக்ஷக்கரை கொண்டுபோய்ச் சேர்க்கின்றான்.

124. வண்டித்தொடரை யிழுத்துச் செல்லும் நீராவியந்திரமானது தான் போய்ச் சேரவேண்டிய இடத்தைப் போயடைவதுடன் தன்னுடன் பளுவு நிறைந்த நீண்ட வண்டித்தொடரையும் இழுத்துச்செல்வதுபோல், அவதார புருஷர்கள் பாபமூட்டைகளைத் தூக்கமாட்டாது தத்தளிக்கும் பாமரகோடிகளை எம்பெருமானது திவ்ய ஸந்நிதானத்திற்கு அழைத்துச் செல்லுகின்றார்கள்.

### அவதாரங்கள் அநேகம்.

125. அகண்ட ஸச்சிதாநந்தமென்னும் விருக்ஷத்திலே ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணன், புத்தர், கிறிஸ்து முதலிய மஹநீயர்கள் கணக்கின்றி தொங்குகின்றார்கள். அவர்களுக்குள்ளிருந்து ஒருவரிருவர் அவ்வப்பொழுது இவ்வுலகத்தில்அவதரித்துப் பெருத்தமதங்களையும் ஸம்பிரதாயங்களையும் ஸ்தாபித்துவிட்டுச் செல்கின்றனர்.

126. ஸீதை, ராமன், ஸ்ரீதேவி, கிருஷ்ணன், ராதா,அர்ஜுனன் முதலானவர்கள் உண்மையில் இருந்தவர்களல்லவென்றும், கேவலம் உருவகங்களென்றும், அல்லது வேதசாஸ்திரங்களுக்கு ரஹஸ்யமான உட்கருத்துமாத்திரந்தான் உண்டென்றும் கருதவேண்டாம். அவர்களும் உங்களைப்போலவே இரத்தமும் தசையும் நிறைந்த தேகங்களுடன் கூடி இம் மண்ணுலகில் உண்மையாய் வாழ்ந்தவர்களேயாவர். ஆனால் அவர்கள்

தேவதைகளாகக்கூட விருந்தமையால் அவர்களுடைய சரித்திரங்களுக்கு பாஹ்யார்த்தம்,ரஹஸ்யார்த்தம் என்னும் உபயார்த்தமும் உண்டு.

127. ஆகாயத்திலே அதிக உயரத்தில் ஸஞ்சரிக்கின்ற "ஹோமா" என்ற ஜாதியைச் சேர்ந்த பக்ஷிகள் அவ் உயரமான பிரதேசங்களையே அதிக ஆசையோடு நேசித்துவருவதால், கீழே இறங்கி பூமிக்கு வரவேண்டுமென்னும் கருத்தே அவைகளுக்குக் கிடையாது. அவைகள் ஆகாயத்திலேயே முட்டையிடுவதால் அம்முட்டைகள் பூமியின் ஆகர்ஷண சக்தியால் இழுக்கப்பெற்று கீழே விழுந்துகொண்டிருக்கையிலேயே நடுவில் குஞ்சு பொரித்துக் குஞ்சுகளை வெளிப்படுத்துகின்றன. வெளியே வந்த குஞ்சுகள் தாங்கள் கீழே விழுந்துகொண்டிருப்பதை உடனே தெரிந்துகோண்டு, தங்களுக்கிருப்பிடம் ஆகாயமென்பதை இயற்கையறிவா லுணர்ந்து தாங்கள் செல்லும் கதியை யுடனே மாற்றி,மேல்நோக்கிப் பறக்க வாரம்பிக்கின்றன. அவ்வாறே சுகதேவர், நாரதர், சங்கராசாரியர், இயேசு முதலிய மஹான்கள் இளமையிலேயே இவ்வுலகப் பற்றையறுத்து உன்னத பிரதேசங்களாகிய மெய்யறிவையும் திருவருட்பிரகாசத்தையும் நாடிச் செல்கின்றனர்.

128. யானைக்கு இரண்டு வரிசைத் தந்தங்கள் இருப்பனபோல, ஸ்ரீகிருஷ்ணன் முதலிய பகவத் ஸ்வரூபிகளுக்கும் பிரபஞ்ச ஸம்பந்தமான ஆசார விவகாரங்களுடன் கூடினதாக ஸாதாரண ஜனங்களுக்குத் தென்படும் பிராகிருத சரீரமும், ஜன்ம கர்மாதீதமான அப்

ராகிருத திவ்யாத்ம ஸ்வரூபமும் ஆகிய இருவகை வடிவங்களும் உள்ளனவென் றறியத்தக்கது.

129. வினு.—யூதர்கள் இயேசுவைச் சிலுவையில் ஆணியிட்டறைந்த காலையில், அவருக்குப் பொறுக்க முடியாத வலியும் சங்கடமும் உண்டாயிருக்க வேண்டுமல்லவா? அவ்வளவு வேதனையை அநுபவித்தும், அவர் தம்மைச் சிலுவையி லறைந்தவர்களை க்ஷமிக்க வேண்டுமென்று கடவுளை எங்ஙனம் பிரார்த்தித்தார்?

**விடை.**—இளந்தேங்காயைக் குத்தினால் உள்ளேயிருக்கும் பருப்பிலும் குத்துபடும், ஆனால் உலர்ந்த தேங்காயிலுள்ள கொப்பரையானது ஓட்டுடன் ஒட்டாமலிருப்பதால் ஓட்டைக்குத்தினாலும் கொப்பரைக்கு யாதொரு சேதமும் உண்டாவதில்லை. இயேசு அவ்வுலர்ந்த தேங்காய்க்குச் சமானமானவர். அவரது அந்தராத்மா அவரை மூடியிருந்த பௌதிகக் கூட்டினின்றும் வேறா யிருந்தமையால் அவர் உடம்பில் ஆணிகளைக் கொண்டு எவ்வளவுதான் அடித்துக்குத்தினாலும் அவற்றால் அவர் சிறிதேனும் சலிக்காமல் தம் பகைவர்களின் க்ஷேமத்தின் பொருட்டே சாந்த சித்தத்துடன் பிரார்த்தித்தார்.

130. உலகத்தில் மனிதர்கள் இருவகைப்படுவர். குருவானவர் தம் சிஷ்யர்களுள் ஒருவனை நோக்கி, "அப்பனே, நான் உனக்கு உபதேசிப்பது அதிக அருமையான விஷயமாதலால் அதை நீயே வைத்துக்கொள்" என, சிஷ்யனும் அப்படியே அதைத்தனக்கே வைத்துக்கொண்டான். ஆனால் அதே குரு வேறொரு சிஷ்ய

னுக்கு அதை உபதேசிக்க, அவன் அதன் அருமையை யறிந்து அதைத் தான் மாத்திரம் அநுபவிக்கவிரும்பாமல் ஓர் உந்நத ஸ்தாநத்தின் மேலேறி அச்சந்தோஷச் செய்தியை எல்லா ஜநங்களுக்கும் பஹிரங்கப்படுத்தினான். அவதார புருஷர்கள் பின் சொன்ன வகுப்பையும் ஸித்தபுருஷர்கள் முன்சொன்ன வகுப்பையுஞ் சேர்ந்தவர்கள்.

131. ஜலப்பிரளயம் உண்டாகும்பொழுது எல்லா ஆறுகளும், குளங்களும், ஓடைகளும், வாய்க்கால்களும் அவற்றைச் சுற்றிலுமுள்ள பூபாகங்களும் ஒரே ஜலப்ரவாஹமாய் விடுகின்றன. ஆனால் மழை நீரால் அங்கங்குள்ள ஆறுகளும் வாய்க்கால்களும் மாத்திரந்தான் நிறையும். அதுபோல, ஸர்வேஸ்வரன் அவதரிக்கும்பொழுது அவனருளால் யாவரும் கடைத்தேறுகின்றனர். ஸித்தர்களோ அநேக ஜபதபங்கள்செய்து பலவித கஷ்டங்களை யநுபவித்துத் தங்களைமாத்திரம் காப்பாற்றிக் கொள்ளுகின்றார்கள்.

132. அநேக காலமாய் ஒருவரும் உபயோகப்படுத்தாமலும் பலவகைச் செடிகளும் புற்பூண்டுகளும் முளைத்து இருந்த இடமே தெரியாமல் மூடியும் இருக்கிற பழய கிணற்றைத் தூறுவாரி அதை யாவருக்கும் உபயோகப்படுமாறுசெய்யும் (Archaeologist) புராதன வஸ்து பரிசோதக சாஸ்திரியைப் போன்றவன் ஸித்தபுருஷன். ஆனால் முன் ஜலமே இல்லாத விடத்தில் புதிதாய்க் கிணறு வெட்டும் எஞ்ஜினியரைப் போன்றவர்கள் அவதார புருஷர்கள். ஏற்கனவே பக்தி

யெனும் ஜலத்தை யுடையவர்களுக்கு மாத்திரந்தான் மஹான்களாகிய ஞானிகள் மோக்ஷமளிப்பார்கள். அவதார புருஷர்களோ அன்பெனும் நீரே இல்லாமல் பாலைவனத்தைப்போல் வறண்டிருக்கும் இருதயமுள்ளவர்களையும் காப்பாற்றுகின்றார்கள்.

133. பிரவாஹத்தில் அடித்துக்கொண்டு போகும் மரப்பலகையானது நூற்றுக் கணக்கானவர்களை யேற்றிக்கொண்டுபோயும் முழுகிப் போகிறதில்லை. அதே மாதிரி அடித்துக்கொண்டுபோகும் நாணலில் ஒரு காக்கை உட்கார்ந்தாலும் அந்தப் பளுவைத் தாங்கமாட்டாது அது முழுகிப்போய்விடுகின்றது. அதுபோலவே ஸர்வேசுவரன் அவதரிக்குங்காலையில் கணக்கற்ற ஜீவர்கள அவரிடத்தில் சரணாகதிசெய்து நற்கதி பெறுகின்றார்கள். ஸித்தபுருஷன் அதிக கஷ்டத்தின்பேரில் தன்னைமாத்திரம் காப்பாற்றிக் கொள்ளுகின்றான்.

134. ஸித்தத்துவ லக்ஷணம் யாது? (பரிபூர்ண ஞானம் அடைந்தவனுக்கும் ஸித்தனென்று பெயர்; பக்குவமான ஆஹாரத்துக்கும் ஸித்தமென்று பெயர்; ஆகவே இங்கே பூரண ஞானத்துக்கும் பக்வாஹாரத்துக்கும் சிலேடை என்றறியத்தக்கது).

உருளைக் கிழங்காவது கத்திரிக்காயாவது ஸித்தமாகும் பொழுது, அதாவது சரியாய் வெந்து பக்குவமாகும்பொழுது, மெதுவாயும் இளக்கமாயுமாகின்றது. அதுபோலவே மனிதனும் ஸித்தனாகும் பொழுது, அதாவது பரிபூர்ண நிலையடையும் பொழுது, மஹாவிநயமும் நெஞ்சிளக்கமும் பொருந்தி விளங்குகின்றான்.

ஸித்தர் வகை.

135. பிரபஞ்சத்தில் ஸித்தர்கள் ஐவகையரா வர். எவ்வாறெனில்:—

(1) கனவில் திருவருள் பெற்று பரிபூர்ணத்த ன்மை யடைகின்றவர்கள் ஸ்வப்ந ஸித்தர்கள்.

(2) மந்த்ரோபாஸனையின் மூலமாய்ப் பரிபூர்ணத் தன்மை யடைகின்றவர்கள் மந்த்ரஸித்தர்கள்.

(3) ஏழைக்குப் புதையல் அகப்பட்டாலும் விசே ஷசெல்வமுள்ள மனைவி கிடைத்தாலும் அவன் திடீ ரென்று (ஹடாத்தாய்) ஸ்ரீமானாய்விடுவதுபோல், பாபா த்மாக்களா யிருந்தும் ஏதோ ஒரு மஹிமா விசேஷத் தால் திடீரென்று பரிசுத்தர்களாகி பரிபூர்ண ஞானவ டிவமாகிய ஸ்வாராஜ்ய (ஸ்வர்க்க ராஜ்யம் - Kingdom of Heaven) மடைகின்றவர்கள் ஹடாத்ஸித்தர்கள்.

(4) அரசனது தயவால் ஏழை தநிகனாவது போல்பரமனது திருவருளாலேயே பரிபூர்ணத்தன்மை யடைகின்றவர்கள் க்ருபாஸித்தர்கள்.

(5) பூசிணிக்கொடியில் முதலில் பிஞ்சுவிட்டுப் பின் னர் பூக்கள் அரும்புவதுபோல், பிறவிமுதல் ஸித்தர்க ளாயிருந்தும் ஜநங்களுக்கு முக்திநெறியை உபதேசித் தற்பொருட்டு யோகாப்பியாஸம் முதலிய ஸாதநங்களை யநுஷ்டிக்கும் பரமசுத்தர்கள் நித்யஸித்தர்கள்.

136. ப்ரஹ்மத்துடன் இரண்டறக்கலந்து 'ஸோ ஹம்' 'அவனே நான்' எனச்சொல்லும் நிலை மனிதனு க்குக் கைகூடுவது ஸாத்தியமா? ஸாத்தியமெனில் எங் ஙனம்?

ஸாத்தியமே. எப்படி யெனில்:—வெகுநாளாக நம்பிக்கையாய் வேலை செய்துவரும் சேவகன்மேல் எஜமானன் இஷ்டப்பட்டு ஸந்தோஷத்தினால் தன் எஜமானஸ்தானத்தையே அவனுக்குக்கொடுத்து, குடும்பத்திலுள்ள மற்றவர்களை நோக்கி, "இனி எனக்கும் இவனுக்கும் பேதம் கிடையாது. அவனும் நானும் ஒன்றே. என் கட்டளையை நிறைவேற்றுவது போலவே அவன் கட்டளையையும் நிறைவேற்றக் கடவீர்கள். அவ்வாறு கீழ்ப்படியத் தவறுகின்றவன் என்னையே அவமதித்ததாகக் கருதப்பட்டு தண்டனை யடைவான்' 'என்கிறான். சேவகன் விநயத்தினால் அந்த ஸ்தானத்தை வஹிக்கக் கூச்சப்பட்டாலும் எஜமானன் அவனை அந்த கௌரவமான ஆஸனத்தை வஹிக்குமாறு வற்புறுத்துகின்றான். "ஸோஹம்" எனும் நிலையை யடையும் ஆத்மாக்களின் லக்ஷணமும் இவ்வாறே. அவ்வாத்மாக்கள் எம்பெருமானிடத்தில் வெகுகாலம் ஈடுபட்டு அவனுக்கு மகோல்லாஸகரமான கைங்கரியங்களைச் செய்துகொண் டிருப்பதைக்கண்டு அவனே தனது நிர்ஹேதுக கிருபையால் அவர்களைக் கடாக்ஷித்துத் தனது திவ்ய மஹிமையையும் திவ்யகுணங்களையும் அவர்களுக்கருளித்தனக்கே யுரிய ஸர்வலோகாதிபத்யமாகிய உந்நத பதவியிலும் அவர்களை வைக்கின்றான்.

### பகவத் பக்தர்கள்.

137. ஈசுவரத்தியான பராயணர்களும் ஞானிகளுமான பகவத் பக்தர்கள் எம்பெருமான் திருவுள்ளத்துக் குகந்த ஆப்த பந்துக்களாவர்கள். அவர்களை எம்

பெருமான் தனது நண்பர்களென்றும், தோழர்களென்றும் உறவினர்களென்றும் கருதுகின்றான். மற்ற ஜனங்கள் யாவரும் அவனால் சிருஷ்டிக்கப்பட்ட சாதாரண ஜந்துகோடிகளாக மாத்திரம் கருதப்பெறுவார்கள்.

138. யோகியின் மஹிமை யோகிக்குத்தான் தெரியும். இந்த நூற்செண்டு இன்ன இலக்கமுள்ளது இன்ன குணமுடையது என்பது நூல் வியாபாரிக்குத் தான் தெரியும்.

139. ஒரு யோகி நிர்விகல்ப சமாதியில் அமர்ந்து பாதை யோரமாய்ப் படுத்திருந்தார். அவ்வழியே சென்ற ஒரு திருடன் அவரைக் கண்டு இவ்வாறு யோசிக்கலாயினான். "இங்கே படுத்திருக்கும் இந்தப் பயல் திருடனாகவே யிருக்கவேண்டும். இரவில் எந்த விட்டிலேயோ கன்னம் வைத்துவிட்டு இப்பொழுது களைத்துப்போய்த் தூங்குகிறான். இவனைப் பிடித்துக் கொள்ள போலீஸ்காரர்கள் சீக்கிரத்திலேயே இவ்விடம் வருவார்கள். ஆகையால் நான் இப்பொழுதே தப்பியோடிவிடவேண்டும்" என்று சொல்லிக்கொண்டே அவன் 'கம்பி' நீட்டினான். சற்று நேரமானவுடனே குடியனொருவன் அவ் யோகியினிடம் வந்து, "ஓஹோ! நீ ஒரு மொந்தை ஜாஸ்தியாய் போட்டுவிட்டு இந்தக் கால்வாயில் விழுந்து புறள்'றையோ? உன்னைவிட நான் பரவாயில்லேடா, நான் உன்னைப்போல இடறி விழமாட்டேண்டா" என்று உளறிச் சென்றான். கடைசியாக ஒரு யோகி அவ்விடம் வந்து, பரமயோகி யொருவர் சமாதி நிஷ்டரா யிருக்கிறாரென வுணர்ந்து, அவ்

கே உட்கார்ந்துகொண்டு பயபக்தியுடன் அவரைத் தொட்டு அவரது திருவடிகளை மெதுவாய்ப் பிடிக்கத் தொடங்கினார்.

### பூர்ணஞானியின் பற்றற்றதன்மை.

140. ஜலத்திலுள்ள தாமரையிலையும் சேற்றில் வாழும் சேல்மீனும் முறையே ஜலத்தினாலும் சேற்றினாலும் அழுக்குறாதிருப்பதுபோல், பூர்ண ஞானியானவன் உலக வியாபாரங்களைச் செய்துகொண் டிருந்தபோதிலும் அவற்றால் அவன் சிறிதும் மலினமாவதில்லை.

141. நாரை முதலிய நீர்வாழ்ப் பறவைகள் ஜலத்தில் முழுகினாலும் அவற்றின் இறக்கைகள் ஜலத்தால் நனையாமலிருக்கும் பான்மைபோல், ஜீவன்முக்தர்கள் உலகத்திலே வாழ்ந்தாலும் உலகம் அவர்களைப் பற்றுவதில்லை.

142. பாலும் நீரும் கலந்து பிரிக்கக்கூடா நிலையில் இருக்கையில், ஹம்ஸமானது நீரினின்று பாலைப் பிரித்து நீரை நீக்கிப் பாலை மாத்திரம் பருகுகின்றது. இதைச்செய்ய இதர பக்ஷிகளால் முடியாது. அதுபோலவே ஈசுவரனும் மாயையுடன் கூடியிருப்பதால் சாதாரண ஜனங்கள் மாயாரஹித ஈசுவரனைக் காணுதல் அரிது. மாயையை விலக்கி பிரஹ்மத்தைக் கிரஹிக்கும் சக்தி பரமஹம்ஸனுக்கே உரியது.

### மஹான்களிடம் அஹங்காரப்போலி மாத்திரந்தான் காணப்படும்.

143. சமாதியின் உயர்ந்த நிலையாகிய ஏழாம் படியை யடைந்து சிவாநுபூதிச்செல்வர்களாய் விளங்

கும் சில மஹான்கள் மற்றைய மனிதர்களும் கடைத்தேற வேண்டுமென்று கருணைகூர்ந்து தாங்கள் அடைந்துள்ள பவித்திரமான உன்னத பதவியிலிருந்து கீழே இழிந்துவந்தருளுகின்றார்கள். ஆனால் இவ்வஹங்காரம் வெறும் போலியேயன்றி உண்மையானதன்று. அது நீரின்மேல் கிழித்த கோட்டுக்கு சமானமாகும்.

144. சமாதி கைகூடிய பின்னரும் சிலர் எம்பெருமானுக்குக் கைங்கரியம் புரியும் தாசர்களாகவே இருந்து அந்நிலைக்குரிய அஹம்புத்தியுடன் விளங்குகின்றார்கள். சங்கராசார்யர் உலகத்தாருக்கு ஞானோபதேசம் செய்யும்பொருட்டு வித்யா அஹங்காரத்தை மாத்திரம் வைத்திருந்தார்.

145. குரு சிஷ்ய ஸம்வாதம்:—

[குரு ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.]

குரு: எனக்கு ஏதாவது அபிமானம் இருக்கிறதா?

சிஷ்யன்: ஆம், சிறிது இருக்கிறது. அதையும் பின் கூறும் காரியங்களை சாதிப்பதற்காக வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்; முதலாவது, தேகத்தைக் காப்பாற்றுவதன்பொருட்டும்; இரண்டாவது, பக்தி யோகம் செய்வதன்பொருட்டும்; மூன்றாவது, அடியார்கள் கூட்டத்திற் கலந்து ஆநந்திக்கும்பொருட்டும்; நான்காவது, உலகத்தோருக்கு உபதேசிக்கும்பொருட்டுமாம். ஆனால் இந்த அபிமானத்தைக்கூடத் தேவரீர் வெகுகாலம் பகவத்தியாநமும் பிரார்த்தனையும் புரிந்த பிறகே வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஸமாதி

நிலையே தேவரீரது ஸஹஜ நிலை யென்பது அடியே னது அபிப்பிராயம். ஆகையாற்றான் தேவரீருக்குள்ள அபிமாநம் பிரார்த்தனையின் பயன் என்றடியேன் கூறுவது.

குரு: நீ சொல்வது சரிதான். ஆனால் இந்த ஜீவா பிமானத்தை வைத்துக்கொண்டது நானல்ல. அது என்னையாண்ட அம்பிகையின் அருட்செயல். என் பிரார் த்தனையை நிறைவேற்றுவது என்னையாட்கொண்ட அம் பிகையின் காரியமே.

146. சிறிய திருவடியாகிய ஹநுமானுக்கு ஸாகா ர நிராகாரஸ்வரூபமாகிய ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்கார தரிசநம் லபித்தும், அவர் எம்பெருமானது தாஸனுக் குரிய அபிமானத்துடன் கூடியேயிருந்தார். நாரதர், ஸநகர், ஸநந்தர், ஸநத்குமாரர் முதலியவர்களும் அவ் வாறே இருந்தனர்.

[இவ்வாறு குரு கூறியபொழுது, நாரதர் முதலி யவர்கள் கேவலம் பக்தர்களாகவே யிருந்தார்களா? அவர்கள் ஞானிகளாகக்கூட விளங்கவில்லையா? என்றொ ருவர் வினவ பகவான் மொழியலுற்றார்.]

நாரதர் முதலியவர்கள் ப்ரஹ்மஜ்ஞானமடைந்த பரமயோகிகளேயாயினும், அவர்கள் சலசல வென் றொலித்துச் சொல்லும் அருவியின் வாரியைப்போல் பேசிக்கொண்டும் பாடிக்கொண்டுமே சென்றார்கள். இதனால் அவர்கள்கூட தர்மத்தின் தாரகதத்துவங்களை உலகத்தோருக்கு உபதேசிக்கும்பொருட்டு வித்யா

பிமானத்தை மாத்திரம் வைத்துக்கொண்டிருந்தார்களென் றேற்படுகிறது.

147. எரிந்துபோன கயிறு கயிற்றின் வடிவத்துடன் விளங்கினும், அது சாம்பராய்விட்டமையால் எதையும் கட்டப் பயன்படாததுபோல், ஜீவன்முக்தன் கேவலம் அபிமானப்போலியை வைத்திருப்பினும் அஹங்காரவர்ஜிதனேயாகின்றான்.

148. ஆட்டின் தலையை வெட்டியபிறகும் முண்டமானது உயிருடனிருப்பதுபோற் சிறிதுநேரம் அசைந்துகொண்டிருக்கிறது. அதுபோலவே பூர்ணஞானமடைந்த யோகியின் அஹங்காரம் வெட்டுண்டபோதிலும் பிரபஞ்ச வியாபாரங்களை நடத்துவதற்கு வேண்டிய அஹங்காரம்மாத்திரம் மிகுந்திருக்கின்றது. ஆனால் அவ்வஹங்காரம் அவனை மறுபடியும் உலகப்பற்றுடையவனாகச் செய்யக்கூடிய ஆற்றலுடையதன்று.

149. சுத்தமான பத்தரைமாற்றுத் தங்கத்தால் நகைகள் செய்யமுடியாது. அதனுட் கொஞ்சம் கலப்பு சேரவேண்டும். மாயையே யில்லாத மனிதன் இருபத்தொரு நாளைக்குமேல் ஜீவித்திருக்கமாட்டான். மனிதனுக்குச் சரீர மிருக்கிறவரையில் சரீரதர்மங்களைச் செய்வதற்கு எவ்வளவு அற்பமாயினும் கொஞ்சமாவது மாயை யென்பது இருந்தே தீரவேண்டும்.

150. கந்தவஹன் (காற்று) சந்தனவிருக்ஷத்தின் சுகந்தத்தையும் மலத்தின் துர்க்கந்தத்தையும் தாங்கி வீசியபோதிலும்,இவ்விரண்டின் சேர்க்கையும் அதற்கு

இல்லாதிருப்பதுபோல் முக்த ஜீவர்கள் உலகத்தாருடன் கலந்து வாழ்ந்தபோதிலும் உலகத்திற் பற்றுமலே இருப்பார்கள்.

### பூர்ண ஞானிகளின் உபதேசம்

151. விளக்கெரியும்பொழுது விட்டிற் பூச்சிகள் எங்கிருந்தாவது வந்து அதில் விழுந்து மாய்ந்துபோகின்றன. அந்தக் கதியை யடையும்படி விட்டிலை விளக்கு அழைப்பதாய்த் தோற்றவில்லை. இதுபோலத்தான் பூர்ண ஞானிகளின் உபதேசமும். உலகத்தார்களைத் தங்களிடம் வருமாறு அவர்கள் கூவி யழைக்காவிடினும், நூற்றுக்கணக்கான ஜனங்கள் தாங்களாகவே எங்கிருந்தாவது வந்து கூடி அவர்களிடத்தில் உபதேசம் பெறுகிறார்கள்.

152. ஏ உபதேசஞ் செய்யும் சாஸ்திரியே! நீ பிரமாணம் எனும் அதிகார முத்திரை பெற்றிருக்கின்றாயா? ராஜசேவகர்களுக்குள் அதமாதமனை யிருப்பவன்கூட ராஜாதிகாரத்தைப் பெற்று வரும்பொழுது அவனை எல்லாரும் பயபக்திபுடன் எதிர்கொண்டுபசரிப்பதால், அவன் தன் அதிகார முத்திரையைக்காட்டி எப்படிப்பட்ட கலஹத்தையும் அடக்கி விடுகின்றான். நீயும் அவ்வாறே கடவுளின் அருளும் ஆக்ஞையும் பெற்றிருக்கவேண்டும். திருவருளென்னும் அதிகாரம் உன்னிடத்தில் இல்லாதவரையில் உன் உயிருள்ள காலம் வரையில் நீ உபதேசித்தாலும் வீணேயாகும்.

153. உண்மையான உபதேசம் எவ்வகைத்து? பிறருக்கு உபதேசிப்பதைவிட அவ்வளவு காலத்தை

யும் ஒருவன் ஈசுவராராதனத்தில் விநியோக்கிப்பாரு யின் அதுவே பெரிய உபதேசமாகும். தான் முக்தனு குமாறு முயல்பவனே உண்மையான உபதேசி. எல் லாவிதப் பற்றுகளையும் ஒழித்து ஜீவன்முக்தனுய் விளங் கும் மஹானிடத்தில் நூற்றுக்கணக்கான ஜநங்கள் எல் லாவிடங்களிலு மிருந்து வந்து கூடி அவனது உபதே சத்தைக் கேட்கிறுர்கள். ரோஜாப்பூ மலரும்பொழுது வண்டுகள், ஒருவரும் அழையாமலே, எல்லாப் பக்கங் களிலுமிருந்து வந்துசேர்கின்றன.

154. பச்சைமாவைச் சுடசுட விருக்கும் நெய் யிற்போட்டால் ஒருவிதமான கொதிக்கும் சத்தம் உண் டாகின்றது. மாவு நெய்யில் வேக வேக, கொதிக்கும் சத்தமும் குறைகின்றது. மாவு நன்ருய்ப் பக்குவமா னவுடனே கொதிப்பு சத்தமாய் நின்றுபோய்விடுகின் றது. அதுபோலவே மனிதனுக்கு அற்பமான ஞான முள்ளவரையில் அவன் பிரசங்கம் செய்துகொண்டும் உபதேசம் பண்ணிக்கொண்டும் போகின்ருன். ஆனல் பூர்ண ஞானோதயம் உண்டாகும்பொழுது அவன் வீ ணுடம்பரம் செய்வதை நிறுத்தி விடுகின்ருன்.

## ஆத்மஜ்ஞாநஹீநர்களின் உபதேசம்.

155. நன்ருய்ப் பேசுந்திறமும் பிரசங்கசக்தி யும் வாய்ந்து ஆத்மஜ்ஞாநம்மாத்திரம் சூந்யமா யிருப்ப வனைப்பற்றி தேவரீர் என்ன நினைக்கிறீர்கள் ?

விடை. தன்னிடத்தில் நிக்ஷேபமாய் வைத்திருக் கும் பிறன்பொருளைப் படாடோபமாய்ச் செலவழிக

கும் பிரபுவைப்போன்றவன் அந்தப் பிரசங்கி; பிறரு க்கு உபதேசம் செய்வதில் அவன் மஹாநிபுணன். ஏனெனில் அவன் உபதேசிக்கும் உண்மைகள் அவனது சொந்தமாயிராமல் வேற்றிடத்திலிருந்து கடன் கொண்டவைகளானமையால், அவன் யாதொரு கஷ்டமும் சிரமமுமின்றியே சுலபமா யுபதேசிக்கின்றான்.

156. வினு:—இக்காலத்து மதப் பிரசங்கிகள் ஜனங்களைக் கூட்டுவதற்குச் செய்யு முபாயங்களைப்பற்றி தேவரீரது அபிப்பிராயமென்னே ?

விடை:—ஆயத்தமாயிருக்கும் சமையல் ஒருவனுக்குத் தான் காணக்கூடியதாயிருக்க, விருந்துக்கு நூறு ஜனங்களை அழைப்பதற்கொப்பாகும் அவர்கள் செய்யும் உபாயம். அது ஆத்மாநுபவச்சரக்கைக் கொஞ்சமாய் வைத்துக்கொண்டு பெரியமதாசாரியனுய் நடிப்பதேயன்றி வேறில்லை.

157. அநேகர் பனிக்கட்டியைப்பற்றிப் பிறர் சொல்லக்கேட்டிருக்கலாமேயன்றி தாங்களே அதைப் பார்த்திரார்கள். அதுபோல் அநேக மதப்ரஸங்கிகள் ஈசுவர லக்ஷணத்தைப் புஸ்தகங்களில் படித்திருப்பார்களேயன்றி சுவாநுபவமுள்ளவர்களாயிரார்கள். அநேகர் பனிக்கட்டியைப் பார்த்திருந்தும் அதின் சுவையை யறியாம லிருப்பதுபோல் அநேக மதப்ரஸங்கிகள் ஈசுவர மஹிமையின் லேசலேசத்தை மாத்திரம் அறிந்திருப்பார்களேயன்றி அதன் உண்மையான ஸாரத்தை உணர்த்திருக்கமாட்டார்கள். பனிக் கட்டியைச் சுவைத்தவனே அதன் இலக்கணத்தைக் கூறமுடியும்.

அதுபோல எம்பெருமானை தாஸ்யம் (பணிவிடை), ஸக்யம் (நட்பு), ப்ரேம பாவம் (அன்பு), ஆத்ம நிவேதநம் என்னும் பலவித உபாயங்களால் உகப்பித்துப் பகவத் குணாநுபவம் பண்ணினவனே பகவத் கல்யாணகுணங்களின் மகிமையை வர்ணிக்க முடியும்.

**பகவானே எல்லா ஞாநோபதேசத்துக்கும் ஆதிமூலம்.**

158. மின்சாரவிளக்கின் ஒளி பற்பலவிடங்களில் பற்பல விதமான காந்தியுடன் பிரகாசித்தபோதிலும் ஒரே ஆதாரமாகிய மின்சாரத்தினின்றே உண்டாகின்றது. அதுபோல நாநா தேசங்களில் நாநா காலங்களில் உண்டாகும் மதாசார்யர்கள் ஒரே பரமேசுவரனிடத்திலிருந்து உதயமாகி ஆத்ம ஒளியைவீசும் அத்தனை தீபஸ்தம்பங்களென விளங்குகின்றார்கள்.

159. வீட்டின் கூறையின்மேல் விழும் மழைநீரானது வியாக்ரமுகத்தைப்போலவும் விருஷபமுகத்தைப்போலவும் அமைத்திருக்கும் குழாய்களின் மூலமாய்த் தரையில் பிரவகிப்பதால், வியாக்ர முகத்திலிருந்தும் விருஷபமுகத்திலிருந்துமே கொட்டுவதுபோல் தென்படினும் உண்மையில் ஆகாசத்திலிருந்தே விழும் பான்மைபோல், தெய்வத்தன்மை பொருந்திய மனிதர்கள்வாயிலாக வெளிப்படும் நித்யமான ஸத்ய ஸித்தாந்தங்கள் அவர்களாலேயே கூறப்பட்டனவாகாது அவை பரமார்த்தத்தில் பரமபதத்திலிருந்தே அவதரித்தனவாகின்றன.

**ஞாநிக்குப் பிறந்த விடத்திற் பூஜ்யதை யில்லை.**

160. ஞாநியை அவனது ஸ்வஜநங்கள் கௌரவிக்காமலிருப்பதற்குக் காரணமென்ன? செப்படி வித்

தைக்காரன் செய்யும் வித்தைகளைப்பார்க்க அவனது பந்துக்கள் கும்பலாய்வந்து கூடுவதில்லை யாயினும், அந்நியர்கள்வந்து அவன்செய்யும் அற்புதவித்தைகளை ஆவலால் திறந்த வாயுடன் பார்த்துக்கொண்டு நிற்கின்றார்கள்.

161. வஜ்ரவடுலமென்னும் மரத்தின் விதைகள் அம்மரத்தின் அடியில் விழாமல் காற்றினால் மோதப்பெற்று வெகுதூரத்திற் போய் முளையெடுப்பது போல் ஞானியின் மஹிமை தூரதேசத்திற் பிரகாசமாகி அங்குள்ளவர்களால் புகழப்படுகின்றது.

162. தீபஸ்தம்பத்தின் கீழே இருள் இருந்தும், அத் தீபத்தின் ஒளி சுற்றிலுமுள்ள பொருள்களைப் பிரகாசிக்கச் செய்வது போல், ஞானியின் அதிசமீபத்திலுள்ள ஜனங்கள் அவனது மஹிமையை யறியாவிடினும் தூரதேசத்திலுள்ளவர்கள் அவனது பொறுமையாலும் அற்புத சக்தியாலும் வசீகரிக்கப்பெறுகின்றார்கள்.

163. எந்த ஞானியை அதிகமான சிஷ்யர்கள் பயபக்தி விசுவாசங்களுடன் கௌரவித்து அவன் சொற்படி நடக்கின்றார்களோ அவனிடத்தில் அத்தகைய மஹிமைகளில்லாதவனிடத்திற் பார்க்கிலும் அதிகமான திவ்யசக்தி யிருப்பதாகக் கருதவேண்டும்.

**ஸத்துணஸம்பந்நரான சுத்த ஸாதுக்களினிடத்தே திருவருள் பிரகாசிக்கின்றது.**

164. ஒரே சூரியப்பிரகாசமானது எல்லாப்பதார்த்தங்களின் மீதும் பரவியபோதிலும், ஜலம், கண்ணாடி

நிர்மலமான உலோஹங்கள் முதலிய ஒளிபொருந்திய பொருள்களிலேயே அது பிரதிபலிப்பதுபோல், திருவருட்பிரகாசம் ஸர்வ ஹ்ருதயங்களின்மீதும் ஸமமாயும் பக்ஷபாதமின்றியும் பரவியபோதிலும் நற்குணச் செல்வர்களாகிய பரிசுத்த ஸாதுக்களின் சுத்தமான நிர்மலாந்தஃக்கரணங்களிலேயே அது பூர்ணமாய்ப் பிரதிபலிக்கின்றது.

165. ப்ரஹ்மஜ்ஞாநோதயத்தாற் பிரகாசிப்பவனே யதார்த்த மனிதன்; மற்றோரெல்லாம் போலி மனிதர்களேயாவர்.

166. அந்தஃக்கரணத்தை நிர்மலமாக்கும் ஞானமே யதார்த்த ஞானம்; மற்றையவை யாவும் அஞ்ஞானமேயாம்.

ஸத்ஸங்கம்.

167. பரிசுத்தாத்மாக்களாகிய ஞானிகளின் ஸாங்கத்யம் ஆத்மோந்நதிக்குதவும் முக்கியஸாமக்கிரிகளில் ஒன்றாகும்.

168. ஸாதுஸங்கம் கஞ்சியை நிகர்த்திருக்கின்றது. கஞ்சியானது மயக்கத்தைப் போக்கடிக்கின்றதுபோல், அவாவெனும் கள்ளைப் பருகி மதித்திருக்கும் உலகமாந்தர்களின் மயக்கத்தைப் போக்கடிக்கின்றது ஸாதுஸங்கம்.

169. ஒருவன் தன் வாணாளை எவ்வாறு கழிக்க வேண்டும்? அக்நிகுண்டத்திலுள்ள நெருப்பு அணைந்துபோய்விடாமல் நன்றாய் எரியும்பொருட்டு அதை

யடிக்கடி ஒரு கட்டையால் ஏறத்தள்ளவேண்டி யிருப் பதுபோல், ஸாதுஸங்கத்தால் மனதை அவ்வப்பொ ழுது திடப்படுத்தவேண்டும்.

170. ஜமீந்தாரனுடைய காரியஸ்தன் கிராமாந் தரங்களுக்குப் போகும்பொழுது குடிகளைப் பலவிதத் திலும் ஹிம்ஸிக்கின்றானாயினும், ராஜதானிக்குத் திரு ம்பிவந்த பின்னர் எஜமான் கண்பார்வையில் இருக்கை யில் தன்மாதிரியை முழுதும் மாற்றி மஹா பக்திமா னைப்போல் நடித்து, குடிகளைப் பக்ஷமாய்ப் பார்த்து அவர்களுடைய கஷ்ட நிஷ்டூரங்களை யெல்லாம் பொறு மையாய் விசாரித்து, யாவருக்கும் பக்ஷபாதமின்றி நியாயத்தீர்ப்பு செய்ய முயல்கின்றான். இதனால் இம் சைசெய்யும் இயல்புள்ள காரியஸ்தன்கூட எஜமான னுடைய பயத்தினாலும் அங்குள்ளவர்களுடைய ஸஹ வாஸத்தாலும் நல்லவனாய் விடுகின்றான். அதுபோல வே ஸாதுஸங்கமும் மஹாபாபிகளைக்கூட பயபக்தி விசுவாஸங்கள் பொருந்திய புண்யவான்களாகச் செய் கின்றது.

171. நெருப்பில் வைத்த ஈரவிரகானது சீக்கிரத் தில் ஈரம் நீங்கப்பெற்று வெப்பங்கொண்டு கடைசியில் எரிய ஆரம்பிக்கின்றது போல், ஸாதுஸங்கமானது ஸம்ஸாரத்தில் அழுந்தியுள்ள ஸ்திரீ புருஷர்களின் ஹ்ருதயத்திலுள்ள ஆசை, காமம் முதலியவற்றின் ஈரத்தைப் போக்கலும் விவேகாக்நியானது அங்கே கொழுந்துவிட்டெரிகின்றது.

172. கருமான் துருத்தியை யடிக்கடி ஊதி உலையி லுள்ளநெருப்பை யெரிந்துகொண்டிருக்கச் செய்வது

போல் ஸாதுஸங்கத்தால் ஹ்ருதயத்திலுள்ள ஞாநாக்நியையும் ஸதா எரிந்துகொண்டிருக்கச் செய்யவேண்டும்.

௧௫.

173. நற்குணம்பொருந்தி பூர்ணஞாநம் அடையவேண்டுமென்ற சிரத்தைமாத்திரம் உன்னிடத்தில் உண்மையா யிருக்கும்பக்ஷத்தில் பரமேசுவரன் ஸற்குருவை உனக்கவசியம் காட்டுவார். முக்கியமா யிருக்க வேண்டியது சிரத்தை ஒன்றே.

174. ஸற்குருவும் ஸாதுஸங்கமும் ஒருவன் பெற்றிருந்தும் அவன் மநம் மாத்திரம் சஞ்சலமாயும் உறுதியின்றியும் இருக்குமாகில் அவையாவும் நிஷ்பலமேயாகும்.

175. முத்துச் சிப்பியானது ஸ்வாதி நக்ஷத்திரம் உச்சத்திலிருக்கும்பொழுது மழைநீரைக் கிரஹிப்பதற்காகக் கடலின் அடியிலே தன்னிருப்பிடத்தைவிட்டு மேலே கிளம்பிவந்து தன் ஓட்டை அகலத்திறந்துகொண்டு மிதந்தவண்ணமா யிருக்கையில் ஸ்வாதிநக்ஷத்திரத்து மழைதுளியொன்று அதில் விழுகின்றது. உடனே அது கடலினடியிலுள்ள தன்னிடம் சேர்ந்து தான் உட்கொண்ட மழைநீர்த்துளியினின்றும் ஓரழகிய முத்தை உண்டாக்குகின்றது. அதுபோலவே, சில முமுக்ஷுக்கள் மோக்ஷத்துவாரத்தின் கதவைத் திறக்கவல்ல மூலமந்திரத்தை யுபதேசிக்குந் திறமுள்ள ஸத்குருவைப் பற்பலவிடங்களிலும் விடாமுயற்சியாய்த் தேடித்திரிகையில், அவர்களுள் ஒருவன் அதிர்ஷ்

டவசத்தால் அத்தகைய குருவை யடைந்து, தான் வெகுகாலம் ஆவலாய் விரும்பியிருந்ததும், எல்லாவித பந்தங்களையும் சேதிக்க வல்லதுமான ஞானோபதேச பாக்கியத்தைப் பெற்று ஸம்ஸாரிகளின் ஸங்கத்தினின்று விலகித் தனது ஹிருதய குஹையில் தியானயோகத்தில் அமர்ந்து, சாசுவதமான சாந்தியைப் பெறுகிற வரையில் அதேநிலையில் இருக்கின்றான்.

176. மானுட மாத்திரனாகிய ஸாமானிய குரு மந்திரத்தைக் காதில் ஓதுகின்றான். திருவருள்பெற்ற ஜகத்குருவோ அம்மந்திரத்தை ஹிருதயமாகிற பலகையில் முத்திரிக்கின்றார்.

"மானுஷ குரு மந்த்ர தேந் காநே,
ஜகத்குரு மந்த்ர தேந் ப்ராணே."

177. குருவே மத்யஸ்தன். மனிதனையுங் கடவுளையும் ஒன்றுபடுத்துபவர் அவரே.

குருவின் ஆவசியகம்.

178. வினா:—நமக்கு ஏதோ வித்தை கற்பிக்கும் ஒவ்வொருவரையும் குருவென்னாமல் ஒரு சிறப்பான புருஷனை மாத்திரம் அப்பெயரிட் டழைக்கவேண்டிய தற் கவசியமென்ன ?

விடை:-தூரதேசத்துக்குப் போகிறவன் வழியை நன்றாயறிந்த வழிகாட்டியின் சொற்படி நடக்கவேண்டுமேயன்றி வழியிற் கண்டவர்களெல்லாம் சொல்லுகிறபடி நடக்கிற தென்றால் கடைசியில் அனர்த்தமாய் முடியுமாப்போல் ப்ரஹ்மத்தை யடையும் விஷயத்தி

லும் மோக்ஷவழியை யறிந்த ஒரே குருவின் உபதேசத்தை ஸந்தேஹமின்றி அநுசரிக்க வேண்டும்.

179. உள்ளன்புடனும் உண்மையான பக்தியுடனும் எவன் கடவுளை ஆராதிக்க வல்லவனோ அவனுக்குக் குரு அவசியமேயில்லை. ஆனால் அத்தகைய ஆழ்ந்த பக்தியானது அபூர்வமாயிருக்கின்றமையால், குரு அவசியமாய் வேண்டியிருக்கின்றார். உத்தமகுரு ஒருவரேயாயினும் உபகுருக்கள் பலர் இருக்கலாம். எத்தகைய சொற்பமான ரஹஸ்யத்தை யுபதேசிக்கும் குருவும் உபகுருவாகின்றார். மஹா அவதூதருக்கு அத்தகைய உபகுருக்கள் இருபத்துநால்வர் இருந்தனர்.

180. தன்குருவை ஸாதாரண மனிதனெனக் கருதுவோனுக்கு அக்குருவினிடத்திலிருந்து யாதொரு பிரயோஜனமும் உண்டாகாது.

சிஷ்யன் குருதூஷணம் செய்யக்கூடாது.

181. சிஷ்யன் ஒருபோதும் தன் குருவைத் தூஷிக்கக் கூடாது. குரு சொல்வதையெல்லாம் சிஷ்யன் கட்டளையெனக் கருதி பயபக்தியுடன் சிரமேற் வஹிக்கவேண்டும்.

"யத்யபி ஆமார் குரு ஶுண்டீ பாடீ ஜாய்
ததாபி ஆமார் குரு நித்யாநந்த ராய்"

என்று பங்காளிபாஷையில் ஒரு பாட்டு உண்டு. அதன் பொருள் என்னவெனில் எனது குரு சுராபான லோலராய்ப் பாபிகள் கூடியிருக்கும் நீச ஸ்தாநங்களுக்கேகினும், எனக்கு மாத்திரம் அவர் நித்தியாநந்தராயரேயாவர்.

182. முத்தை யெடுத்துக்கொண்டு சிப்பியை யெறிந்து விடு. உன் குரு உனக்குபதேசிக்கும் மந்த்ரத்தை மாத்திரம் கிரஹித்து அவரது மாநுட ஸாமாந்யமாகிய குற்றங்களைக் கவனியாது விட்டுவிடு.

183. யாவரேனும் உன் குருவைத் தூஷித்து நிந்திப்பரேல் நீ அதைக் கவனியாதே. உடனே அவனைவிட் டப்புறஞ் செல்.

184. தன்குருவைக் கேவலம் மநுஷ்யமாத்திரனெனக் கருதுகின்றவன் செய்யுஞ் ஜபதபங்களால் என்ன ப்ரயோஜநம் உண்டாகப் போகின்றது? நமது குருவை ஸாமாந்ய மனிதனென நாம் கருதுதல் கூடாது. ஶிஷ்யன் பகவானைத் தரிசிக்குமுன், ஞானோதயமானவுடன் குருவையே முதலில் தரிசிக்கின்றான். இந்தக் குருவே ஆச்சரியப்படத் தக்க விதமாக ஈசுவர மூர்த்தமாய் சிஷ்யனுக்குப் ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தை யநுக்கிரஹிக்கின்றார். அப்பொழுது தான் குருவும் ஈசனும் ஒன்றேயெனச் சிஷ்யன் அநுபவத்தால் அறிகின்றான். சிஷ்யன் என்ன வரம் கேட்டபோதிலும் அதை ஈசுவர வடிவமாய்விளங்கும் குருமூர்த்தி யளிக்கின்றார். அதுமாத்திரமன்றி நிரதிசயமான நிர்வாணபதவியைக் கேட்டாலும் அளிக்கின்றார். அல்லது ஆண்டான் அடிமையெனும் ஸம்பந்தத்தை வைத்துக்கொண்டு த்வைத பாவனையிலேயே யிருக்க விரும்பினாலும் அதையும் அநுக்கிரஹிக்கின்றார். சிஷ்யன் எதைக்கேட்டாலும் அதையெல்லாம் அளித்தருள குரு ஸித்தமா யிருக்கிறார்.

குருவானவர் அத்தியாத்ம ஸாதநவிர்த்தியை சுலபமாக்குகிறார்.

185. அஷ்ட காஷ்டமென்னும் சூதாட்டத்தில் காய்கள் எல்லாக் கட்டங்களின் வழியாகவும் சென்று கடைசியில் மையத்தைச் சேரவேண்டும் (அதாவது மலையேறவேண்டும்). அப்படி மலையேறாத காய்கள் அத்தனையும் அடிக்கடி இறங்குமிடத்திற்கே திரும்பி வந்து மீண்டும் மீண்டும் இவ்வாறே கட்டங்கள்தோறும் சென்றலையவேண்டும். ஆனால் இரண்டு காய்கள் ஒன்றாய்ச்சேர்ந்து தங்கள் பிரயாணத்தை யாரம்பித்து ஜதையாய்க் கட்டத்துக்குக் கட்டம் அசையுமாகில் எவ்வளவு சாமர்த்தியமாய் ஆடி ஆட்டத்தைக் கெலிக்கின்றவனாலும் அவற்றைப் பின்தள்ளமுடியாது. அதுபோலவே இவ்வுலகத்தில் எவர்கள் முதலில் சற்குருவின் திருவருள்பெற்று இஷ்டதேவதோபாஸனை புரிந்து பக்தி ஞான யோகாப்பியாஸங்களைச் செய்கின்றார்களோ அவர்கள் அபிவிர்த்தியடைந்து செல்லும் மார்க்கம் மிருதுவாயும் இடையூறின்றியும் மீண்டும் திரும்பி வருதலில்லாமலும் சுகநிறைவாயிருக்கும்.

186. நடுக்கடலில் கப்பலின் பாய்மரக்கொம்பின் உச்சியில் தங்கியிருந்த பறவையானது அவ்விடத்தில் இருக்க வெறுப்புற்று வேறொரு புதிய இடத்தைத் தேடிச்சென்று யாதோரிடமும் கிடைக்கப்பெறாமல் மிகவும் களைத்து வாடிப்போய்க் கடைசியில் முன்னிருந்த அதே பாய்மரத்தின் உச்சிக்கே திரும்பி வருகின்றதுபோல், ஸத்குருவை யாசிரயித்த இஷ்

10

யன் பூர்ணாநுபவியான அவர் தன்மேல் வைத்த கிருபையால் நியமிக்கும் கர்மாநுஷ்டானங்களையும் யோகாப்பியாஸங்களையும் கடுமையெனக்கருதி அக்குருவினிடத்திலும் நம்பிக்கையற்று வேறொரு குருவைத்தேடியுலகமெல்லாந் திரிந்து பார்த்தும் யாதொரு பயனும் பெறாமல், கடைசியில் மிகவும் மனம் நொந்து முன்னிலும் அதிகமான பயபக்தியுடன் தன் பிரதம குருவையே யடைந்து அவரது திருவடித் தாமரைகளிற் சரணமடைகின்றான்.

187. * "குரவர்கள் (ஆசாரியர்கள்) லக்ஷோபலக்ஷமாய்க் கிடைக்கலாமாயினும் சரியான சிஷ்யன் ஒருவன் கிடைப்பதுகூட துர்லபம்" என்ற மூதுரையொன்றுண்டு. இதன்பொருளென்னவெனில் : பிறர்க்கு அழகாய் உபதேசிப்பதில் நிபுணர்களான ஆசாரியர்கள் பலர் இருக்கலாம், ஆனால் அவ்வுபதேசத்தின்படிநடப்பவர்கள் வெகு சிலரே.

188. பிறருக்குக் குருவாயிருக்க யாராலாகும் ? இஜ்ஜகத்துக்குக் குருவும் இறைவனுமா யிருப்பவர் கடவுள் ஒருவரே.

**ஸந்ந்யாஸிகள்.**

189. வின:—உத்தமமான ஸந்ந்யாஸாஶ்ரமத்துக்கு உரிய அதிகாரி யாவன் ?

---

* "குருமிலே லாவேலாவ், சேலா நாமிலே எக்" என்பது இதற்குச் சரியான பங்காளி பாஷையிலுள்ள மூதுரை.

விடை:—நாளைக்குத் தனக்கு எங்கே அந்நவஸ்திரம் கிடைக்குமென்கிற சிந்தையேயின்றி உலகத்தை முற்றுந்துறப்பவனே உண்மையான ஸந்ந்யாஸி. அவன் உயரமான மரத்தின் உச்சியிலேறி அங்கிருந்து உயிரைச் சிறிதும் லக்ஷ்யம் செய்யாது கீழே விழுகின்றவனுக் கொப்பானவன்.

190. யோகிகளும் ஸந்ந்யாஸிகளும் ஸர்ப்பத்தையொத்தவர்கள். ஸர்ப்பமானது தானிருப்பதற்குப் புற்றையாவது வளையையாவது தானே அமைத்துக் கொள்ளாது எலி வளைகளிலும் எறும்புப்புற்றுகளிலும் குடியிருந்துவாழும். முன்னிருந்த புற்றாவது வளையாவது வசிப்பதற்கு இசையாமற் போய்விட்டால் அதை விட்டு வேறொன்றிற்போய் நுழைகின்றது. அதுபோல யோகிகளும் ஸந்ந்யாஸிகளும் தங்களுக்கென வீடுகள் வைத்துக்கொள்ளாமல் இன்றைக்கொரு வீட்டிலும் நாளைக்கொரு வீட்டிலுமாக இவ்வாறு பிறர் வீடுகளிலேயே தங்கள் காலத்தைக் கழிக்கின்றனர்.

191. குருவையும் தெய்வத்தையும் வெறுங்கையுடன்போய்த் தரிசிக்கக்கூடாது. நாம் கொண்டுபோகும் காணிக்கை எவ்வளவு அற்பமாயிருப்பினும் மஹான்களைத் தரிசிக்கும்பொழுது அவ்வற்ப வஸ்துவையாவது ஸமர்ப்பிக்க ஒருபோதும் தவறக்கூடாது.

"ரிக்தஹஸ்தேந நோபேயாத் ராஜாநம் தைவதம் குரும்". —ப்ராசீந ஸ்லோகம்.

"பத்ரம் புஷ்பம் ஃபலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்ச்ஹதி, ததஹம் பக்த்யுபஹ்ருதம் அஸ்நாமி ப்ரயதாத்மந:". பகவத்கீதா.

க. கடல் நீர் தூரத்தினின்று பார்ப்பதற்கு நீல நிறமாய்க் காணப்படினும், ஸமீபத்திற்போய்ப் பார்க்குங்கால் மாசற்று விளங்குவதுபோல், ஸ்ரீகிருஷ்ணன் ஸாதாரண மனிதர்களுக்குக் கரியமேனியனாய்க் காணப்படினும், அவரது ஸமீபம் சென்றவர்களுக்கு மாத்திரம் சுத்தஸ்படிகம்போல் நிர்மலமாயும் தேஜோரூபமாயும் விளங்குகின்றார்.

உ. 'கீதா' எனும் பதத்தைத் தலைகீழாய் உச்சரித்தால், 'தாகி' என்றாகிறது. வடமொழியில் 'துறவி' என்று பொருள் படுகிற 'த்யாகி' எனும் பதத்தையே வங்கநாட்டார் 'தாகி' என்று உச்சரிக்கின்றமையால், பகவத்கீதா சாஸ்திரத்தைத் தலைகீழாய்ச் சொல்லும்படி அவ்வளவு நன்றாய்ப் படித்தறிபவன் 'த்யாகியே' யாகின்றான்.

ந. அம்பால் அடிக்கப்பட்ட குரங்கு தன்னைக் கொன்ற வேடன் காலண்டையே விழுந்து ஆவியை யிழப்பதுபோல், மாயையால் மயங்கிய மனிதர்கள், அழகே உருவெடுத்த அங்கனைகளின் திருவடிக்கே தொண்டுபூண்டு தம் ஆவியை யிழப்பர்.

ச. பரதன், ப்ரஹ்லாதன், சுசப்ரஹ்மரிஷி, விபிஷணன் பரசுராமர், பலிசக்ரவர்த்தி முதலியவர்களும், ஆயர் பாடியில் அவதரித்த கோபிகாமணிகளும் பகவானது திருவருளைப்பெற்று தம் குருக்களின் ஆஜ்ஞையைக்கூட கடந்து முக்தி யடைந்தனர்.

ரு. கிஞ்சிஞ்ஞனாயிருந்தும் ஸர்வமும்தெரிந்தது போல் நடித்தல் நீசலக்ஷணமாம்.

"ஹே தேவி அம்பிகே, என் ஆருயிர் அன்னையே, யான் உலகத்தாரது புகழை வேண்டேன்; தேகசுகத்தையும் வேண்டேன். கங்கையும் யமுனையும் பிரியாக்கலப்பாய் என்றும் கலந்திருப்பதுபோல் என் ஆத்மாவை நின் திவ்ய ஸ்வரூபத்தில் லயிக்கப் பெறுதலையே வேண்டினேன். தாயே, யான் பக்தி செய்திலேன், யோகமும் புரிந்திலேன், எளியனேன், கதியிலேன். யான் ஒருவனது புகழையும் வேண்டேன்; என் மநதுமாத்திரம் நினது திருவடித்தாமரை நீழலில் படிந்திருக்க வேண்டினேன், அருள்புரிவாய்."

# முத்திநெறி.

ஒவ்வோருவனும் தன்தன் மதத்தையே
அநுஸரிக்கவேண்டும்.



192. ஒவ்வொருவனும் தன்தன்மதத்தையே அநுஸரிக்கவேண்டும். கிறிஸ்தவன் கிறிஸ்துமதத்தையும் முஹம்மதியன் இஸ்லாம் மதத்தையும் அப்படியே அவரவர்கள் தம்தம் மதாசாரங்களையும் கைப்பற்றியொழுகவேண்டும். ஹிந்துக்களுக்கு ஆரியரிஷிகள் ஏற்படுத்திய ஸநாதந தர்ம மார்க்கமே உத்தம மார்க்கமாகும்.

193. ஜநங்கள் தங்கள் நிலங்களை எல்லைப்படுத்திப் பிரித்துக்கொள்ளுகின்றனரேயன்றி மேலே யிருக்கும் ஸர்வவ்யாபகமான ஆகாசத்தைமாத்திரம் பிரிவினைசெய்ய ஒருவராலும் ஆகவில்லை:- பிரிக்கக்கூடாத ஆகாசமானது எல்லாவற்றையும் சூழ்ந்து எங்கணும் வியாபித்திருக்கின்றது. அதுபோல, சாதாரணமனிதன் அஞ்ஞானத்தால், "என் மதந்தான் உண்மையானது, என் மதந்தான் சிறந்தது" என்கிறான். ஆனால் அவன் மநதில் ஸத்யஜ்ஞாநம் உதயமாகிப்பிரகாசிக்குங் காலையில், ஸமயவாதிகளின் போரைக் கடந்து ஸமயாதீ

தப்பழும்பொருளாய் விளங்குவது அகண்ட ஸச்சிதாநந்த ஸ்வரூபமேயென்று அறிந்துகொள்வான்.

194. பிணியால் வருந்தும் குழந்தைகளுக்குப் பத்தியம் கொடுக்கும் தாயானவள் ஒரு குழந்தைக்கு அந்நமும் கறியமுதும், மற்றொன்றுக்கு சவ்வரிசி ஆரோரூட் கஞ்சியும், மூன்றாவதொரு குழந்தைக்கு ரொட்டியும் வெண்ணெயும் கொடுப்பதுபோல், பகவானும் பலவகை மனிதர்களின் இயல்புகளுக்கேற்றவாறு பல்வேறு சமயங்களை யேற்படுத்தியிருக்கின்றார்.

**ஸர்வ ஸமய ஸமரஸம்.**

195. பிறமதங்களும் பரகதிக்குச் செல்லும் வழிகளேயென்று உண்மையான பகவத்பக்தன் கருதுதல் வேண்டும். அந்யமதங்களை நாம் எப்பொழுதும் கௌரவமாகவே நோக்கவேண்டும்.

196. உன்னுடைய மதத்திலேயே எப்பொழுதும் அழுத்தமான பக்தி சிரத்தைகளுடன் கூடியிரு. ஆனால் (வீரசைவம் வீரவைஷ்ணவம் என்பவற்றைப் போன்ற) மூடமதப் பிடிவாதத்தையும் பிறமதங்களைக் கண்டு சகியாமையையும் விட்டுவிடு.

197. கிணற்றுத் தவளைக்கு நிகராகவேண்டாம். கிணற்றுத் தவளைக்குத் தன் கிணற்றைவிட உயர்ந்ததாவது சிறந்ததாவது ஒன்றும் தெரியாது. மதப்பிடிவாதக்காரர்களும் அவ்வாறே. அவர்கள் தங்கள் கொள்கைகளைத் தவிர்த்து வேறெதுவும் சிறந்ததாயிருக்கக் கூடுமென்றறிகின்றார்களில்லை.

## வீண்வாதம்புரியேல்.

198. விவாதம் செய்யவேண்டாம். உன்னுடைய மதத்திலும் அபிப்பிராயங்களிலும் நீ அழுத்தமாயிருப்பதுபோல் பிறரும் தம்மதத்திலும் அபிப்பிராயங்களிலும் அழுத்தமாயிருக்கச் சுதந்திரம் அளிக்கவேண்டும். ஒருவன் தவறான கொள்கையினன் என்று அவன் மநதுக்குத் திருப்தியுண்டாகுமாறு வெறும் வாதத்தால் நிரூபித்துக்காட்ட ஒருகாலும் உன்னால் முடியாது. ஈசனது திருவருள் உண்டாகுங் காலையில் ஒவ்வொருவரும் தத்தம் தவறுகளை யுணர்ந்து அவற்றினின்றும் விலகுவார்கள்.

199. ஆழமில்லாத குட்டையினின்றும் தெள்ளிய நீரைப் பருகவேண்டுமானால் மேலேயிருந்து ஜலத்தை யெடுக்கவேண்டுமே யல்லாது அதைக் கலக்கக்கூடாது. கலக்கினால் அடியிலுள்ள அழுக்கெல்லாம் மேலே வந்து ஜலத்தைப் பாழாக்கிவிடும். அதுபோலவே நீ தூய்மை யடைய விரும்பினால் திடமான விஸ்வாஸத்துடன் பக்தியோகம் முதலிய ஸாதநங்களைப் படிப்படியாய் அப்பியஸிக்க வேண்டுமே யல்லது வீண் வேதவாதங்களிலும் தர்க்கங்களிலும் தலையிட்டுக்கொள்வதிற் பயனில்லை. இல்லாவிடில் உனக்குள்ள சொற்பமூளையும் மயங்கித் தாறுமாறாய்ப் போய்விடும்.

200. தேனீயானது தாமரையிதழின் வெளியே நின்று தேனின் இனிய சுவையை யறியாதவரையில், அஃது பூவைச்சுற்றிலும் ரீங்காரம் செய்து வட்டமிட்டுக்கொண்டிருக்கின்றது. ஆனால் அது மலரின் உள்ளே

சென்றுவிட்டால் அதிலுள்ள அமுதத்துக் கொப்பான மதுவைச் சத்தமின்றி பானம் பண்ணுகின்றது. அது போலவே சமயசித்தாந்தங்களைப்பற்றி ஒருவன் வாதம் பண்ணிக்கொண்டிருக்கும் வரையில் அவன் பிரஹ்மா நந்தாமிருதத்தைப் பாநம்பண்ணாதவனே. அதன்சுவை யை அவன் அறிந்துவிட்டால் உடனே மௌநமுற்று சாந்திநிறைந்து விளங்குகின்றான்.

201. வெறுங்குடத்தில் நீரைக் கொட்டினால் உண்டாகும் நீர்க்குமிழிகளின் சத்தமானது குடம் நிறைந்தபொழுது நின்றுவிடுகின்றது. அதுபோலவே கடவுளைக் காணாதவன் ஈஸ்வர நிச்சயத்தைப்பற்றியும் ஈஸ்வர லக்ஷணத்தைப் பற்றியும் விண் தர்க்கம் புரிகின் றான்; ஆனால் பகவானை ஏகாந்தத்தில் தரிசித்தவன் ப்ர ஹ்மாநந்த சுகத்தை மௌநமாய் அநுபவிக்கின்றான். "நிறைகுடம் நீர்தளும்பலில்".

கர்மாநுஷ்டாநம்.

202. இக்காலத்து ஜநங்கள் எவ்விஷயத்திலும் ஸாரத்தையே கொள்ளவேண்டுமென்கிறார்கள். அவர் கள் மதத்தின் முக்கியாம்ஸத்தை யேற்றுக்கொள்வார் களே யன்றி அமுக்கியாம்ஸங்களாகிய கர்மம், சடங்கு, ஸிஷ்டாசாரம், ஸம்ப்ரதாயம் முதலியவற்றைக் கவனிப் பதில்லை.

203. நெல்மணியில் முளைத்துப் பயிராவதற்கு முக்கியமான அம்ஸம் முளையேயென்றும், அதை மூடி யிருக்கும் உமியும் பதரும் பயனற்றதென்றும் கருதப்

படினும், உமியை நீக்கி அரிசியை மாத்திரம் நிலத்தில் நட்டால், அது முளைத்துக் கதிர்வாங்கிப் பலனளியாது; ஆகையால் நெற்பயிர் வேண்டுபவன் உமியுடன் கூடிய நெல்மணியையே விதைத்தல்வேண்டும். ஆனால் ஒரு வன் அதிலுள்ள அரிசியை எடுக்கவேண்டுமாயின் அப் பொழுது உமியை நீக்கவேண்டும். அதுபோலவே மத மானது வளர்ந்து செழித்தோங்கி யிருப்பதற்குக் கர் மாநுஷ்டாநங்களும், ஆசாரங்களும் இன்றியமையாத வை. அவை ஸத்தியத்தின் பீஜங்களை யடக்கிக்கொண் டிருக்கும் பாத்திரங்களா யிருப்பதால் பிரதி மனித னும் உண்மை நிலையை யுணரும் வரையில் அக்கருமங் களை யவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

204. எவ்விஷயத்திலும் உட்கருத்தையும் அது மேற்கொண்டிருக்கும் வெளி வடிவத்தையும் கௌர விக்கவேண்டும்.

205. அருமையான முத்தை மூடிக்கொண்டிருக் கும் சிப்பியானது தன்னளவிற் பயனற்றதாயினும் முத்தின் வளர்ச்சிக்கு இன்றியமையாததாயிருக்கின் றது. முத்தையே வைத்துக்கொண்டிருக்கின்றவனுக்கு அதன் ஓட்டினால் யாதொரு பயனுமில்லை. அவ்வாறே பரமஸத்யமாகிய பரம்பொருளைப் பெற்றவர்களுக்குச் சரியை, கிரியையாதிகள் அநாவசியமாகும்.

206. ஹரிநாம ஸங்கீர்த்தநத்தைக் கேட்டமாத் திரத்திலேயே அன்பு நீர் ஆறுய்ப்பெருகாதிருக்கும் வரையில் தான் கர்மாநுஷ்டாநங்கள் வேண்டப்படும். ஹரிநாமத்தை யுரைக்கும்பொழுதே உள்ளங்கனிந்தா

நந்தக் கண்ணீர் மல்கும் மெய்யன்பனுக்குக் கர்மாதிகள் அநாவசியம்.

207. ஜீவாத்மா தேஹத்தைவிட்டுப் பிரியுஞ் சமயத்தில் எதை நினைக்கின்றதோ அதற்குத் தக்க சரீரத்தை யடுத்த ஜந்மத்தில் அடைகின்றது. ஆகையால் கர்மம் பக்தி முதலிய நல்வினைகள் அத்தியாவசியகமானவை. ஸந்தத ஸாதநப்பயிற்சியால் உலக எண்ணங்கள் மநத்தின்கண் எழாமல் ஒழியுங்கால், ஈசுவர பாவனையே மேனோக்கி நின்று ஜீவனைக்கவிந்துகொண்டு காப்பாற்றுகின்றது.

208. வி௫:—ஸாத்விக, ராஜஸ, தாமஸ உபாஸநாக்கிரமங்களுக்குள்ளே உள்ள வேற்றுமை யாது?

விடை:—வீண் டம்பமும் படாடோபமு மின்றி உண்மையான பக்தியுடன் உள்ளங் கசிந்துருகி உபாஸிப்பவன் ஸாத்விக உபாஸகன்.

ஈஸ்வராராதநத்தின் பொருட்டுத் தன் வீட்டை நன்ருய் அலங்கரித்து, ஸங்கீத நாட்டியங்களுடனும் தோசைவடைப் பொங்கல் பணியாரம் பழவகைகள் முதலிய விநியோகங்களுடனும் ஆடம்பரமாய்க் காலக்ஷேபங்கள் வைப்பவன் ராஜஸ உபாஸகன்.

கணக்கற்ற வெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும் பலிகொடுத்து மதுமாம்ஸங்கள் நிவேதநம்செய்து தேகம் தெரியாமல் 'லாகிரி' கொண்டு ஆடிப்பாடிப் பூஜிக்கின்றவன் தாமஸிகன்.

**மதக்கக்ஷிகள்.**

209. வினா:—தளங்கள் ஏற்படுத்துவதால் நன்மையுண்டாகுமா ?

[இங்கே 'தளம்' என்பது சிலேடையாகப் பிரயோகிக்கப்பட்டுள்ளது. வங்கபாஷையிலே 'தளம்'என்னும் சொல் 'மதக்கக்ஷி' என்றும், வெளிப்போக்கில்லா ஜலமுள்ள குட்டையிற் படரும் 'பாசி' என்றும் பொருள்படும்].

விடை:—'தள' மானது ஓடும் ஜலத்தில் உண்டாகாது. நீரோட்டமின்றி தங்கியிருக்கும் சிறுகுட்டைகளிலே தான் அது வளரும். பகவானைப் பெறவேண்டுமென்று ஆவல்கொள்ளும் ஹிருதயமுடையவனுக்கு வேறெதைக் கவனிப்பதற்கும் அவகாசமில்லை. புகழும் பெருமையும் பெற விரும்புகின்றவன் தான் 'தளங்களை' (கக்ஷிகளை) ஸ்தாபிக்கின்றான்.

210. 'தள' மானது சுத்தஜலம் நிறைந்த விசாலமான தடாகங்களிலே வளராது, நீரோட்டமின்றி நச்சுக்காற்றடிக்கும் சிறு குட்டைகளிலேயே வளரும். அதுபோலத் 'தள' (மதக்கக்ஷி) மானது தற்பெருமை சிறிதுமின்றி விரிந்த பரிசுத்தமான எண்ணங்கொண்ட ஸிஷ்ய ஸமூஹத்திலே உண்டாவதில்லை; மற்று தற்பெருமையும் கபடமும், மூடமதப் பிடிவாதமும் குடிகொண்ட கூட்டாத்தாருள் அது ஊர்ஜிதமாய் வேரூன்றி விடுகின்றது.

211. சில வருஷங்களுக்குமுன் ஹிந்துக்களும் ப்ராஹ்மஸமாஜிகளும் தத்தம் மதங்களை உண்மையான

உள்ளன்போடும் வைராக்கியத்தோடும் மும்முரமாய்ப் பிரசங்கித்துக்கொண்டிருக்கையில், அவ்விரு கூட்டத்தாரையும் பற்றிப் பகவாந் ஸ்ரீராமகிருஷ்ணரது அபிப்பிராயமென்ன வென்றொருவன் கேட்டதற்கு, அவர் "என் ஜகதம்பிகை இருகூட்டத்தாராலும் தன் காரியத்தை நடத்துவிக்கின்றாள்" என விடை பகர்ந்தார்.

212. வினா:—ஹிந்துக்களுக்குள்ளே பல மதப் பிரிவுகள் இருக்கின்றனவே, அவற்றுள் எதை நாம் அவலம்பிக்கவேண்டும் ?

விடை:—ஒருகால் பார்வதிதேவியார் மஹாதேவனை நோக்கி "நாதா! ஸச்சிதாநந்த சொரூபத்தை யடைவதற்கு ஸமூக்ஷமோபாயமென்ன?" என்று வினவ, 'பக்தியே சிறந்த உபாயம்' என்றார் மகாதேவமூர்த்தி. ஆகவே அவ்வம்மத பேதங்களுக்குச் சிறப்பாய் அமைந்த அம்சங்கள் அமுக்கியமானவை. ஆதலால் ஒவ்வொருவரும் தத்தம் மதத்தில் ஏற்பட்டுள்ள தர்மாசாரங்களைப் பக்தி சிரத்தையாய் செய்யக்கடவர்.

213. ஸநாதநதர்மமாகிய ஹிந்து மதத்திற்கும் ப்ராஹ்ம (ப்ராஹ்மஸமாஜ) மதத்திற்கும் உள்ள வேற்றுமை யென்னவென்று பக்தியுள்ள ப்ராஹ்மன் ஒருவன் வினவியதற்குப் பகவாந் பரமஹம்ஸர், "அது செவிக்கினிமையாயுள்ள ஸப்தஸ்வரத்துடன் கூடிய ஸங்கீதத்துக்கும், ஸப்தஸ்வரங்களுள் ஏகதேசமான ஒரு ஸ்வரத்துக்கும் உள்ள வேற்றுமையைப் போன்றது. ப்ராஹ்மமதம் ஏகஸ்வரத்தையொத்த ப்ரஹ்மத்தால் மாத்திரம் திருப்தியடைந்து நிற்கின்றது;

மற்று ஹிந்துமதமோ மனோஹரமான மதுரநாதத்தாற் கர்ணாநந்தமளித்துதவும் ஸப்தஸ்வரங்களாலும் நிறைந் திருக்கின்றது" என்றார்.

214. வினா:—மதங்கள் க்ஷீண மடைவதேன்?

விடை:—மழை நீர் சுத்தமா யிருந்தபோதிலும் பூமியில் விழுங்காலையில் அழுக்கடைந்துபோய்விடுகின் றது. கூரையும் குழாய்களும் அழுக்காயிருக்குமேல், அவற்றின்வழியாய் வரும்ஜலமும் அழுக்காகவே தானி ருக்கும். அதுபோலவே மத ஸித்தாந்தங்களெல்லாம் பரிசுத்தமாயிருப்பினும் அவற்றை உபதேசிக்கும் ஆசா ர்யர்களுடையதும் அவலம்பிக்கும் மதஸ்தர்களுடைய துமான மாலிந்யச்சேர்க்கையின் தோஷத்தால் க்ஷீணித் துத் தத்தம் பரிசுத்தத்தை யிழந்து போகின்றன.

மதத்தைப்பற்றி பேசுவது சுலபம்;
அதன்படி நடப்பது கடினம்.

215. ஸ, ரி, க, ம, ப, த, நி, என்று வாயால் சொல்லிவிடுவது சுலபமே யாயினும் அவ்வாறு பாடு வதும் வாத்தியங்களில் வாசிப்பதும் அவ்வளவு சுலப மல்ல. அதுபோலவே மதத்தைப்பற்றிப் பேசுவது சுல பமே; அதை அநுஷ்டிப்பது மாத்திரம் கஷ்டமாம்.

216. ஸாதாரண ஜனங்கள் மதத்தைப் பற்றிப் பெயாய்யாய்ப் பேசுவார்களேயன்றி அதில் ஒரு மணி யளவேனும் அநுஷ்டிக்க மாட்டார்கள். ஆனால் ஞானி யானவன் பேசுவது மாத்திரம் கொஞ்சமாயினும், அவ ன் வாழ்க்கை முழுவதும் மதாநுஷ்டான ரூபமாகவே யிருக்கும்.

217. மற்றவர்கள் எதைச் செய்யவேண்டுமென்று விரும்புகின்றனையோ, அதை நீயே (முதலில்) செய்.

**மனிதன் பிறக்கும்போழுதே இருவித சுபாவமுடைமை.**

218. மனிதன் இருவித சுபாவத்துடன் இவ்வுலகத்திற் பிறக்கின்றான். ஒன்று முக்திக்கு ஸாதநமாயிருக்கும் வித்யாஸ்வபாவம்; மற்றொன்று ஸம்ஸாரத்திலும் பந்தத்திலும் அழுத்தும் அவித்யாஸ்வபாவம். ஜநந காலத்தில் இவ்விரு சுபாவங்களும் தராசின் தட்டுபோல் ஸமநிலையிலிருக்கின்றன. பிறந்தவுடனே ஸம்ஸாரமானது தன் சுகங்களையும் போகங்களையும் ஒரு தட்டிலும், ஆத்மாவானது தனது ஆநந்தத்தை மற்றொரு தட்டிலும் வைக்கின்றன. மனிதனது புத்தி ஸம்ஸார சுகங்களை விரும்பும்பக்ஷத்தில் ஸம்ஸாரத்தட்டு பளுவாகிக்கீழே பூமியின் பக்கமாய்ச்சாய்கின்றது; ஆத்மாவை விரும்பும் பக்ஷத்தில் ஆத்மதத்தட்டு ப்ரஹ்மத்தின் பக்கமாய் சாய்கின்றது.

219. மீன் பிடிக்கும் மூங்கில் வலையில் தண்ணீர் முத்து முத்தாய்ச் செல்வதைக் கண்டு சந்தோஷத்தினால் அந்நீருடன் வலைக்குட் செல்லும் சிறு மீன்கள் அதினின்றும் மீண்டுவர முடியாமல் அதிலேயே அகப்பட்டுக்கொண்டு தத்தளிப்பதுபோல், மூடர்கள் உலகத்தின் பகட்டைக் கண்டு பிரமித்து விஷய சுகலோலர்களாய் விடுகின்றனர். ஆனால் வலையினுள் நுழைவது சுலபமாயினும் அதினின்று மீண்டு வெளியே வருவது கஷ்டமாவதுபோல், ஸம்ஸாரத்தில் முதலில் சுல

பமாய்ப் பிரவேசித்துவிடலாம்; பிரவேசித்த பிறகு அதினின்று தப்பித்துக்கொண்டுவருவது அதிக கஷ்டமாம்.

இளமையில் மநத்தை ஈசன்பால் செலுத்துக.

220. 'செடியாய் வளையாதது மரமாய் வளையாது.' மிருதுவான இளமூங்கிலை இஷ்டப்படி வளைக்கலாம். மரமாய் வளர்ந்த மூங்கிலை வளைக்க முயன்றால் மளுக்கென முறிந்துபோம். அதுபோல, இளமையிற் சிறுவர்களின் மநத்தைக் கடவுள்பால் திருப்புவது சுலபம். அச்சிறுவர்களே வளர்ந்து முதியோர்களானால் அவர்கள் ஹ்ருதயம் எவ்வகைத் திருத்தத்துக்கும் இடங்கொடாது.

221. நன்றாய்க்கனிந்த மாங்கனியை எம்பெருமானுக்காயினும் அவனது மெய்யன்பர்க்காயினும் ஸமர்ப்பிக்கலாம். அல்லது வேறெவ்விதமாயாவது பிரயோஜநப்படுத்தலாம். ஆனால் அதை ஒருமுறை காகை குத்திவிட்டால், அஃது எதற்கும் பயன்படாமற் போகின்றது. அஃது எம்பெருமானுக்குச் சமர்ப்பிக்கவும் ஆகாது, ஒரு பிராமணனுக்குத் தானமாகக் கொடுக்கவும் ஆகாது; அதையொருவர் தின்னவும் ஆகாது. அதுபோலவே சிறுவர்களையும் சிறுமிகளையும், அவர்களது ஹிருதயம் பரிசுத்தமாயும் உலகத்தின் ஆசாபாசங்களாற் கட்டுண்டு களங்க முறாமலும் இருக்கையிலேயே எம்பெருமானது கைங்கர்யத்திற் பழக்கவேண்டும். உலகத்தின் ஆசைமாத்திரம் ஒருமுறை அவர்கள் மனதில் பிரவேசித்து விடட்டும், அல்லது விஷய

சுகமெனும் பிசாசின் நிழல் மாத்திரம் அவர்கள்மேல் விழட்டும், அப்புறம் அவர்களை நன்னெறியில் திருப்புவது மஹாகஷ்டம்.

222 புதிதாய்ப்பிறந்த கன்றுக்குட்டி மிகவும் உல்லாஸமாயும், 'குசாலா'யும் இருக்கின்றது. அது 'கும்மாளம்' அடித்துக்கொண்டுப் பகலெல்லாம் இங்குமங்கும் குதித்தோடித் தன் தாயினிடம் பாலுண்ணுவதற்கு மாத்திரம் சிறிது ஓய்ந்து நிற்கின்றது. ஆனால் தும்புக்கயிற்றால் அதின் கழுத்தைச் சுற்றியவுடனே, அது கிரமக்கிரமமாய் மெலியத்தொடங்கி உல்லாசமாயிருப்பதெல்லாம் ஒழிந்து, துக்கத்தாற் சோர்ந்து துரும்பாய் இளைத்துப்போய்விடுகின்றது. ஸம்ஸாரக்கவலைகள் இல்லாதவரையில் சிறுவன் சுகமாயிருக்கிறான். ஆனால் அவன் சரியான காலத்தில் விவாஹமெனும் பேதிக்கக்கூடாத பந்தத்துக் குட்பட்டு குடும்ப பாரம் தலையிலிடிப்பதை உணர்ந்தவுடனே, முன்போல் வேடிக்கை விநோதமாயிருப்பதை யொழித்துக் குடும்பக் கவலைகளால் சோர்ந்தமுகத்தன் ஆகின்றான். அழகாயும் ஒளிபொருந்தியுமிருந்த அவனது கபோலத்தில் காந்தி மங்கிப்போய்விடுகின்றது. திரையும் அவன் நெற்றியில் விழ ஆரம்பிக்கின்றது. எவனொருவன் காலைக்காற்றைப்போல் தாராளமாயும் அன்றலர்ந்த மலர்போல் அபிநவமாயும் பனித்துளிபோற் பரிசுத்தமாயுமுள்ள பாலனாகவே தன் ஆயுள் முழுவதும் இருக்கின்றானோ, அவனே பாக்கியவான்.

223. வினா:—தேவரீர் ஏன் இளைஞர்களை நேசிக்கின்றீர்கள்?

விடை:—ஏனெனில் அவர்களதுமனம் முழுவதும் அவர்கள் சுவாதீனத்திலேயே இருக்கின்றது. ஆனால் வயதான கிருஹஸ்தனுக்கோ அப்படியில்லை. அவன் மனதிற் பாதி மனைவியினிடம் செல்லுகின்றது. குழந்தையொன்று பிறந்துவிட்டால் அது மற்றொரு கால் பங்கை யிழுத்துவிடுகின்றது. மிஞ்சியிருக்கிற கால்பாகமும் பந்துமித்திரர், பேர், புகழ், உத்தியோகம், அந்நவஸ்திரம் முதலியவற்றின்மேற் சென்றுவிடுகின்றது. ஆகையால்தான் இளைஞரின் ஹிருதயம் ஈசனை யெளிதில் அடையும்.

224. கிளியானது கிழமாகி, அதன் தொண்டைச் சவ்வு தடித்துப்போன பிறகு அதற்குப் பாடக் கற்பிக்கமுடியாது. அது இளமையி லிருக்கும்பொழுதே அதற்குக் கற்பிக்கவேண்டும். அதுபோலவே, கிழத்தனம் வந்தபிறகு மநத்தைப் பகவாந்மேல்செலுத்துவது மஹா கடிநம். இளமையிலோ அது வெகு சுலபம்.

ஸம்ஸாரிகளுக்கு ஸர்வேசுவரனைப் பூஜிக்க ஸமயங் கிடைப்பதில்லை.

225. "என்மகனாகிய ஹரீசனுக்கு வயதுவந்தபிறகு, அவனுக்குக் கலியாணம் செய்து குடும்ப பாரத்தை அவனிடத்தில் ஒப்பித்துவிட்டால், பிறகு நான் உலகத்தைத் துறந்து யோகாப்பியாஸம் செய்யத்தொடங்குவேன்" என்றொருவன் சொல்ல, அதற்குப் பகவாந் ராமகிருஷ்ணதேவர்: "யோகாப்பியாஸம் செய்ய உனக்கு ஒரு சமயமும் வாய்க்காது. இப்பொழுது ஹரீஸ

னுக்குக் கலியாணமானாற் போதுமென்கிறாய். கலியாணமானபிறகு, "ஹரீசனுக்கும் கிரீசனுக்கும் என்மேல் அதிக ஆசை. அவர்கள் என்னைவிட்டு ஒரு நிமிஷமும் பிரிந்திருக்கமாட்டார்கள்" என்பாய். இன்னும் பல நாள் பொறுத்து 'ஹரீசனுக்கு ஒரு பிள்ளை பிறக்கட்டும்; அவனுக்கும் கலியாணம் செய்துவைத்துப் பார்க்கவேண்டுமென்றிருக்கிறது' என்பாய். இவ்வாறு 'ஆசைக்கோரளவில்லை' என்றபடி உன் ஆசை மேன்மேலும் வளர்ந்துகொண்டேயிருக்கும்" என்றார்.

226. பிசாசுபிடித்தவர்மீது மந்திரித்த கடுகு விதைகளைப் போட்டுப் பிசாசை யோட்டுவதுண்டு. ஆனால் அவ்விதையிலேயே பிசாசு புகுந்திருந்தால், அதைக்கொண்டு பிசாசை எவ்வாறு ஓட்டமுடியும்? பகவானைத் தியானிப்பதற்கு உதவவேண்டிய ஹிருதயமே பிரபஞ்சத்தின் பாபசிந்தைகளால் களங்கமுற்றிருந்தால், அத்தகைய கெட்ட கருவியைக்கொண்டு நீ எவ்வாறு தியானம் முதலிய ஸாதநங்களை அப்பியஸிக்க முடியும்?

ஸம்ஸாரிகள் உள்ளன்புடன் பக்திசெய்வதில்லை.

227. உலகத்தில் ஏற்பதவியும் ஸம்பத்தும் பெற வேண்டிய ஸம்ஸாரிகள் ஹரிநாமஸங்கீர்த்தநமும் மற்றுமுள்ள தானதர்ம புண்யகர்மங்களும் செய்கின்றனரே யன்றி, கஷ்டமும் விசனமும், வறுமையும் மரணமும் அவர்களைச் சூழும்பொழுது, அவர்கள் இவற்றையெல்லாம் மறந்துவிடுகின்றனர். அவர்கள், 'ராதாகிருஷ்ணா, ராதாகிருஷ்ணா' என்று பகலெல்லாம் கெட்

டுருப்போட்டுப்பாடி, ஒரு பூனைவந்து பிடித்துக்கொள்ளும் பொழுது, அத்திவ்ய நாமத்தை மறந்து, 'கா, கா' என்று கத்தும் கிளிப்பிள்ளையை யொத்தவர்கள்.

228. 'ஸ்ப்ரிங்' (வில்) மெத்தையின்மேல் உட்கார்ந்தபொழுது அது சுருங்கி, எழுந்தவுடன் முன் நிலையை யடைவது போல், இஹலோக சுகங்களில் ஆசைகொண்டவர்கள் வேதாந்த காலக்ஷேபங்களைக் கேட்கையில் மாத்திரம் ஞானசிந்தனை யுள்ளவர்களாயிருந்து, மறுபடியும் உலகத்தில் தத்தம் தொழில்களில் பிரவேசிக்கும்பொழுது முன் கேட்ட உயர்ந்த ஞானவிஷயங்களை யெல்லாம் மறந்து முன்போலவே பாப சித்தர்களாய்விடுகின்றனர்.

229. இரும்பானது உலைக்கூடத்தில் உள்ளவரையில் செந்நிறமாய்ப் பழுக்கக்காய்ந்து, அதனின்று வெளியே வந்தபிறகு கருநிறமாய் மாறுவது போல், உலகவின்பத்தில் அழுந்தியுள்ளவன் பகவத் ஸந்நிதியிலும் பாகவத கோஷ்டியிலும் இருக்கும் வரையில் பக்திக்கடலில் ஆழ்ந்திருந்து அவற்றைவிட்டு நீங்கினவுடனே அவ்வெண்ணத்தையே முழுதும் மறந்து விடுகின்றான்.

ஸம்ஸாரிகள் மஹோபதேசத்தை கவனியாதிருத்தல்.

230. ஜலமானது பாலத்தின் ஒரு பக்கமாய் நுழைந்து மற்றொரு பக்கமாய் வெளிப்படுவது போல், மஹோபதேசமும் ஸம்ஸாரிகளின் ஹிருதயத்தில் ஒரு காதின்வழியாய் நுழைந்து அவர்கள் மனதில் அழுந்திப்

பதியாமல் மற்றொரு காதின் வழியாய் வெளிப்பட்டு விடுகின்றது.

231. கல்லில் ஆணியை யடிப்பது கடினமாயினும் மண்ணில் அதை வெகு சுலபமாய் அடிக்கக்கூடியது போல், ஞாநியின் உபதேசமானது ஸம்ஸாரிகளின் மநத்தில் சிறிதேனும் அழுந்தாமல் புண்ணியாத்மாக்களின் பக்தி நிறைந்த ஹிருதயத்தில் வெகு சீக்கிரத்தில் வேரூன்றி விடுகின்றது.

232. புறாவின் இரைப்பையானது தானியவிதைகளால் நிறைந்திருப்பதுபோல் ஸம்ஸாரிகள் ஹிருதயமும் உலக சிந்தைகளாலும் ஆசைகளாலும் நிறைந்திருக்கு மென்பதை அவர்களுடன் பேசுவதனாலேயே அறிந்துகொள்ளலாம்.

233. ஸம்ஸாரத்திலேயே அழுந்தியிருப்பவனது லக்ஷணமென்னவெனில்:—பகவத் கீர்த்தநங்களையும், காலக்ஷேபங்களையும், ஸ்தோத்ரங்களையும் தானும் கேளாது, பிறரையுங் கேட்கவொட்டாது தடுத்து, ஸத்புருஷர்களையும், ஸத்ஸங்கத்தையும் வைது பகவத் ஸ்தோத்ரங்களையும் இகழ்வான்.

234. சிறுவனுக்காவது சிறுமிக்காவது தாம்பத்ய சுகத்தின் உணர்ச்சி இல்லாததுபோல் ப்ரஹ்மாநந்த சுகம் இன்னதென்று ஸம்ஸாரிகளுக்குச் சிறிதேனும் விளங்காது.

235. முதலையின் தோல் அதிக தடிப்பாயும் செதில்பொருந்தியு மிருப்பதால் அதை எத்தகைய ஆயுத

மும் ஊடுருவிச் செல்லாது. அதுபோலவே, ஸம்ஸாரத்திலேயே அழுந்தியிருப்பவர்களுக்கு எவ்வளவு உபதேசிப்பினும், செவிடன்காதில் செங்கூதியது போல் யாதொரு பயனையும் கொடாது.

### பாபாத்மாவின் ஹ்ருதயம்.

236. பாபியின் ஹ்ருதயம் சுருண்ட மயிரையொத்தது. அதை எவ்வளவு நீளம் இழுத்தாலும் நேராய்ச்செய்யமுடியாது, அதுபோல் பாபிகளின் ஹ்ருதயத்தையும் எளிதில் மாற்ற முடியாது.

237. ஜலமானது கல்லினுள்ளே நுழையாதது போல் மதோபதேசமும் பத்தஜீவர்களின் மநத்தில் அழுந்துவதில்லை.

238. சல்லடையானது உமியையும் அரிசியையும் பிரித்து உமியை வைத்துக்கொண்டு அரிசியைக் கீழேதள்ளிவிடுவதுபோல், பாபாத்மா தீமையையெடுத்துக்கொண்டு நன்மையைத் தள்ளிவிடுகின்றான்.

239. துஷ்டனுடைய மநம் நாயின் சுருண்ட வாலை நிகர்த்திருக்கின்றது.

240. துர்விஷயங்களிலே பிரவர்த்திக்கிற மநமானது சண்டாளர் சேரியில் குடியிருக்கும் பார்ப்பானைப் போலவும் பட்டணத்தில் கீழ்மக்கள் குடிசைகளின் நடுவே வசிக்கும் கனவானைப்போலவும் இருக்கின்றது.

241. வண்ணானது துணியறைபோல் உன் மநம் இருக்கவேண்டாம். அவன் ஊராரது அழுக்குத் துணி

களை யெல்லாம் அதில் நிறைத்து வைக்கிருன். சலவை யானவுடனே அவற்றைச்சொந்தக்காரர்களிடம் சேர்த்துவிடுகிருன். பிறகு அவனுக்குச் சொந்தமென்று சொல்லக்கூடிய வஸ்த்ரம் ஒன்றுமில்லை.

**பொருளிலும் இன்பத்திலும் பற்றுள்ள மநம்.**

242. பொருளிலும் இன்பத்திலும் பற்றுள்ள மநம் பழுக்காத பாக்குக்காயிலுள்ள கொட்டையைப் போன்றது. காய் பழுக்காதிருக்கும்வரையில் கொட்டையானது ரஸத்தால் ஓட்டுடன் ஒட்டியிருக்கின்றது. ஆனல் அந்த ரஸமானது காலக்கிரமத்தில் உலர்ந்து போய்விடுங்காலையில் கொட்டையானது ஓட்டினின்று பிரிந்து, ஓட்டுக்குள்ளேயே ஆட்டினல் ஆடுவதாய்த் தெரிகின்றது. அதுபோலவே பொன்னிலும் காமத்திலும் வைத்த பற்றெனும் ரஸம் உலர்ந்துபோய் விட்டால் மனிதனும் முக்தனுகின்ருன்.

243. மிருதுவான களிமண்ணில் வடிவங்கள் எளிதில் பதிவதுபோற் கருங்கல்லிற் பதிவதில்லை. அதுபோல் ப்ரஹ்மஜ்ஞாநமும் பக்தன் ஹிருதயத்தில் பதிகின்றதுபோல் பத்தஜீவனது ஹிருதயத்திற் பதிகின்றதில்லை.

244. ஈரமான நெருப்புக்குச்சி தீப்பற்றுவதில்லை. அதை எவ்வளவு கஷ்டப்பட்டுத் தேய்த்தாலும் வெறும் புகைதான் உண்டாகின்றது. உலர்ந்த குச்சியோ கொஞ்சம் தேய்த்த மாத்திரத்திலேயே, உடனே தீப்பற்றிக் கொள்ளுகின்றது. பக்தனது ஹிருதயம் உலர்ந்த நெருப்புக்குச்சியை நிகர்த்தது. பகவந் நாமத்

தைச் சிறிது சொன்னமாத்திரத்திலேயே அவன் ஹிருதயத்தில் ப்ரேமாக்நி மூண்டுவிடுகின்றது. காமத்திலும் செல்வத்திலும் மூழ்கி ஊறியிருக்கும் ஸம்ஸாரியின் மநமோ ஈரமான தீக்குச்சியை யொத்தது. அவனுக்கு எம்பெருமானைப்பற்றி எத்தனை முறை யுபதேசிக்கினும் அவன் மநத்தில் ப்ரேமாநலத்தை ஒருகாலும் மூட்டமுடியாது. (ப்ரேமாநலம்=ப்ரேமாக்நி=பக்தியாகிய தீ.)

ஸம்ஸாரத்தில் அழுந்தியவர்கள் திருவருளால் மாறாமை.

245. மலயமாருதம் வீசும்பொழுது உரத்துடன் கூடியதருக்கள் அனைத்தும் சந்தனவிருக்ஷங்களாய் விடுகின்றன. உள்ளுரமில்லா மூங்கில், வாழை, பனை முதலிய மரங்களோ மாறாமலே யிருக்கின்றன. அதுபோலவே எம்பெருமானது திருவருள் உதயமாகும்பொழுது, நல்லொழுக்கமும் உள்ளன்புமுள்ள அடியார்கள் உடனே பேரானந்தத்தின் நிறைவெய்திப் புண்ணியபுருஷர்களாய் விளங்காநிற்க, ப்ரபஞ்சத்தின் சிற்றின்பங்களில் அழுந்திக் கிடக்கும் புல்லர்கள் யாதொருபயனையும் பெறாது தாம் முன்னிருந்த நிலையிலேயே இருக்கின்றனர். (மலயமாருதம் = மலய பர்வதத்தினின்று வீசும் தென்றற்காற்று).

246. ஈக்கள் சிலசமயங்களில் 'மிட்டாய்க்'கடையிலுள்ள பக்ஷணங்களின்மேல் மொய்த்துக்கொண்டிருந்தும், அவ்வழியாய்க் குப்பைக்காரி எடுத்துக்கொண்டேகும் நரகல் நிறைந்த கூடையைக் கண்டவுடனே, பணியாரத்தைவிட்டு, மலத்தை மொய்த்துகொள்ளுகி

ன்றன. தேனீக்களோ எப்பொழுதும் துர்க்கந்தப்பொருளண்டையே நெருங்காமல், புஷ்பங்களினின்று ஸதா தேனைப் பாநம் பண்ணிக்கொண்டிருக்கின்றன. உலகப்பற்றுள்ளவர்கள் ஈக்களைப் போன்றவர். சிற்சிலசமயங்களில் ப்ரஹ்மாநந்தத்தின் இனிமையைச் சுவைக்கும் பாக்கியத்தை அவர்கள் பெற்றபோதிலும், அவர்களது பழிவினைப்பயனுகிய இயற்கைக் குணமானது, மலத்தையே விரும்பி யிருக்கும் அவர்களை மீண்டும் உலகமாகிய குப்பைமேட்டுக்குக் கொண்டுவந்து விடுகின்றது. ஆனல் தேனீக்களையொத்த ஞாநிகளோ எப்பொழுதும் ப்ரஹ்மாநந்தத்தையே அநுபவித்துக்கொண்டிருக்கின்றனர்.

குறிப்பு:—உலகவின்பப் பற்றுள்ளவன் மலத்திலேயே இருந்து மலத்திலேயே மரிக்கும் புழுவை யொத்து, மேலான உயர்ந்த விஷயங்களின் அறிவென்பதே இல்லாமலிருக்கின்றான். சிறிது புண்ணியம் பண்ணிய மனிதன் ஒரு சமயம் மலத்தின்மேலும் மற்றொரு சமயம் தித்திப்பான பணியாரத்தின்மீதும் மொய்க்கும் ஈயை நிகர்த்தவன்; முக்தனுகிய யோகியோ ஸதா ப்ரஹ்மாநந்தத்தேனையே பருகி மற்றதையெல்லாம் மறந்திருக்கின்றான்.

247. உலகவின்பத்திலேயே மூழ்கியிருப்பவனுக்கு ப்ரஹ்மஜ்ஞாநம் கிட்டாது. அவன் எம்பெருமானைத்தரிசிக்க முடியாது. கலங்கின சேற்றுநீரில் சூரியனாவது சுற்றிலுள்ள மற்றெப்பொருளாவது எக்காலத்திலேனும் ப்ரதிபலிக்குமா?

248. அலைகள் குமுறிக்கொந்தளிக்கும் கடல் நீரிலே சந்திர பிம்பம் பூர்ணமாய்ப் பிரதிபலிக்காமல் துண்டுதுண்டாய்ப் பிரதிபலித்துக் காண்பதுபோல், ப்ரபஞ்சத்தின் ஆசையாலும் காமாதிகளாலும் கலங்கியிருக்கும் மநத்திலே பகவானுடைய பேரொளி பூர்ணமாய்ப் பிரதிபலிப்பதில்லை.

249. மிருதுவான பச்சைக்களிமண்ணில் உருவங்கள் நன்ருய் அழுந்தியமையும்; சூளைபோட்ட மண்ணிலோ அப்படியின்று. அதுபோல, உலகவாஞ்சையெனும் தீயால் எரிந்துபோன ஹ்ருதயத்திலே உத்தமஞாந விஷயங்கள் அழுந்திப்பதியா.

உலகப்பற்றுள்ளவர்களின் உபதேசம்.

250. எல்லாக் குள்ளநரிகளின் ஊளையிடுஞ் சத்தமும் ஒரேதன்மையதாய் இருத்தல்போல், உலகப்பற்றுள்ள எல்லாக் குருமார்களின் உபதேசமும் ஒரே மாதிரியாகவே யிருக்கும்.

251. கழுகானது ஆகாயத்தில் வெகு உந்நதமாய்ப் பறந்து சென்ருலும் அதன் பார்வைமாத்திரம் கீழேயுள்ள பிணங்களையே நாடிச்செல்கின்றது. அதுபோல, கல்வியில் தேர்ந்த பண்டிதர்கள் ப்ரஹ்மஜ்ஞானத்தைப்பற்றி ஸாமர்த்தியமாயும் அழகாயும் பேசினும், அவர்கள் மநது மாத்திரம் அவர்கள் கற்ற கல்வியை வீணுக்குவிற்று, பொருள், கௌரவம், அதிகாரம் முதலிய பெருமைகளைப்பெறும் வழியையே யோசித்துக்கொண்டிருப்பதால், அவர்கள் பேசும் ஞாநமெல்லாம் வாசா கைங்கர்யமேயாம்.

252. உலகப்பற்றுள்ள வொருவன் ஜநகமஹா ராஜாவைப்போல் ஞாநமுள்ளவனுயும், யோகியைப் போல் கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டுபோகும் சக்தியுள்ளவனுயும், மஹரிஷியைப்போல் மஹாமகங்கள் (பெரிய யாகங்கள்) இயற்றுவோனுயுமிருப்பினும், அவன் செய்யும் கர்மங்களும் அநுஷ்டாநங்களும் பகவானை நோக்கி அல்ல; மற்று உலக சுகத்தின் பொருட்டும், கௌரவத்தின் பொருட்டும் செல்வத்தின்பொருட்டுமேயாம்.

253. ஆகாயத்திற் பறக்கும் பக்ஷிகளுக்குள்ளே காகமே அதிக அறிவுள்ளதெனக் கருதப்படுகின்றது. அதற்கும் தன்னைப்பற்றி அப்படியேதான் அபிப்ராயம். அஃது எப்பொழுதும் எவ்வித தந்திரவலையிலும் விழுகிறதில்லை. அற்ப அபாயம் நேரிடுவதா யிருந்தாலும், வெகு விரைவாய்ப் பறந்தோடி விடுகின்றது. சோற்றைத் திருடிக்கொண்டு செல்வதில் அதற்குள்ள ஸாமார்த்தியம் சொல்லத்தரமன்று. இவ்வளவு யுக்தியும் அறிவும் அதற்கிருந்தும், அதன் வயிற்றுக்குக் கிடைப்பது மாத்திரம் குப்பையும் கூளமும் துர்க்கந்தம் வீசும் பிணமுமேயன்றி வேறில்லை. இவ்வளவுக்குங் காரணம் அதன் அற்பபுத்தியேயாம்.

**உலகப் பற்றுள்ளவன் மதம்.**

254. ஈயானது ஒருஸமயம் புண்ணிலும் மற்றொரு ஸமயம் பகவாநுக்கு அர்ப்பிக்கும் நிவேதநத்திலும் போய் மொய்ப்பதுபோல், உலகப்பற்றுள்ளவனது மநம் ஒருகால் புண்ய விஷயங்களிலே வ்யாபரித்

தும், மற்றொருகால் அர்த்தகாமங்களால் உண்டாகும் சுகங்களிலே அழுந்தியும் இருக்கின்றது.

255. ஒருபங்கு சுத்தமான பாலுடன் அதற் கிரு மடங்குள்ள தண்ணீரைச் சேர்க்கும் பக்ஷத்தில், அதை க்ஷீர (கட்டிப்பால்) மாக்குவதற்கு அதிக நேரமும் உழைப்பும் ஆகின்றன. அதுபோல், உலகப்பற்றுள்ளவனது மநம் அசுத்தமான தீயவெண்ணங்களுடன் கலப்புண்டிருப்பதால் அதைச் சுத்தப்படுத்தி உறுதியான நிலைக்குக் கொண்டுவர வெகு காலமும் உழைப்பும் வேண்டியிருக்கின்றது.

256. தாபஜ்வரத்தினால் மரணதாஹமா யிருப்பவன்முன் பனிபோல் ஜிலுஜிலென்றிருக்கும் தண்ணீர்க்குடங்களையும் ருசியான பாநவகைகள் நிறைந்த பாத்திரங்களையும் வைத்து விட்டால், அவற்றைக் குடித்துத் தாகவிடாய் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று அவனுக் குண்டாகும் அவாவை நிறுத்தமுடியுமா? அதுபோல, காமமெனும் தாபஜ்வரத்தால் பீடிக்கப் பட்டு, விஷயபோகங்களின்மேல் விடாய் கொண்டிருப்பவன்முன்னே மாதர்களின் ஸௌந்தர்யஸுகத்தை யொருபக்கத்திலும் செல்வத்தின் ஸுகத்தை யொரு பக்கத்திலும் வைத்துவிடும்பக்ஷத்தில் அவற்றிற்கு அவன் இணங்காமல் விலகியிருக்க முடியுமா? அவன் நிச்சயமாய் நல்லொழுக்கத்தினின்றும் நழுவியே விடுவான்.

### உலகப்பற்றுள்ளவர்கள் விஷயஸுகங்களையே விரும்புவர்.

257. உலகப்பற்றுள்ளவன் ஈஶ்வர்த்தியாநத்தினால் உண்டாகும் இன்பத்தைவிட விஷயஸுகமே மேலென்றெண்ணி அதனையே அபேக்ஷிக்கிறான். பரமஹம்ஸருடைய சிஷ்யர்களுள் உலகபற்றுள்ளவன் ஒருவன் தனக்கு ஸமாதிநிலையருளுமாறு விண்ணப்பஞ் செய்ய, பரமஹம்ஸரும் 'அவ்வாறே ஆகுக' என்றநுக்ரஹித்தனர். அவனை அந்நிலையினின்றும் ஸாதாரண நிலைக்குக்கொணர வைத்ய டாக்டர்கள் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. அந்நிலை அதேரீதியாய்ப் பதினைந்து நாள் வரையில் இருந்தது. அதற்குப் பிறகு பரமஹம்ஸரது திருக்கரஸ்பர்சத்தினால் அவனுக்கு மீண்டும் தன் ஞாபகம் வந்தவுடன், அவன் பரமஹம்ஸரை நோக்கி, 'ஸ்வாமி, இந்த ஸமாதிநிலையை வைத்துக்கொண்டு நான் இப்பொழுது என் செய்வேன்? என் சொத்துக்களைப் பார்த்துக்கொள்வதற்கு என் பிள்ளைகள் சக்தியற்றிருக்கின்றார்களே !" என்றான்.

258. ஒருமுறை தயிர் கடைந்த பானையிலேலே மறுபடியும் பாலைக்கொட்டி ஒருவரும் வைக்கமாட்டார்கள். அப்படி வைத்தால் அந்தப்பாலே கட்டியாகித் தயிராகிவிடும். அப்பானையை நெருப்பின்மேல் வைத்தவுடனே வெடித்துப் போய்விடுமாகையால் வேறெந்தக் காரியத்துக்கும் அதை உபயோகபடுத்துவது மில்லை. ஆகையால் அது பெரும்பாலும் பயனற்றதே யாகின்றது. அதுபோலவே, அநுபவசாலியான ஸத்குருவா

னவர் அருமையான உயர்ந்த தத்துவங்களை, உலகப்பற்றுள்ள மனிதனை நம்பி உபதேசிப்பதில்லை. ஏனெனில் அவன் அவற்றிற்குத் தவறான பொருளுரைத்துத் தன் இழிவான எண்ணங்களுக் கிசையுமாறு பிறழச்செய்வான். கொஞ்சம் சிரமஸாத்தியமான ப்ரயோஜநமுள்ள காரியத்தைச் செய்யக்கூட அவனை அவர் வேண்ட மாட்டார். ஏனெனில் தனக்கு உபதேசம் செய்ததற்குப் பிரதியாகத் தன்னிடத்தினின்றும் குரு வேலை வாங்குகிறார் என்று அவன் நினைத்துவிடுவான்.

259. கிழிந்துபோன மூட்டையிலிருந்து சிந்திச் சிதறிப்போன கடுகைத் திரட்டியெடுப்பது அதிககஷ்டமானதுபோல், மனிதர்களது சித்தம் பல வழிகளிலேயுஞ் சென்று பலவகை உலகவிஷயங்களையும் பற்றி யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது, அதை ஒரு நிலையிலேயே நிறுத்தி ஏகாக்ரமா யிருக்கச் செய்தல் எளிதான காரியமன்று.

260. தராசின் பளுவான தட்டு கீழே சாய்கிறது, லேசான தட்டு மேலே போகின்றது. அதுபோல், அளவற்ற ஸம்ஸார சிந்தைகளாலும் கவலைகளாலும் மநச்சஞ்சலமுற்று, அவற்றின் பாரத்தால் தத்தளிப்பவன் ஸம்ஸாரத்திலேயே அழுந்திப்போய் விடுகின்றான்; ஸம்ஸாரசிந்தையைப் பாராட்டாதவனோ மோக்ஷராஜ்பத்தை நோக்கி மேலே செல்கின்றான்.

261. வினா:—உலகம் எதைப்போன்றது ?

**விடை:**—அது பருப்பென்பதேயின்றித் தோலும் கொட்டையும் நிறைந்து, தின்கிறவர்களுக்கு வயிற்று வலியை யுண்டாக்கும் ஆம்லா பழத்தைப்போன்றது.

## உலகப் பற்றுள்ளவர்களுக்கு ஸந்ந்யாஸத்தால் மோக்ஷஸித்தி.

262. வினா:—உலகப் பற்றுள்ளவர்களுக்கு எவ்விதமான சித்தபரிபாகத்தால் மோக்ஷஸித்தி உண்டாகும்?

விடை:—கடவுளின் திருவருளால் துறக்கவேண்டுமென்ற தீவ்ரபக்வமடைந்து அர்த்தகாமங்களிலேயுள்ள ஆசையை யொழிக்கின்றவனுக்கே உலகபந்தங்களினின்றும் நிவ்ருத்தி யுண்டாகின்றது.

263. எண்ணெயால் நனைந்த காகிதத்தின்மேல் எழுதமுடியாது. அவ்வாறே விஷய சுகமென்னும் எண்ணெயால் நனைந்து கெட்டுப்போன ஜீவனும் அத்தியாத்மயோகத்துக்கு அநர்ஹனாகின்றான். ஆனால் எண்ணெய் பட்டகாகிதத்தின்மேல் சீமைச்சுண்ணத்தைப் பூசினால், எழுதுவது சுலபமாவதுபோல், ஜீவனும் துறவென்னும் பூச்சுபெற்றால் அத்தியாத்ம யோகத்துக்கு அர்ஹனாகின்றான்.

264. கடவுளிருக்கும் அறையைத் திறக்கும் திறவுகோலைத் திருப்பும் விதம் வெகு விசித்ரமானது. கடவுளை யடைய வேண்டுமாயின் உலகத்தைத் துறக்கவேண்டும்.

265. இவ்வுலகம் ஒரு நாடகசாலையைப் போன்றது. அதில் மனிதர்கள் பலவகை வேஷம்பூண்டு, பலவித ஆட்டமாடுகின்றனர். அவர்கள் சிறிதுநேரம் ஆடிஅலுத்துப்போனாலொழிய வேஷத்தை யெடுத்துவிட

விரும்புவதில்லை. ஆதலால் அவர்கள் சிறிதுநேரம் தம் மிஷ்டப்படியே யாடட்டும்; பிறகு அவர்களே இஷ்டப்பட்டு வேஷத்தைக் கலைத்துவிட்டு நிஜசொரூபத்துடன் விளங்குவார்கள்.

266. இவ்வுலகத்தில் ஆநந்தத்தை யளிக்கும் ஒவ்வொரு பொருளிலும் ப்ரஹ்மாநந்தத்தின் அம்சம் கொஞ்சம் கலந்திருக்கின்றது. பேரின்பம் (ப்ரஹ்மாநந்தம்), சிற்றின்பம் (விஷயாநந்தம்) என்னும் இவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமை பனைவெல்லத்துக்கும் பாகுவெல்லத்துக்கு முள்ளதைப் போன்றது.

267. வினா:—உலகத்தையும் கடவுளையும் ஸமாஸப்படுத்துவ தெங்ஙனம்?

விடை:—தச்சன் மனைவி எவ்வளவு சுறுசுறுப்பாய் எத்தனை வேலைகளைச் செய்கின்றாள் பார். அவள் ஒருகையினால் உலக்கையைப் பிடித்து நெல்லைக் குத்திக்கொண்டும், இன்னொரு கையால் குழந்தையை மார் போடணைத்துக்கொண்டும், அதே சமயத்தில் அரிசி வாங்கவந்தவனிடத்தில் விலை பேசிக்கொண்டும் இருக்கிறாள். இப்படி அவள் பல வேலைகளைச் செய்துகொண்டிருந்தபோதிலும், அவள் மனம்மாத்திரம், உலக்கை தன் கையில் பட்டுக் காயப்படுத்தாதிருக்கவேண்டுமென்ற ஒரே கவனமாகவே இருக்கின்றது. அவ்வாறே நீயும் உலகத்திலேயே இருந்துகொண்டு எப்பொழுதும் ஈஸ்வரனையே ஸ்மரணை செய்துகொண்டிரு. அவனது வழியினின்றும் ஒருபோதும் விலகிச் செல்லாதே.

268. தெருவில் பிச்சை யெடுக்கும் தாசரி ஒரு கையால் தம்பூர் மீட்டிக்கொண்டும், மற்றொரு கையால் தாளந்தட்டிக்கொண்டும் ஸதா பகவந்நாமஸங்கீர்த்தநம் பாடிக்கொண்டே செல்வதுபோல், ஏ ஸம்ஸாரத்தால் கட்டுண்ட ஜீவாத்மாவே, நீயும் உலகக் கடமைகளைக் கைகளால் செய்துகொண்டுவந்தபோதிலும் உன் ஹ்ரு தயத்தில் மாத்திரம் பகவந் நாமத்தை யுள்ளன்புடன் உச்சரித்து வாழ்த்த ஒருபோதும் மறவாதே.

269. விஷ ஜந்துக்களாகிய பாம்புகள் நிறைந்த வீட்டிலுள்ளவர்கள் எப்போதும் விழிப்பாயிருந்து ஜாக்கிரதையா யிருப்பதுபோல், ப்ரபஞ்சத்திலுள்ள வர்கள் காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்ய மென்கிற பகைவர் கையிலகப்படாது ஸதா ஜாக்கிர தையாய் இருத்தல் வேண்டும்.

### அரிஷட்வர்க்கத்தை வெல்லும்வகை.

270. காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத் ஸர்யங்களாகிய அறுவகைப்பகைவர்க்கூட்டத்தை (அரி-ஷட்-வர்க்கத்தை) வெல்வ தெவ்வாறென்று நிகழ்ந்த வினவிற்கு பகவாந் பரமஹம்ஸர் அருளிய விடை யாதெனில்:— மேற்சொன்ன தாமஸ குணங்கள் உல கத்தையும் அதிலுள்ள சிற்றின்ப விஷயங்களையும் நோக்கி ப்ரவர்த்தித்துள்ளவரையில் மாத்திரம் சத் ருக்களேயன்றி, கடவுளின் விஷயமாய் அவற்றைச் செலுத்தும்பக்ஷத்தில், அவைகளே மனிதனுக்குச் சிற ந்த நண்பர்களாகி அவனைக் கடவுள் ஸந்நிதியிற்கொண்டு போய்ச் சேர்க்கின்றன. உலகப் பொருள்களின்மேல்

வைக்கும் காமத்தைக் கடவுளிடத்திற் காமமாக மாற்ற வேண்டும். உன்னைச் சுற்றிலுமுள்ள ப்ராணிகளிடத்தில் உண்டாகும் கோபத்தை, உனக்கு சீக்கிரமாய்ப் ப்ரத்யக்ஷ மாகாததற்காகக் கடவுளிடத்துக் கோபமாக மாற்றிக்கொள்ளவேண்டும். இவ்வாறே மற்றைக் குணங்களையும் மாற்றி யமைத்துக்கொள்ளவேண்டும், காமாதி குணங்களை நிர்மூலமாய் நாஸஞ்செய்துவிடாமல், அவற்றைத் திருத்தி நல்வழியிற் செலுத்தி உத்தமமான விஷயங்களிலே உபகரிக்கச் செய்யவேண்டும்.

### திவ்யஜ்ஞானத்தின் ரக்ஷகசக்தி.

271. பாம்பு கொடியவிஷமுள்ள ஜந்து; தன்னைப்பிடிக்க நெருங்குகின்றவனைக் கடிக்கின்றது. ஆனால் ஸர்ப்ப மந்த்ரத்தைக் கற்ற பாம்பாட்டியோ பாம்புகளைக் கழுத்திலும் தோளிலும் நகைகளைப்போல் தொங்கவிட்டுக்கொண்டு போகின்றான். அதுபோல ப்ரஹ்மஜ்ஞானமடைந்தவன் காமக்ரோத லோபங்களால் கேடுறுவதில்லை.

272. பாதரக்ஷை யில்லாமல் வெறுங்காலுடன் முள்ளிலும் கூரிய கல்லின்மேலும் நடக்க எவன் துணிவான்? திவ்யஜ்ஞானமென்னும் பாதரக்ஷையை யணிந்துகொண்டால் எந்த முள்ளேனும் கூரிய கல்லேனும் உனக்கு என்ன கெடுதிசெய்ய முடியும்?

273. உள்ளங்கையில் முதலில் எண்ணெயைத் தடவிக்கொண்டு, பிறகு பலாப்பழத்தை யுடைத்துச் சுளைகளை யெடுத்தால் பழத்திலுள்ள பால் கையில்

ஒட்டிக்கொண்டு வருத்தாது. அவ்வாறே, ப்ரஹ்மஞ்ஞாநமென்னும் கவசத்தால் முதலில் தற்காப்புசெய்து கொண்டு பிறகு பொன்னுடனும் மாதருடனும் கலந்து வாழ்ந்தாலும் அவை நின்னை எவ்வாற்றானும் பாதிக்கா.

274. அத்வைதஞாநத்தை உன் உடையிற் கட்டியணிந்துகொண்டு உனக்கிஷ்டமானதைச்செய். ஜீவ-ப்ரஹ்மைக்யாநுபவமுள்ளவனை நல்வினை தீவினைகள் கட்டுப்படுத்தா.

முதலில் கடவுளையும், பின்னர் உலகத்தையும் தேடு.

275. பகவாந் பரமஹம்ஸர் பக்த னொருவனைப் பார்த்துக் கூறுகின்றார்:—நல்லது, உன் ஆயுளில் முக்காற் பங்கு ஸம்ஸாரத்தில் ஒழித்துவிட்டு இப்பொழுது கடவுளைத் தேடியறிய வந்திருக்கின்றாய். முதலில் ப்ரஹ்மாநுபவம்பெற்றுப்பிறகு உலகத்திற் ப்ரவேசித்திருப்பாயானால், உனக்கு எவ்வளவு ஸந்தோஷமும் சாந்தியும் உண்டாயிருக்கும் தெரியுமா?

276. முதலிற் கடவுளையும் பின்னர் செல்வத்தையும் அடைய முயல்; இதற்கு மாறாக நடக்கவேண்டாம். ப்ரஹ்மஜ்ஞாநமடைந்த பிறகு உலகத்தில் வாழ்வையேல், மநஸ்ஸமாதாநம் உன்னைவிட்டொருபோதும் நீங்காது.

277. வாலிபன் கம்பத்தைப் பிடித்துக்கொண்டு விழுந்துவிடுவோம் என்ற பயமேயில்லாமல் தலைதெரியாவேகத்துடன் அதைச் சுற்றிவருவதுபோல், நீ கடவுளைக்கெட்டியாய்ப் பிடித்துகொண்டு, உனது கடமை

களை யெல்லாம் செய்துவருவாயானால், ஸகலவித அபாயங்களினின்றும் விடுபட்டிருப்பாய்.

278. உலக சிந்தைகளும் கவலைகளும் உன் மநதைக்கலக்க இடங்கொடாதே. அவசியமாய்ச் செய்ய வேண்டியதை யெல்லாம் அதற்கேற்பட்ட உரிய காலத்திலே செய்து உன்மநத்தை யெக்காலமும் கடவுளின் மீது செலுத்து.

279. ஸம்ஸாரத்திலேயே இருந்துகொண்டு அந்நியபுருஷன்மேல் காதல்கொண்ட ஒரு ஸ்திரீயானவள் வீட்டுக்காரியங்களைச் செவ்வனே செய்துகொண்டிருப்பவள்போல் வெளிக்குத் தென்பட்டாலும், உண்மையில் அவள் தன் ஆசைநாயகனையே நினைத்துக்கொண்டிருப்பதுபோல், நீ ஸம்ஸாரக் கடமைகளைச் செலுத்திக்கொண்டு வந்தபோதிலும் உன் மனது மாத்திரம் பகவானிடத்திலேயே பொருந்தியிருக்கவேண்டும்.

**உலக வாஞ்சைகளிற் பற்றுள்ள பக்தன்.**

280. ஓர் உழவன் நாள்முழுவதும், கருப்பந் தோட்டத்துக்கு நீர் இறைத்துக்கொண்டிருந்தான். அவன் வேலை முடிந்தபிறகு தோட்டத்துக்கு எவ்வளவு நீர் வந்திருக்கிறதென்று பார்க்கையில் ஒரு துளி ஜலமாவது தோட்டத்திற்போல் பாயவில்லையெனக் கண்டான்; அவன் இறைத்த நீரெல்லாம் வெவ்வேறு பெரிய எலி வளைகளின் வழியாய் பூமிக்குள் போய்விட்டது. புகழ், இன்பம், சுகாநுபவம் முதலிய உலக வாஞ்சைகளை யிரகசியமாய் மநத்தில் விரும்பிக் கடவுளை

வழிபடுகின்றவன் நிலையும் அவ்வாறே. அவன் தினந்தோறும் ஜபதபங்கள் செய்தபோதிலும், அவனது நியமாசாரங்களெல்லாம் வாஞ்சையெனும் எலிவளைகளின் வழியே சென்று வீணாய்ப்போவதால் அவன் யாதொரு பலனையும் அடைவதில்லை. அவன் இவ்வாறு ஆயுள் முழுவதும் கடவுளை வழிபட்டும் கடைசியில் பார்க்கும்பொழுது, சிறிதேனும் அபிவிர்த்தி யடையானாகி, முன்னிருந்த நிலைமையிலேயே இருக்கிறான்.

281. தன் எண்ணங்களையே அபஹரிக்கின்ற கள்வன் எதையும் ஸாதிக்கின்றானில்லை. உன் முழுமநதும் பிராணனும் பகவானை நாடி நினையாவிட்டால் அவரை நீ எவ்வாறு காண்பாய்?

282. அகத்திலே நினைப்பதைப் புறத்திலேகூறு, உன் மநமும் மொழியும் ஏகரீதியாயிருக்கட்டும். இல்லாவிடில், உன் மநத்தில் உலகத்தையே பெரும்பாக்கியமெனக் கருதி வெளிக்குமாத்திரம் கடவுள்தான் என் சர்வபாக்கியமும் என்று கூறுவையேல், அதனா லுனக்குண்டாகும் பயன் யாதொன்றுமில்லை.

283. நீரில் படகு தங்கலாமாயினும், நீர்மாத்திரம் படகில் தங்கக்கூடாது. அவ்வாறே ஸாதகன் உலகத்தில் இருக்கலாமாயினும் உலகம் மாத்திரம் அவன் மநத்தில் இருக்கக்கூடாது.

284. நீர்க்குடத்தின் அடியில் சிறிய துவாரமொன்றிருப்பின், அச்சிறு துளையின் வழியாய் அவ்வளவு நீரும் கொட்டிப்போய்விடுமாறுபோல், ஸாதக

னிடத்தில் ப்ரபஞ்ச ஸம்பந்தமான களங்கம் சிறிதிருப்பினும், அவனது நியமநிஷ்டைகளெல்லாம் நிஷ்ப்பலமாகின்றன.

285. அனல்அடியிலுள்ள வரையில் பால் கொதித்துப்பொங்குகின்றது. அனலை யெடுத்துவிட்டால் கொதிப்பும் நின்றுவிடுகின்றது. அவ்வாறே ஸாதகன் நியமநிஷ்டைகளை அநுஷ்டித்துக் கொண்டிருக்கிற வரையில் அவன் ஹ்ருதயம் உற்சாகத்தால் கொதித்துப் பொங்கி, அவைகளை நிறுத்தியவுடனே தணிந்துபோய்விடுகின்றது.

**ஸாதகன் உலகப்பற்றுள்ளவருடன் சேரலாகாது.**

286. பாலையும் நீரையும் ஒன்ருய்ச்சேர்த்தால், பிறகு நீரினின்று பாலைப்பிரிக்க முடியாத வண்ணம், அவ்விரண்டும் கலந்துபோவது திண்ணம். அவ்வாறே ஆத்மலாபத்தை விரும்பிய ஸாதகன் பலவகைப்பட்ட உலகப் பற்றுள்ளவருடன் வரம்பின்றி கூடுவானுயின், தான் கருதிவந்த உத்தமலாப மாத்திரமன்றி, தனது முன்னைய பக்தி, சிரத்தை, அன்பு, உற்சாகம் முதலிய வளைத்தையுங்கூடத் தனக்குத் தெரியாமலே இழந்துவிடுகின்ருன்.

287. தயிரைக்கடைந்தெடுத்த வெண்ணெயைத தயிர் மிருந்திருக்கும் அதே பாத்ரத்தில் வைக்கக் கூடாது. அப்படி வைத்தால் அதன் சுவையும் வழவழப்பும் குறைந்துபோய்விடும். ஆகையால் அதைச் சுத்த ஜலத்தில் வேறொரு பாத்ரத்திலே வைக்கவேண்டும்.

அதுபோலவே, இவ்வுலகில் சொற்ப ஞானோதய முண்டானபிறகு, ஒருவன் முன்போலவே ஸம்ஸாரிகளுடன் கலந்து உலகவாழ்க்கையிலேயே இருப்பானாயின், அவன் அநேகமாய் உலக மாயையால் களங்கமுறுவான். ஆனால் அவன் அதனின்றும் விலகியிருப்பானாயின், சுத்தனாகவே யிருப்பான்.

288. புகைபடிந்த அறையில் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலும், கொஞ்சமாவது உடம்பில் கறுப்பு படியாமலிராது. அதுபோலவே ஒரு புருஷன் தன் ஸமானவயதுள்ள இளம்பெண்ணுடனும், ஓர் இளம்பெண் தன் வயதேயுள்ள வேறு புருஷனுடனும் கலந்து வஸிப்பார்களாயின், அவர்கள் தமக்கு ஸஹஜமாயுள்ள காமத்தை எவ்வளவு ஜாக்கிரதையாய் அடக்கிக்கொண்டு எச்சரிக்கையா யிருந்தபோதிலும், சிற்றின்பத்துக்குரிய எண்ணம் சொற்பமாயினும் அவர்கள மனத்தில் உண்டாகாமலிராது.

### தீயாரோடிணங்கேல்.

289. புலியினுள்ளும் பகவாந் இருக்கின்றார் என்பது உண்மையாயினும், நாம் போய் அந்த ஜந்துவின் முன் நிற்கலாகாது. அவ்வாறே, பரமதுஷ்டர்களினிடத்தும் பகவாந் இருப்பினும் அவர்களுடன் நாம் சேர்வது சரியன்று.

290. அற்புதங்கள் செய்பவரிடஞ் சேராதே. அவர்கள் உண்மை நெறியினின்றும் நழுவிப்போனவர்கள். ப்ரஹ்மஜ்ஞாநமார்க்கத்திற் செல்லும் முமுக்ஷுக்

களைத் தடுத்து சோதிப்பதற்காக ஏற்பட்டிருக்கும் அணிமாதி ஸித்திகளெனும் வலையில் அன்னோர் மனம் சிக்குண்டுபோயிருக்கின்றது. ஆகையால் இச்சக்திகளை விரும்பி அவற்றையடைய ஆசைகொள்ளாதே. ஜாக்கிரதை! ஜாக்கிரதை!

291. நீரனைத்தும் நாராயண ஸ்வரூபமாயினும், எல்லாவித நீரையும் அருந்தலாகாது. அதுபோலவே எல்லாம் வல்ல இறைவன் எங்கும் நிறைந்திருந்தபோதிலும், எல்லாவிடங்களுக்கும் மனிதன் போகத்தகாது; ஒருவகைநீர் காலை அலம்புவதற்கும், மற்றொன்று நீராடுவதற்கும், பிறிதொன்று அருந்துவதற்கும் பயன்படுகின்றன. மற்றுஞ் சிலவகை நீர் தொடுவதற்குந் தகாதனவா யிருக்கின்றன. அவ்வாறே இடங்களிலும் பலவகை பேதங்கள் இருக்கின்றன. சில விடங்களுக்கு ஸமீபத்தில் மாத்திரம் செல்லலாம். கில விடங்களின் உள்ளே சென்று பார்க்கலாம். மற்றுஞ்சில விடங்களைத் தூரத்திலிருந்தே தவிர்க்கவேண்டும்.

292. இளஞ்செடிகளை ஆடு மாடுகளும் குழந்தைகளும் பாழாக்காமலிருக்குமாறு அவைகளை எப்பொழுதும் வேலியிட்டுப் பாதுகாத்தல்வேண்டும். ஆனல் அவ்விளங்கன்றுகளோ வளர்ந்து பெரிய மரங்களாய்விட்டால், அநேக ஆடுமாடுகளுக்கு நிழலளித்துத் தம் இலைகளால் அவற்றின் பசிப்பிணியைத் தீர்க்கின்றன. அதுபோலவே ஈஸ்வரபக்தி உன் உள்ளத்தில் சொற்பமாயிருக்கையில், துர்ஜநஸஹவாஸம், ப்ரபஞ்சமாயை முதலியவற்றல் உண்டாகும் கெடுதிகளினின்றும் அதை ஜாக்

கிரதையாய்க் காப்பாற்றவேண்டும். ஆனால் அதே பக்தியானது திடமாய்விடும்பொழுது எத்தகைய உலகமாயையும் கெட்டஸ்வபாவமும் உன்னை யண்டவும் துணியா. மற்று பாபிகளாகிய பலரும் உனது பரிசுத்தமான ஸஹவாஸத்தால் பக்திமான்கள் ஆவார்கள்.

293. ஒரு ஸமயம் ப்ராஹ்ம ஸமாஜச் சிறுவர்கள் சிலர் என்னிடம் வந்து, 'நாங்கள் ஜநகமஹாராஜாவைப் போல் பற்றின்றி உலகவாழ்க்கையில் இருக்கின்றோம்' என்றார்கள். அதற்கு நான், அப்படி சொல்வது சுலபமே. செய்வதுதான் கஷ்டம்!—என்றேன். ஜநகமஹாராஜனைப்போல் இல்லறத்திலேயே இருந்துகொண்டு களங்கமுறாதிருத்தல் வெகு கடினமே. அத்தகைய ஜநகனும் ஆதியில் என்னனென்ன கடுந்தவங்கள் புரியவில்லை! ஆகையால் நீங்களும் அத்துணைக் கஷ்டங்களைப் படவேண்டுமென்று நான் சொல்லவரவில்லை. ஆனால் நீங்கள் சொற்ப ஸாதநத்திலாவது பழகி, சிலகாலமாவது சாந்தமான ப்ரதேசத்திலே ஏகாந்தமாயிருக்கவேண்டும். ஞானம் பக்தி எனும் செல்வங்களைப் பெற்றபிறகு ஜகத்திற் ப்ரவேசியுங்கள். பாலை யசைவற் றமைதியாயிருக்கும்படி விட்டுவிட்டால் நல்ல தயிர் உண்டாகின்றது. பாண்டத்தை யசைக்கவாவது மாற்றவாவது செய்தால் தயிர் கெட்டுப் போகின்றது. ஜநகன் பற்றற்றிருந்தமையால் விதேஹன் (தேஹமற்றவன்) என்று பெயர் பெற்று, இத்தேஹத்தை வைத்துக் கொண்டே வீடு பெற்றதனால் ஜீவன்முக்தனாய் வாழ்ந்தான். தேஹபுத்தியை யொழிப்பது மஹாகஷ்டம். உண்மையாகவே

அவன் ஒரு மஹாவீரன். அவன் ஞானம், கர்மமென்னும் இருவகைக் கத்திகளையும் வெகு லாகவமாய்க் கையாடினான்.

294. உலகப்பற்றின்றி வாழவிரும்பினால், முதலில் ஏகாந்தமான ஸ்தலத்திலே சில காலமேனும்,—அதாவது, ஒருவருஷம், அல்லது ஆறுமாஸம், அல்லது ஒருமாஸம், அல்லது குறைந்தது பன்னிரண்டு நாளாகிலும் ஸாதநம் பயிலுங்காலத்திலே பகவானையே ஸந்ததமும் தியானித்து பகவத்பக்தி உண்டாகுமாறு ப்ரார்த்திக்கவேண்டும். இவ்வுலகத்தில் நமக்குச் சொந்தமென்று சொல்லக்கூடிய தொன்றுமில்லையென்னும் கருத்தை உன் மநதில் ஸதா மநநம் செய்யவேண்டும். உனக்குச் சொந்தமானவர்களென்று நீ நினைத்திருக்குமவர்கள் நொடிப்பொழுதிற் போய்விடுவார்கள். கடவுள் தான் உண்மையில் உனக்குச் சொந்தமானவர். அவரே உன் எல்லா உடைமையும். அவரை எவ்விதமாய் அடையலாம் எனும் ஒரே விஷயத்தைப்பற்றித்தான் நீ கவலை கொள்ளவேண்டும்.

295. நீ ஜபதப ஸாதநங்கள் செய்யுங்காலத்திலே பக்தியையும் பக்தர்களையும் பரிஹாஸம் செய்பவர்களின் ஸஹவாஸத்தினின்று தூரமாய்விலகவேண்டும்.

296. உனது பக்தி ஸ்ரத்தை விஸ்வாஸங்களை உன்வரைக்குமே வைத்துக்கொள். அவற்றைக்குறித்து பஹிரங்கமாய்ப் பேசவேண்டாம். அப்படி செய்யையேல் உனக்கு அதிக நஷ்டமுண்டாகும்.

297. யானையை நன்ருய்க் குளிப்பாட்டி வெளியே விட்டுவிட்டால், ஒரு நொடிப்பொழுதில் அது தன் உடம்பை யழுக்காக்கிக்கொள்வது நிச்சயம். ஆனுல் அதைக் குளிப்பாட்டினவுடனே கட்டிவைத்தால் அது சுத்தமாயிருக்கும். அதுபோலவே ஸாதுக்களுடைய ஸஹவாஸத்தால் நீ பரிசுத்தனுகி, மறுபடியும் உலகப் பற்றுள்ளவர்களுடன் உன்னிஷ்டப்படி சேர்வையேல், அந்தப் பரிசுத்தத்தை நீ சீக்கிரத்தில் இழந்துபோவது திண்ணம்; ஆனுல் உன் மநத்தை எப்போதும் ஈசன்பால் செலுத்துவையேல் நீ இனி எக்காலமும் களங்கமுறமாட்டாய்.

அகத்தூய்மையுள்ளவர் அமலனைக் காண்பர்.

298. அழுக்கடைந்த கண்ணுடி ஆதித்யகிரணங்களை ஒருபோதும் பிரதிபலிக்கச் செய்வதில்லை. மாயைக்குட்பட்ட அசுத்தமான அந்தக்கரணமுள்ளவர்களும் கடவுளின் தேஜோமஹிமையை ஒருபோதும் காண்பதில்லை. ஆனுல் சுத்தமான கண்ணுடி சூரியனை பிரதிபலிக்கச் செய்வதுபோல் பரிசுத்தமான அந்தக்கரணமுள்ளவர்களும் கடவுளைக் காண்கின்றனர். ஆதலால் பரிசுத்தமாயிருங்கள்.

299. ஆழ்ந்த கிணற்றின் ஓரத்திலே நிற்பவன் அதில் எங்கே விழுந்துவிடுவேனே என்றஞ்சி எப்பொழுதும் ஜாக்கிரதையா யிருப்பதுபோல், உலகத்திலே உள்ளவனும் தீயவழியிற் செல்லாதபடி தன்னை எப்பொழுதும் பாதுகாத்துக் கொள்ளவேண்டும். பாபகூபத்திலே ஒரு தடவை விழுந்துவிட்டவன் பிறகு அத

ளின்றும் களங்கமின்றி சுத்தமாய் வெளியே வருவது அபூர்வமே. (கூபம்—கிணறு.)

300. உலகத்தின் ஆசாபாசங்களி னடுவில் இருந்துகொண்டே பரிபூரணநிலை யடைகின்றவன்தான் யதார்த்தவீரன்.

301. பசுவின் கன்று பிறந்தவுடனே தரையின்மேல் நிற்க முடியாமல் அடிக்கடி கீழே விழுந்து, பிறகு சரியாய் நிற்கக் கற்றுக்கொள்ளுகிறது. அதுபோலவே முக்திமார்க்கத்திலே கைவல்யம் கைகூடுவதற்கு முன், பலதடவையும் அடிக்கடி தட்டித்தவறி விழுவது ஸஹஜமேயாம்.

### உண்மையான தர்ம நிஷ்டர்கள்.

302. யாவனொருவன் ஏகாந்தமா யிருக்கையிலும், தன்னை மனிதன் காணுதிருப்பினும் கடவுள் பார்க்கின்றாரென்றுணர்ந்து யாதொரு பாவமும் புரியாமலிருக்கின்றானோ அவனே உண்மையான தர்மநிஷ்டன். யாவனொருவன் பிறர் காணமுடியாத ஏகாந்த ஸ்தலத்திலே கூடக் கடவுள் தன்னை பார்க்கின்றாரென் றஞ்சி பெண்ணாசையையும் பொன்னாசையையும் அடக்கி, எவ்விதமான பாபக் கருத்தும் கருதாமலிருக்கின்றானோ அவனே உண்மையான தர்மநிஷ்டன். ஆனால் பிறர் கண்டு மெச்சவேண்டு மென்று டம்பார்த்தமாய் தர்மத்தை யநுஷ்டிப்பவனிடத்தில் தர்மநிஷ்டை சிறிதேனுமில்லை.

303. பாவமானது, பாதரஸம்போல், எக்காலமும் மறைக்க வொண்ணாதது.

304 யாவனொருவன் இச்சரீரத்தி லிருந்துகொண்டே மரித்தவனாகின்றானோ, அதாவது, எவனது ஆசை வெகுளி முதலிய குணங்கள் மரித்த வுடம்பிற்போல் அழிந்து போயினவோ, அவனே உண்மையான பக்தன்.

305. ஹிலஞ்சா அல்லது ஹிலமோசிகா எனுங் கிரையை ஸாதாரணக் கீரையாகவும் கற்கண்டைச் சாதாரண தித்திப்பு வஸ்துக்களுடன் சேர்த்தும் எண்ணக்கூடாது. ஏனெனில் வியாதிஸ்தன்கூட தன் தேகத்துக்குக் கெடுதலின்றி அவற்றை யுபயோகிக்கலாம். ப்ரணவத்தையும் ப்ரஹ்மஸ்வரூபமென் றெண்ணவேண்டுமேயன்றி ஸாதாரண சொல்லாகக் கருதக்கூடாது. அதுபோலவே பரிசுத்தம், பக்தி, சிரத்தை, அன்பு முதலிய குணங்களைக் குணங்களென்றே கணிக்கக்கூடாது.

306. சர்க்கரையையும் மணலையும் ஒன்றாய்க்கலந்துவைத்தபோதிலும் எறும்பானது மணலைத்தள்ளி சர்க்கரையைக் கொண்டுசெல்கின்றது. அவ்வாறே பக்தர்கள் கெட்டதைத்தள்ளி நல்லதைக் கொள்ளுகின்றார்கள்.

307. மண்ணைத்தூற்றி மணியை நிறுத்திக்கொள்வது முறத்தின் இயல்பு. பக்தர்களின் செயலும் அத்தகையதே.

308. வினா: சிற்றின்பத்திலேயுள்ள மோஹம் எப்பொழுது ஒழிந்துபோம்?

விடை: அகண்ட நித்யாநந்த வடிவமாகிய பரமாத்மஸ்வரூபத்தில் ஸகலவித ஸுகமும் ஆநந்தமும் திரண்டிருக்கின்றமையால், ப்ரஹ்மாநந்தத்தை யநுபவித்தவர்கள் ஸுலபமாய்க் கிடைக்கிற உலகத்தின் பயனற்ற சிற்றின்ப ஸுகத்திலே ஆசைகொள்ளமாட்டார்கள்.

309. தவளைக்குஞ்சின் வால் விழுந்துவிட்டால், பிறகு அது நீரிலும் வசிக்கும், நிலத்திலும் வசிக்கும். அதுபோலவே அஜ்ஞானமெனும் வால் போய்விட்டால் மனிதன் முக்தனாகிவிடுகின்றான். பிறகு அவன் ப்ரஹ்மத்திலும் ஜகத்திலும் சரிஸமாநமாய் வஸிக்கக்கூடும்.

ஸந்ந்யாஸிகள்.

310. உலகத்திலிருந்துகொண்டே முத்தியையடைய முயல்பவர்கள் கோட்டைக்குள்ளிருந்து அதன் மார்பளவு உயர்ந்த மதிற்சுவரின் பாதுகாப்பின் கீழ் போர்புரியும் வீரரை யொத்தவர்களாவர்; மற்று கடவுளை நாடி உலகத்தைத் துறக்கின்றவர்களோ பரந்த வெளியில் நின்று சமர்புரியும் சேனாவீரரை நிகர்த்தவர். பரந்தவெளியில் நின்று போர்புரிவதைவிட கோட்டைக்குள்ளிருந்து யுத்தஞ்செய்வது அதிகசௌகரியமும் பத்திரமுமானதாகும்.

311. பொரிக்கிற சட்டியில் கொட்டி வறுக்கப்படுகிற நெல்மணிகளுள்ளே, சட்டியிலிருந்து துள்ளித்தெறிக்கிற மணிகள் தாம், எவ்வகை நிறமும் சிறிதும் ...ாமலிருத்தலால், வறுபட்டவைகளாகின்றன. நன்

றுய் வறுபட்டும் பொரிக்கும்சட்டியிலேயே இருக்கிற மணிகளில் ஒவ்வொன்றுக்கும் ஏதாவதொருவிதமான வறுபட்ட நிறம் சிறிதேனும் பட்டிருக்கும். அதுபோலவே, எல்லா யதார்த்த பக்தர்களிலும், உலகத்தை முற்றுந் துறந்து வெளிப்பட்டுப் போய்விடும் சிலரைத் தான் குற்றமற்ற பூர்ண ஞாநிகளெனக்கூறலாம். ஆனால் உலகப்பற்றிலேயே இருப்பவர்கள் எவ்வித சிறந்தபக்தர்களாயினும் அவர்களது குணத்தில் சிறிதாயினும் களங்கமிருந்தே தீரும்.

312. வினா: உண்மையான வைராக்யமின்றிஒருவகை நிலையில்லா வெறுப்பினால் மாத்திரம் உலகத்தைத் துறக்கும் ஸந்யாஸியின் இயல்பு எவ்வகைத்து?

விடை: தாய்தந்தை தாரம் முதலியவர்களுடன் மநஸ்தாபமுற்று வீட்டுக்கலஹங்களால் வெறுப்படைந்து ஸந்யாஸியாகின்றவன் வெறுப்பால் துறந்த வைராகியெனப்படுவான். அவனது ஸந்யாஸம் நீரின்மேற் குமிழிபோல் நிலையற்றது; தூரதேசத்தில் நல்ல உத்தியோகம் கிடைத்துவிட்டால் அது போய்விடும். சீரும் செல்வமும் அதிகமாய்ச் சேர்ந்தவுடன் அவன் மறுபடியும் குடும்பத்திலே வந்து கலப்பது நிச்சயம்.

313. சுத்தமான வெள்ளை வஸ்த்ரத்திலே ஒரு சிறுகறை பட்டபோதிலும் அதன் கருமை அதிக விகாரமாய்த் தோற்றும். அதுபோலவே, பரிசுத்தாத்மாவினிடத்திலே கடுகளவு குற்றமிருப்பினும், அவனது நிர்மல ஸ்வபாவமானது அதை மலையளவு பெரியதாய் எடுத்துக்காட்டுகின்றது.

### உண்மையான ஸாது, வேஷதாரி ஸாது.

314. பொன்னையும் பித்தளையையும் உரைகல்லில் தேய்த்தால், அவற்றின் மதிப்பு வெளியாகும். அதுபோல் துன்பம் தரித்திரம் எனும் உரைகல்லில் உரைபோட்டுச் சோதிக்குங்காலையில், (அதாவது துன்பமும் தரித்திரமும் நேர்ந்து அவற்றால் வருந்துகையில்), உண்மையான ஸாதுவையும் கபடவேஷதாரியையும் எளிதில் கண்டுகொள்ளலாம்.

315. மருந்துகள் கொடுத்து மயக்கவஸ்துக்களையுபயோகிக்கும் ஸாது சரியான ஸாதுவல்லன். அத்தகையவர்களின் கூட்டுறவை யகற்ற வேண்டும்.

316. ஆகாயத்திற் பறக்க விடுகிற லக்ஷங் காற்றாடிகளுக்குள்ளே, ஒன்றிரண்டு மாத்திரந்தான் கயிற்றை அறுத்துக்கொண்டு சுயேச்சையாய் ஸஞ்சரிக்கின்றன. அவ்வாறே முக்தியைத்தேடும் நூற்றுக்கணக்கான ஸாதகர்களுக்குள்ளே ஒருவரிருவர் மாத்திரமே இவ்வுலக பந்தத்தினின்றும் நீங்கி வீடு பெறுகின்றனர்.,

### நாநாவித மனிதர்.

317. வலைக்குள் அகப்பட்டுக்கொண்ட மீன்களுள் சில சிறிதேனும் அசைவின்றி வலைக்குள் சும்மாவிருக்கின்றன; மற்றுஞ்சில வலையினின்று வெளிப்படத் தம்மாலானமட்டும் துள்ளி முயன்று பார்க்கின்றன; பின்னும் சில வலையை யறுத்து வெளியே தப்பித்துக்கொண்டு சுகமாய் வந்துவிடுகின்றன. அதுபோலவே, மனிதர்களுக்குள்ளும் பத்தர்கள் (கட்டுப்பட்ட

வர்கள்) என்றும் முமுக்ஷுக்கள் (முத்தியடைய இச்சிக்கின்றவர்) என்றும், முக்தர்கள் (முக்திபெற்றவர்) என்றும் மூன்றுவகையுண்டு.

318. சூளை போடாத பச்சைப்பானை உடைந்து போய்விட்டால், குயவன் அதன் மண்ணைப் புதியபானைசெய்வதற்குபயோகிப்பான்; ஆனால் சூளைபோட்ட பானையே உடைந்து விட்டால் அதன் துண்டுகளை எதற்கும் உபயோகிக்கமாட்டான். அதுபோல, அஞ்ஞானதசையில் ஒருவன் இறந்துவிட்டால் அவன் மீண்டும் பிறத்தல் வேண்டும். ஆனால் அவன் மெய்யறிவெனும் ஞானாக்கியிலே வெந்துபோனால், அதாவது பூர்ணஞானியாய்விட்டால், அவன் மரித்த பிறகு மீண்டும் பிறப்பில்லை.

319. வெந்துபோன நெல்மணியை விதைத்தால் அது மீண்டும் முளையாது. வேகாத நெல்மணியே நட்டால் முளைக்கும். அதுபோலவே ஒருவன் வித்தனாகிய பின்னர் மரித்தால் மீண்டும் பிறக்க வேண்டியதில்லை. ஆனால் பூர்ணமாகாது அவித்தனாய் மரிக்கின்றவன் வித்தனாகும் வரையில் மீண்டும் மீண்டும் பிறக்க வேண்டியவனே.

320. இவ்வுலகத்திலே பரிபூரண மடைகின்றவர்கள் இருவகையராவர். உண்மையை யுணர்ந்து மோனமுற்றுப் பிறரைப்பற்றிய கவலையேயின்றித் தாமே அவ்வாநந்தத்தை அனுபவிக்கின்றவர்கள் ஒருவகையார். மற்றொரு வகையார் உண்மையை யுணர்ந்து அதைத் தமக்கே வைத்துக்கொள்வதில் திருப்தியடையாராகி,

ஸர்வஜநங்களையும் நோக்கி "வாருங்கள், எங்களுடன் உண்மையை உணர்ந்து அநுபவியுங்கள்" என்று பறை சாற்றுகின்றனர்.

321. உப்பினாலமைந்த பதுமையொன்றும், வஸ்த்ரத்தாற்செய்த பதுமையொன்றும் கல்லாற்கடைந்த பதுமையொன்றும், ஆக மூன்று பதுமைகள் இருக்கின்றன. இம் மூன்று பதுமைகளையும் தண்ணீரில் முழுத்தினால் முதற்பதுமை கரைந்துபோய் தன் உருவைப் போக்கிக் கொள்ளும். இரண்டாவது அதிகமான ஜலத்தை உறிஞ்சிக்கொண்டு தன் உருவத்தை வைத்துக் கொண்டிருக்கும்; மூன்றாவதோ நீரையே தன்னுட் செல்லவிடாது கெட்டியாய் நிற்கும். தன் பிரத்யகாத்மாவை எங்கும் நிறைந்த பரமாத்மாவிலே கலந்து அதனுடன் ஐக்கிய மாகின்றவன் முதற் பதுமையை யொத்தவன், அவனே முக்தபுருஷன். ஞானமடைந்து அன்புமயமாய் விளங்கும் மெய்யன்பன் அல்லது பக்தன் இரண்டாம் பதுமையை நிகர்த்தவன். மெய்யறிவானது அணுவளவேனும் தன்னுட் புகவொட்டாது தடுத்து நிற்கும் உலகப் பற்றுள்ளவனே மூன்றாம் பதுமையை யொத்தவன்.

322. பணியாரங்க ளெல்லாம் ஒரேவித மாவால் மூடப்பட் டிருப்பினும் அவற்றின் உள்ளே யிருக்கும் பதார்த்தங்கள் மாத்திரம் வெவ்வேறு வகையன. பணியாரம் நல்லதா யிருப்பதும் கெட்டதா யிருப்பதும் அவற்றி னுள்ளிருக்கும் பதார்த்தங்களை யொட்டியேயாம். அவ்வாறே எல்லா மனித சரீரங்களும் ஒரே

மன்றாற் செய்யப்பட்டிருப்பினும், மனிதர்கள் தத்தம் அந்தக்கரணங்களின் பரிசுத்தத்திற்கேற்ப குணத்திலும் வேறுபடுகின்றனர்.

## அந்தக்கரணமே ஆத்மலாபத்திற் காதாரம்.

323. மனிதனது ஆத்ம லாபத்துக்குக் காரணமாயிருப்பது அவன் கருதும் எண்ணங்களும் அவனது அந்தக்கரணமுமேயன்றி அவன் வெளிப்படையாய்ச் செய்யும் காரியங்களல்ல. இருவர் தோழர்கள் ஒரு தெருவழியாய்ப் போய்க்கொண்டிருக்கையில் ஸ்ரீமத் பாகவத காலக்ஷேபம் நடக்கும் ஓரிடமடைந்து, அவர்களுள் ஒருவன், "தம்பி, இங்கே சிறிது நேரமிருந்து இந்த ஸத் கதையைக் கேட்டுச் செல்லுவோம்" என, மற்றவன் 'வேண்டாம் அண்ணே, பாகவதத்தைக் கேட்பதாற் பயனென்ன ? எதிரே யிருக்கும் வேசிவீட்டுக்குப்போய் உல்லாஸமாய் ஸுகித்திருப்போம் வா' என்றான். முதற் சொன்னவன் இதற்கு ஸம்மதிக்கவில்லை. அவன் பாகவத காலக்ஷேபஞ் செய்யுமிடஞ் சேர்ந்து அதைக்கேட்டுக்கொண்டிருந்தான். மற்றவன் வேசியினில்லஞ் சேர்ந்து அங்கே தான் எதிர்பார்த்திருந்த இன்பம் இல்லாமற் போகவே, இவ்வாறு சிந்திக்கலாயினன்: "அந்தோ ! நான் எவ்வளவு மூடன் ! நான் இங்கே ஏன் வந்தேன் ? இந்நேரமெல்லாம் என் நண்பன் அங்கே ஸ்ரீஹரியின் புண்யகதையை ஸ்ரவணம் செய்துகொண்டு எவ்வளவு ஆநந்தமா யிருப்பான் ?" இவ்வாறாக அவன் வேசியின் வீட்டில் இருந்தபோதிலும் தன் மாசிலா மநத்திலே ஈசனாகிய ஸ்ரீஹரியையே

த்யானித்துக்கொண்டிருந்தான். பாகவதம் கேட்கப் போன மற்றவனோ அப்புண்ய கதையில் யாதொரு ஸுகத்தையும் காணாகி, அங்கே ஒரு மூலையில் உட்கார்ந்து தன்னையே பின்வருமாறு கடிந்துகொண்டான். "ஐயோ! நானேன் என் நேசனுடன் வேசியின் இல்லம் செல்லாமற்போனேன்? இவ்வளவு நேரமும் அவன் எவ்வளவு ஸுகம் அநுபவித்துக்கொண்டிருப்பான்!" கடைசியில், பாகவத காலக்ஷேபக் கூட்டத்தில் உட்கார்ந்து வேசிவீட்டின் ஸுகஸம்போகங்களைப்பற்றி த்யானித்துக்கொண்டிருந்தவன், தன் பாவசிந்தையின் பலனாக வேசிவீட்டுக்குச்சென்ற தீவினைப்பயனையும், வேசிவீட்டுக்குச் சென்றிருந்தவன், தன் அந்தக்கரண சுத்தியால் பாகவதங்கேட்ட நல்வினைப்பயனையும் முறையே அடைந்தார்கள்.

### மநத்தின் மஹிமை.

324. ஒருவனை அறிவுள்ளவனாகவேனும் அறிவிலியாகவேனும் பத்தனாகவேனும் முக்தனாகவேனும் ஆக்குவதற்கு மநமே முக்யகாரணம். ஒருவன் துஷ்டனாவதும் மநத்தினாற்றான்; பாபியாவதும் மநத்தினாற்றான். ஒருவன் புண்யவானாவதும் மநத்தினாற்றான். ஆதலால் எவனது மநம் எப்பொழுதும் கடவுளின்மீதே நிறுத்தப்பெற்றிருக்கின்றதோ அவனுக்கு வேறெவ்வித சரியையாவது கிரியையாவது யோகமாவது வேண்டியதில்லை.

325. விஸ்வாஸத்தைக் கைக்கொண்டு வைத்யம் செய்பவர்கள் நோயாளிகளை, "நோய் என்னைவிட்டுப்

போய்விட்டது, அடியோடே போய்விட்டது" என்று முழுநம்பிக்கையுடன் வாயினால் சொல்லச் செய்கின்றனர். நோயாளி அவ்வாறே சொல்லி, மநத்திலும் இனி பிணி இல்லையென்று நினைத்துக்கொள்வதனால், பிணி போய்விடுகின்றது. அதுபோலவே நான் பலஹீநன், பாபி, புண்யஹீநன் என்று நீயே நினைத்துக்கொண்டால், காலக்ரமத்தில் நீ யதார்த்தமாகவே அவ்வாறாகி விடுவாய். உன்னிடத்தில் எல்லா சக்தியும் இருக்கின்றதென்று உனக்குள் தெரிந்துகொண்டு நம்பிக்கைகொள்வையேயாயின், முடிவில் ஸர்வசக்தியும் உன்னிடத்தில் வந்துசேரும்.

326. போலி விநயங்காட்டும் புருஷர் பலர், "புழுவிற் புரண்டுழலும் அற்பப்புழுவைப் போன்றவன் யான்" என்று புகல்வர். இவ்வாறு அவர்கள் எப்பொழுதும் புழுவென்றே தங்களைக் கருதி, கடைசியில் உடல் குன்றி ஆவியழிந்து புழுக்கள் போலவே ஆய்விடுகின்றார்கள். ஆதலால் நின் ஹ்ருதயத்தில் ஏக்கமென்பது எக்காலத்திலும் புகவேண்டாம். ஏக்கமே அபிவிர்த்தியடையும் மார்க்கத்தைத் தடுக்கும் பெரும்பகைவன். மனிதன் எவ்வாறு நினைக்கின்றானோ, அவ்வாறே யாகின்றான்.

327. கல்பவ்ருக்ஷத்தின் அடியில் உட்கார்ந்திருந்த ஒருவன் தான் அரசனாக வேண்டுமென்று விரும்பினான். அதே நிமிஷத்தில் அவன் அரசனாய் விட்டான். அடுத்த நிமிஷம் ஓர் அழகிய இளம்பெண் தன்னிடம் இருக்கவேண்டுமென்று இச்சித்தான். அந்தப்படியே

உடனே ஒருபெண் அவன் பக்கத்தில் வந்து நின்றாள். பிறகு, நம்மை ஏதாவது புலிவந்து விழுங்கிவிடுமோ என்று நினைத்தான். ஐயோ! நினைத்தமாத்திரத்தில் அந்தப்படியே ஒரு புலியின் வாயில் அகப்பட்டுக்கொண்டான். கடவுளும் இத்தகைய கல்பதருவைப் போன்றவரே, அவரது ஸந்நிதாநத்திலே எவன் தான் ஆதரவற்றவனென்றும் ஏழையென்றும் எண்ணிக்கொள்ளுகின்றானோ அவன் தன் எண்ணப்படியே இருக்கின்றான்; ஆயின், எவன் தன் குறைகளையெல்லாம் கடவுள் தீர்க்கின்றார் என்று நம்புகின்றானோ, அவன் தன் எண்ணப்படியே யாவையும் அவரிடத்திலிருந்தே பெற்றுக் கொள்கின்றாள்.

328. எவன் தன்னை ஜீவனென்று கருதுகின்றானோ, அவன் ஜீவனாகவே இருக்கின்றான்; எவனொருவன் தன்னைக் கடவுளெனக் கருதுகின்றானோ, அவன் கடவுளே யாகின்றான். ஒருவன் எப்படி நினைக்கின்றானோ அப்படியே யாகின்றான்.

329. யானையைக் கட்டிலிருந்து அவிழ்த்து விட்டு விட்டால், அது செடிகளையும் கொடிகளையும் பிடுங்கி யெறிந்துகொண்டே செல்கின்றது. ஆனால், யானைப்பாகன் அதன் தலையில் அங்குசத்தால் குத்தியவுடனே, அது அடங்கிப்போய்விடுகின்றது. அவ்வாறாகவே அடக்காமல் இஷ்டப்படி விடப்பட்ட மநமானது வீண் விநோதங்களிலே காலத்தை வாளா கழிக்கின்றது. ஆனால் விவேகமென்னும் அங்குசத்தால் குத்துண்ட காலையில், உடனே ஒடுக்கமடைந்து விடுகின்றது.

## விவேகமும் வைராக்யமும்.

330. வெருளுகிற குதிரையின் கண்களைக் கட்படாத்தினால் மறைக்காதவரையில் அது நேர்வழியே போவதில்லை. அதுபோல, உலகப்பற்றுள்ள மனிதனது மநத்தையும் இப்புறமும் அப்புறமும் சுற்றிப்பாராதிருக்குமாறு, விவேகவைராக்யங்களெனும் மறைவு கொண்டு தடுக்கவேண்டும். அப்பொழுதுதான் அது தீயவழியில் தவறிவிழுந்து கெட்டுப்போகாமலிருக்கும்.

331. படிகாரம் முதலிய சுத்திகரிக்கும் பொருள்களை அழுக்குநீர் நிறைந்த கலயத்திற் போட்டால், நீர் சுத்தமாய்விடுகிறது. அதிலுள்ள அழுக்கும் அடியிற் போய்த் தங்கிவிடுகின்றது. அதுபோலவே விவேகமும் வைராக்யமும் ஹ்ருதயத்தைப் புநிதமாக்கும் இருவகை ஸாதகங்களாம். அவற்றின் உதவியால், உலகப்பற்றுள்ளவனது மநம் அப்பற்றை யொழித்து சுத்தமாய் விடுகின்றது.

332. எரிப்புழுவானது தான் நெய்துகொண்ட கூட்டிலேயே அடைப்பட்டிருப்பதுபோல், உலகப்பற்றுள்ள ஜீவனும் தனது ஆசையெனும் பாசத்திற் சிக்கிக்கொள்கின்றான். பிறகு எரிப்புழுவே வளர்ந்து அழகிய ஒளிபொருந்திய வண்ணத்திப்பூச்சியாக மாறுகையில், கூட்டைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்து தன்னிஷ்டப்படி ஆநந்தமநுபவிப்பதுபோல், உலகத்தில் கட்டுண்ட ஜீவனும் விவேக வைராக்யங்களெனும் இறக்கைகள் பூர்த்தியாய் வளர்ந்தவுடனே மாயாபாசத்தினின்றும் விடுபட்டு வெளியாகி ப்ரஹ்மாநந்த மநுபவிக்கின்றது.

333. ஸச்சிதாநந்தக் கடலிலே நாம் ஆழ்ந்து முழுகவேண்டும்; க்ரோத லோபமெனும் முதலைகளைக் கண்டு அஞ்சவேண்டாம்; விவேக வைராக்யங்களெனும் மஞ்சளைப் பூசிக்கொண்டு செல்வையேல், மஞ்சளின் வாசனையைக்கூட பொறுக்கமுடியாத அம்முதலைகள் நீ யிருக்கும் இடத்தையே எட்டிப்பாரா.

334. விவேகமானது வ்யஷ்டி விவேகமெனவும் ஸமஷ்டி விவேகமெனவும் இருவகைப்படும். வ்யஷ்டி விவேகத்தால் ஒருவன் ப்ரபஞ்சத்தினின்றும் ப்ரஹ்மத்தை யடைகின்றான்; ஸமஷ்டி விவேகத்தால் ப்ரஹ்மமே ப்ரபஞ்சமாய்த் தோற்றும் விதத்தை யறிகின்றான்.

335. வினா: வைராக்யம் எத்தனைவிதம்?

விடை: தீவ்ர வைராக்ய மெனவும் ஸாதாரண வைராக்ய மெனவும் வைராக்யம் இருவகைப்படும் தீவ்ர வைராக்ய மென்பது ஒரே இரவில் ஒரு பெரிய குளத்தைவெட்டி அதை நீரால் நிறப்புவதைப் போன்றது. ஸாதாரண வைராக்யமென்பது ப்ரஹ்மசர்யம் க்ருஹஸ்தாஸ்ரமம் முதலியவற்றை வரிசையாய் அநுஷ்டித்துக் கடைசியில் துறக்கலாமென்று யோசித்திருப்பதாகும். இவ்வித வைராக்யம் எப்பொழுது பரிபூர்த்தி யெய்துமோ தெரியாது.

336. வினா: வைராக்யத்தை யொருவன் எவ்வாறு பயிலவேண்டும்?

விடை: ஒரு ஸ்த்ரீ தன் புருஷனைப் பார்த்து, "என் அன்பே, என் உடன்பிறந்தானைப் பற்றி நான் மிகவும் விசாரப்படுகிறேன். சென்ற சில தினங்களாக அவன் உலகத்தைத்துறந்து ஸந்யாஸியாக யோசித்துக் கொண்டிருக்கிறான். அதற்கு வேண்டிய கார்யஸாதநங் களெல்லாம் ஸித்தப் படுத்தவும் தொடங்கிவிட்டான். அவன் ஆசைகளை யெல்லாம் ஒவ்வொன்றாய்க் கண்டித்துக் குறைத்துக்கொண்டு வருகிறான்" என்று மொழிந்ததைக்கேட்ட கணவன், "உன் ஸஹோதரனைப்பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. அவன் ஒரு நாளும் ஸந்யாஸியாகப் போகிறதில்லை. ஸந்யாஸியாக விரும்பும் எவனும் அதற்காக வெகுநாள் ப்ரயத்நம் செய்த தேகிடையாது" என்றான். "ஆனால் ஒருவன் எவ்வாறு ஸந்யாஸி யாகின்றான்?" என்று மனைவி கேட்க, கணவன் மொழியலுற்றான், "ஒருவன் எவ்வாறு உலகத்தைத் துறப்பானென்பதை பார்க்க விரும்புகின்றாயா? இதோகாட்டுகிறேன்பார்" என்று சொல்லிக்கொண்டே அவன் தன் அழகிய உடையைத் துண்டு துண்டாகக் கிழித்தெறிந்துவிட்டு ஒரு கோவணத்தை மாத்திரம் இடையிலே கட்டிக்கொண்டு, மனைவியைப் பார்த்து,—நீயும் மற்ற ஸ்த்ரீகளும் இதுமுதல் என் தாய்க்கு ஸமானம் என்று சொல்லிவிட்டு, மீண்டும் திரும்பிவராத நிச்சயத்துடன் வீட்டைவிட் டகன்றான்.

**வேதசாஸ்த்ர பாராயணம்.**

337. விவேகமும் வைராக்யமுமின்றி எத்தனை வேதசாஸ்த்ரங்களைப் படித்தபோதிலும் பயனில்லை.

விவேகமும் வைராக்யமும் இல்லாவிடில் யாதோர் ஆத்மலாபமும் கைகூடாது.

338. "க்ரந்தம்" என்கிற சொல்லுக்கு 'நூல்' அல்லது 'ஶாஸ்த்ரம்' என்று மாத்திரம் பொருளன்று; அச்சொல் 'க்ரந்தி' அல்லது முடிச்சு என்றும் பொருள்படும். ஒருவன் எல்லாவித வீண் பெருமைகளையும் சிலசமயத்தில் சுகபோகங்களையுங் கூட ஒழித்து, யதார்த்த மின்னதென் றறியவேண்டு மென்கிற ஆவலுடன் படியாதுயின், வெறும் நூற்படிப்பானது அவனிடத்தில் கல்விச் செருக்கையும் அஹம்பாவத்தையுந்தான் உண்டுபண்ணும். இவ்வளவும் அவன்மனதை வாட்டும் அத்துணை முடிச்சுகளே (க்ரந்தி) யன்றி வேறல்ல.

339. கொஞ்சம் படித்துவிட்ட சிலர் அதனால் செருக்கடைந்து தருக்கித் திரிகின்றனர்.—ருடன் ஒரு ஸமயம் நான் உரையாட நேர்ந்தது. "ஓ எனக்கு எல்லாந்தெரியும்" என்றார் அவர். அதற்கு நான், "டில்லிக்குப்போ யிருந்தவன் தான் போயிருந்த சங்கதியைப் விளம்பரம் செய்துகொண்டு திரிகின்றானா? உண்மையில் கனவானா யிருப்பவன் தான் கனவானென்றுசொல்லிக் கொள்கிறானா?" என்றேன்.

## ஆத்மஜ்ஞாநம் அடைய முடியாதவர்.

340. ஆத்மஜ்ஞாநம் அடைய முடியாதவர்கள் யாவரெனில்:—கல்விச்செருக் குடையோரும், அறிவுச் செருக் குடையோரும், செல்வச்செருக் குடையோருமேயாம். யாரேனும் இவர்களிடஞ் சென்று, "இன்னின்ன இடத்திலே ஒரு நல்ல ஸந்யாஸி இருக்கின்றார்,

அவரைப் பார்க்க நீங்கள் வருவீர்களா?" என்றால், அவர்கள் எல்லோரும் ஏதாவது சாக்குப் போக்குகள் சொல்லி தங்களால் வரமுடியாதென்பார்கள். ஆனால் அவர்கள் உள்ளுக்குள்ளே, தாமே பெரிய மனிதர்களாயிருக்க அந்யரிடம் ஏன் செல்லவேண்டுமென்றே எண்ணிக் கொள்ளுகின்றனர்.

341. பரமஹம்ஸர் பைத்யம்பிடித்தவரென்றும் ஸதா ஒரே விஷயத்தைப் பற்றிச் சிந்தனை செய்வதால் அவரது மூளை சிதறுண்டு போய்விட்டதென்றும் ஒரு பெயர்பெற்ற ப்ராஹ்மஸமாஜ ப்ரஸங்கியார் கூறியதற்குப் பரமஹம்ஸர் பகர்ந்த விடையாவது :—

"ஐரோப்பாவிலேகூட புலவர்கள் ஒரே விஷயத்தைப் பற்றிச் சிந்தித்தலால் உன்மத்தராகின்றனரென்று நீரே சொல்லுகின்றீரே. அவர்கள் சிந்திக்கும் விஷயமென்ன? சித்தா? ஜடமா? ஜடந்தானே. ஜடத்தைப் பற்றியே சிந்திக்கின்றவர்கள் உந்மத்தராவதில் ஆச்சரியமென்ன? ஆனால் எந்த ஞானஸ்வரூபத்தினின்றும் உலகமுழுவதும் ஞானத்தைப் பெறுகின்றதோ அந்த ஞானஸ்வரூபத்தையே ஸந்ததமும் சிந்தனை செய்து வருகின்றவன் எவ்வாறு அறிவிழந்து உன்மத்தனாவான்? உம்முடைய மதநூல்கள் உமக்கு அவ்வாறுதான் உபதேசிக்கின்றனவோ?"

### கண்டஞாநம் அகண்டஞாநம்.

342. நித்யப்பொருளை அநித்தியப்பொருள்களின் வாயிலாகவும், ஸத்யப்பொருளை அஸத்தியப் பொருளகளின் வாயிலாகவும், அகண்ட வஸ்துவைக்

கண்டமான தோற்றப் பொருள்களின் வாயிலாகவும் உபதேசித்தல் வேண்டும்.

343. கூரிய முள்ளொன்று காலிலே தைத்து விட்டால் அதையெடுக்க வேறொரு முள்ளின் உதவி வேண்டி யிருக்கின்றது. பிறகு இரண்டு முள்ளையும் எரிந்துவிடுகின்றோம். அதுபோலவே ஆத்மநேத்ரத்தை மறைக்கின்றதுகண்டஞானமாகியவித்யாமாயையேயாம். ஆயின் வித்தை அவித்தை யென்றஇவ்விரண்டும் மாயை யேயானமையால் பரஞானம் அல்லது அகண்டவஸ்து வின் ஞானத்தை யடைகின்றவன் ஸகலவித த்வைதபா வனையினின்றும் விடுபட்டு வித்யா - அவித்யா என் கிற இருவித மாயையையும் முடிவில் ஒழித்து விடுகின் றான்.

மாயையின் மயக்கும் சக்தி.

344. ஸகலத்தையும் மயக்கியாட்டும் மாயாசக்தி யை மட்டும் நீ கண்டுபிடித்துவிட்டால், கண்டுபிடிக்கப் பட்ட திருடன் ஓட்டமெடுப்பதுபோல், அஃது உன்னை விட்டுப் பறந்தோடிவிடும்.

345. பிசாசு பிடித்தவனுக்குத் தனக்குப் பிசாசு பிடித்திருக்கிறதென்ற அறிவு உண்டாகிவிட்டால் அந் தப் பிசாசு அவனைவிட்டு உடனே நீங்கிவிடுகின்றது. அவ்வாறே மாயையால் கட்டுண்ட ஜீவன் தான் மாயை யால் மயங்கியிருக்கின்றானென்பதை அநுபவவழித்த மாய் அறிந்தவுடனே மாயையினின்றும் விடுபடுகின் றான்.

346. சிலர், தம்மை இவ்வுலகத்தில் இழுத்துக் கட்டும் பாசபந்தங்கள் ஒன்றும் இல்லாமற்போயினும், தாமாகவே சில பந்தங்களை யேற்படுத்திக் கொண்டு அவற்றின் பொருட்டு இயமனுடைய கட்டுண்டுழல்கின்றனர். வீடுபெற வேண்டுமென்ற எண்ணமே அவர்களுக்குக் கிடையாது; அதை யவர்கள் விரும்புவதுமில்லை. ஒருவனுக்குத் தான் போஷிக்க வேண்டிய குடும்பமாவது விசாரிக்கவேண்டிய பந்துவர்க்கமாவது இல்லாமற்போயினும், ஒரு பூனையையேனும் குரங்கையேனும் நாயையேனும் பறவையையேனும் ஆசைத் துணையாக வைத்துக்கொண்டு, பால் அருந்தவேண்டுமென்றுள்ள தாஹத்தை வெறும் மோரைக் குடித்துத் தீர்த்துக் கொள்ளுகின்றான். மாநுடரை மயக்குவதில் மாயைக்குள்ள சக்தி அபாரமானது.

347. தாபஜ்வரத்தினால் நாக்கு வறண்டுபோய் அதிக தாஹமாயிருப்பவன் கடல்நீர் முழுவதையும் கொடுத்தாலும் குடித்துவிடலாமென்று கருதுவான். ஆனால் ஜ்வரம் தணிந்து அவன் சாதாரண நிலையிலிருக்கும்பொழுது ஒரு கிண்ணி நீரைக்கூட அருந்த அவனாலாகாது; அதில் கொஞ்சம் குடித்தாலும் அவன் தாஹம் அடங்கிவிடும். அதுபோலவே மாயையின் மோகத்திலே அகப்பட்டுத் தன் சிறுமையை மறந்தவன் அகண்ட ஸ்வரூபமான ஈஸ்வரனைத் தன் மனதிலே அடக்கிவிடலாமென்று நினைக்கின்றான். ஆனால் மாயையானது அவனைவிட்டு விலகிய பிறகு, அருட்பெருஞ் சோதியின் ஓர் அணுவளவு கிரணமே அவனை ஸமஸ்

வதமான ப்ரஹ்மாநந்த வெள்ளத்திலே முழுத்திவிடப் போதுமானதாயிருக்கின்றது.

348. தர்க்கம் செய்வதே தொழிலாயிருந்த ஒருவனை நோக்கிப் பரமஹம்ஸதேவர் ஒருகால் பின்வருமாறு கூறினார். "தர்க்கம் செய்து உண்மையை உணரவேண்டுமானல், கே—என்ற ப்ராஹ்மஸமாஜ ப்ரஸங்கியினிடம் போகலாம்; ஆனால் ஒருசொல்லாலேயே அதை அறிந்துகொள்ளவேண்டுமாயின், என்னிடம் வா."

## உலகம் பொய்யெனல்.

349. "ஞானவொளி யடையும் வழியை யொருசொல்லால் அடியேனுக்கு அருள்புரிக" என்று வினவிய ஒரு முமுக்ஷுவை நோக்கிப் பரமஹம்ஸர், "ப்ரஹ்மமேமெய், உலகமே பொய்" (ப்ரஹ்ம ஸத்யம் ஜகந் மித்யா) என விடை யளித்தார்.

350. ஒரு ஸாது சித்ரவர்ண ஸ்படிகமொன்றை இரவும் பகலும் பார்த்துப் பார்த்து நகைப்பது வழக்கம். அவர் அவ்வண்ணம் செய்வதற்குக் காரணமென்னவெனில், அந்த ஸ்படிகத்தின் மூலமாய் அவர் சிவப்பு, நீலம்முதலிய பலவகை வர்ணங்களையும் கண்டு, அவ்வெல்லா வர்ணங்களும் பொய்யானதுபோல் உலகமும் பொய்யெனத் தேர்ந்தமையே.

351. வினா:—இவ்வுலகம் பொய்யா?

**விடை:**—கடவுளை நீ யறியாதவரையில் அதுபொய்யே. எல்லாவற்றிலும் நீ கடவுளைக் காணுது, நான் எனது என்ற பாசத்தால் உலகத்திற் கட்டுண்டுழல்வதே

அதற்குக் காரணம். நீ இவ்வாறு அஞ்ஞாநத்தால் மயங்கி விஷயஸுகமளிக்கும் வஸ்துக்களுக்கே யடிமையாகி மாயைக் குழியிலேயே இன்னும் அதிக ஆழத்தில் போய்க் கொண்டிருக்கின்றாய். மாயையானது மனிதர்களை முழுக்குருடர்களாக்கிவிடுகின்றமையால், முக்திநெறி திறந்தவெளியா யிருக்கும்போது கூட, அவர்கள் ஸம்ஸாரத்தினின்றும் வெளிப்பட்டு வருவதில்லை. ஸம்ஸாரம் பொய்யான தென்பது உனக்கே தெரிந்திருக்கின்றது. நாமிருக்கும் வீட்டைப்பற்றிச் சிறிது யோசித்துப்பார். இதிலே எத்தனை பேர் பிறந்திறந்தவர்கள்! உலக வஸ்துக்கள் ஒரு நிமிஷத்தில் நம்முன் தோன்றி அடுத்த நிமிஷத்தில் மறைந்துபோகின்றன. உனக்குச் சொந்தமென்று நீ கருதியிருப்பவர்கள், நீ மரித்துக் கண்மூடுங்காலையிலே இல்லாதவராவார்கள். உலகப் பற்றுள்ளவர்களுக்குள்ள பாச பந்தத்தின் வலிமை என்னே! இவன் பார்த்து விசாரிக்க வேண்டியவர்கள் குடும்பத்தில் ஒருவரு மிலராயினும், ஒரு பேரன்மேலுள்ள ஆசையால் காசிக்குப் போகாமலிருக்கின்றான். "என் ஹரியை யார் பார்த்துக்கொள்வார்கள்?" என்ற ஒரே எண்ணந்தான் அவனை இவ்வுலகத்தில் இழுத்துக் கட்டி வைத்திருப்பது. குநி என்ற மீன் பிடிக்கும் வலையிலே வெளியேவரும் வழி திறந்திருப்பினும், மீன்கள் அதைவிட்டு வெளியே வருவதில்லை. சிலந்திப்பூச்சி தான் அமைத்துக்கொண்ட கூட்டிலேயே அடைந்து மரித்துப்போகின்றது. இத்தகைய ஸம்ஸாரம் பொய்யே, நிலையற்றதே. இதில் ஸந்தேஹ மில்லை.

**சரீரம் நிலையற்றது.**

352. வினா:—உயிரின் மேல் உள்ள ஆசையை எவ்வாறு வெல்லலாம்?

விடை:—மனிதன் உடலானது தசை, இரத்தம், என்பு முதலிய அழிவுள்ள பொருள்களால் அமைந்திருக்கின்றது. அது புலால், என்பு, நிணம், இரத்தம் முதலிய அழுகுந் தன்மையுள்ள அசுத்தப் பொருள்களின் சேர்க்கையேயன்றி வேறில்லை. உடலை இவ்வாறு கூறுபடுத்திச் சோதித்தறிவதால் அதன்மேல் நமக்குள்ள ஆசை ஒழிந்துபோகும்.

353. கூட்டினின்றும் பறவை பறந்தோடிவிட்டால், கூட்டைப்பற்றிக் கவலையுறுகின்றவர் ஒருவருமில்லை. அவ்வாறே உயிரெனும் பறவை உடலைவிட்டுப் பறந்தோடியபின் பிணத்தைச் கவனிப்போர் ஒருவருமிலர்.

354. குடிக்கூலிக்கிருப்பவன் தான் குடியிருக்கும் வீட்டுக்கு வாடகை கொடுப்பதுபோல், ஜீவனும் தான் குடியிருக்கும் உடலுக்காக வ்யாதியெனும் வாடகையைக் கொடுக்கின்றான்.

355. சரீரம் நிலையில்லாதது, அழுக்கியமானது. அப்படியிருக்க, அதை ஏன் அவ்வளவு பாதுகாத்துப் போற்றவேண்டும்? ஒன்றுமில்லா வெறும் பெட்டியை ஒருவரும் லக்ஷ்யம் செய்யார்கள். ஆனால் பணமும் அருமையான பிறபொருள்களும் உள்ள பெட்டியை ஜனங்கள் ஜாக்கிரதையாயக் காப்பாற்றுகின்றார்கள்.

கடவுள் கோயில்கொண்டருளிய ஜீவாலயமாயும் ஈச்வர ஸந்நிதானத்தில் மங்களகரமாயும் விளங்கும் சரீரத்தைச் சிலவர்கள் அவஸ்யம் பாதுகாப்பார்கள்.

356. வினா:—சரீரத்திலே பகவான் எவ்வாறு வஸிக்கின்றார்.

விடை:—பீச்சாங்குழலில் அடைப்புக்கோலிருப்பதுபோல அவர் சரீரத்திலே யிருந்தும் அதனின்றும் வேறாகவே யிருக்கின்றார்.

357. மாநுட சரீரம் ஒரு கொதிக்கும் பாண்டத்தைப் போன்றது; மநதும் இந்திரியங்களும் அப்பாண்டத்திலேயுள்ள நீர், அரிசி, உருளைக்கிழங்கு முதலியவற்றைப்போன்றவை இப்பதார்த்தங்களுடன் மேற்படி பண்டத்தைத் தீயின் மேல் வைத்து, சற்றுக் கழித்து அதைத் தொட்டால், அது நம் விரல்களைச் சுட்டுவிடு மவ்வளவு சூடாயிருக்கும். ஆனால் அச்சூடு பாண்டத்தையாயினும் அதிலுள்ள பதார்த்தங்களையாயினும் சேர்ந்ததன்று. அது தீயினுடையதே. அதுபோலவே மனிதனுக்குள்ளே யிருக்கும் ப்ரஹ்மமெனும் அக்கினியே மநத்தையும் புலன்களையும் அவ்வவற்றின் தொழில்களைச் செய்யுமாறு ஏவுகின்றது. அவ்அக்கினி வேலைசெய்வதை நிறுத்திவிட்டால், புலன்களும் மற்றைக் கருவிகளும் தத்தம் தொழிலை நிறுத்திவிடுகின்றன.

## அந்நமும் பாநமும்.

358. பகவானையே யடையவேண்டு மென்று பேராவலா யிருக்கிற மனிதன் அந்நம் பாநம் முதலிய அற்ப விஷயங்களைப் பற்றி யோசிக்கவேமாட்டான்.

359. ஒருவன் தேவாம்ருதத்துக்கு ஸமானமான சுத்த மரக்கறிபோஜனமே பண்ணிக்கொண்டு வந்த போதிலும் அவன் பகவானை யடையும் ப்ரயத்நம் செய்யாதவனாயின், அந்தச் சுத்த ஆஹாரம் கோமாம்ஸத்துக்கு ஸமானமே. கோமாம்ஸ பக்ஷகனாயிருந்தும் எவனொருவன் பகவானிடத்தில் பக்திசெய்கின்றானோ அவன் விஷயத்திலே, அக்கோமாம்ஸமும் தேவாம்ருதத்துக்கொப்பாகும்.

360. மநத்தைச் சலிக்கவொட்டாமல் நிறுத்தும் ஆஹாரமே சுத்தமான ஸாத்விக ஆஹாரம்.

### பணமும் பாக்கியமும்.

361. பணத்தைக் கொண்டு போஜநத்துக்கு வேண்டிய பதார்த்தங்களை மாத்திரம் வாங்கக்கூடுமே யன்றி சரீரத்துக் காதாரமாகிய இரத்த மாம்ஸங்களை யுண்டாக்க முடியாது. ஆகவே பணமே மனிதனுக்கு ப்ரதானமெனக்கருதுதல் கூடாது.

362. பணத்திலே ஒருவன் பெருமை ப்ராப்தித்துக்கொள்ளக்கூடிய அம்சம் ஒன்றுமில்லை. நாம் பணக்காரனா யிருக்கின்றோமெனக் கருதுவையேல், உன்னைவிட பணக்காரரா யிருப்போர் இன்னும் எத்தனையோ பேருளர்; அவர்களை நோக்க நீ வெறும் பிச்சைக்காரனே யாவாய். இருட்டினவுடன் வெளியேவரும் மின்மினிப் பூச்சிகள் நாமே உலகிற்கு ஒளியளிக்கின்றோம் என்று எண்ணுகின்றன. பிறகு நக்ஷத்ரங்கள் "நாம் தான் ப்ரபஞ்சத்துக்கு ப்ரகாசத்தைக் கொடுக்கின்

ரேம்" என்று நினைக்கின்றன. சற்று நேரங்கழித்து சந்திரன் உதயமாகி ஆகாயவீதியில் வந்தவுடனே, நக்ஷத்ரங்கள் மாகமிழந்து வ்யஸநமுற்றனபோல்காணப் படுகின்றன. அப்பொழுது சந்திரனும் நக்ஷத்ரங் களும் வெள்ளொளியால் தான் உலகம் தேஜோமயமாகி எங்குபார்க்கினும் அழகிலும் உற்சாகத்திலும் மூழ்கி மஹதவைலத்துடன் ஒளிர்கின்றதென்று நினைக்கின் றான். ஆனால் சற்றுநேரத்துக்கெல்லாம், என்ன ஆச் சரியம்! இதோ அருணன் தோன்றிக் (கு)ணதிசையிலே (கிழக்குதிக்கிலே) பாலசூரியன் உதயமாகப்போவதை முழக்குகின்றான். இப்பொழுது சந்திரன் எங்கே! தாம் பணக்காரர்களென்று கருதுவோர் இத்தகைய ஸா தாரண இயற்கை விநோதங்களை யுற்றுநோக்குவரேல், அவர்கள் அதுமுதல் பிறகு எக்காலமும் தம் செல் வத்தைப்பற்றி பெருமை பாராட்டவே மாட்டார்கள்.

363. எவனுக்குப் பணம்அடிமையோ, அவனே உண்மையான மனிதன். பணத்தை யுபயோகிக்கும் வழியை யறியாதவர் மனிதரென்றழைக்கப்படுவதற்கு அர்ஹரல்லர்.

364. தண்ணீரானது பாலத்தின் கீழே தங்கி நில்லாமல் பாய்ந்து செல்வதுபோல், பணமும் அதைச் சேர்த்துவைக்காத மூர்க்கர்களின் கைகளினின்று போய் விடுகின்றது.

## புகழ்ச்சியும் இகழ்ச்சியும்.

365. பிறர்களது நற்குண துர்க்குணங்களைப்பற்றி ப்ரஸங்கித்துக் காலக்ஷேபஞ் செய்கின்றவர்கள் கால

க்கை விரும்புகின்றார்கள். ஏனெனில் அக்காலமானது தம் ஜீவாத்மாவைப்பற்றியேனும் சிந்திக்காதிற் செல்லாமல் பிறரைப்பற்றி நினைப்பதிலன்றோ கழிக்கிறது?

366. உலகத்தார் உன்னைப் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும், அவற்றைக் காக்கைக் கூச்சலுக்குச் சமமெனக் கருதி உதாசீனனாயிரு.

367. மனிதர்கள் புகழ்வதும் சீக்கிரம், இகழ்வதும் சீக்கிரம். ஆகையால் பிறர் உன்னைப்பற்றிச் சொல்வதை நீ மனதில் வையாதே.

அடக்கமும் பொறுமையும்.

368. பங்காளி பாஷையிலே ஶ, ஷ, ஸ, என்ற மூன்றெழுத்துக்களையும் வேற்றுமையின்றி 'ஷ' என்றே உச்சரிப்பது வழக்கம். 'ஷ' என்றுச்சரிக்கப்படும் இம்மூவகையெழுத்துக்களுக்கும் 'ஸஹ'=“பொறுத்துக்கொள்” “பொறுத்துக்கொள்” “பொறுத்துக்கொள்” என்றே பொருள். இதனால் நாம் இளமை முதற்கொண்டே பொறுமைக் குணத்தை நம் பிள்ளைகளுக்கெல்லாமே கற்றுக்கொள்ளுமாறு பெரியோர்கள் ஏற்படுத்தியிருக்கின்றனரென்று புலப்படுகின்றது. பொறுமைக்குணமானது ஒவ்வொருவனுக்கும் மிகவும் முக்கியமானது.

369. ஸர்வத்தையும் பொறுத்துக்கொண்டு பேசாதே ஸத்துக்களின் உண்மை லக்ஷணம்.

370. நல்லோரின் கோபம் நீரின்மேல் கிழித்த கோடுபோல் சொற்பநேரமாத்திர மிருந்து மறைந்து போய்விடும்.

371. ஜாக்கிரதையாய் விழித்துக் கொண்டிருப்பவர்கள் வீட்டில் திருடர்கள் நுழையாதிருப்பது போல், நீ எப்பொழுதும் ஜாக்கிரதையாய் இருப்பாயாகில், உன் இருதயத்தின் நற்குணத்தைக் கொண்டு போக எவ்வித தீயெண்ணமும் அதில் நுழையாது.

372. வினா:—மனிதனிடத்தில் தெய்வ ஸ்வபாவம் எதுவரையில் இருக்கும்? S.

விடை:—இரும்பு தீயின்மேலுள்ளவரையில் சிவப்பாயிருக்கின்றது. அதைத் தீயிலிருந்தெடுத்தவுடனே கருப்பாய்ப்போய்விடுகின்றது. அவ்வாறே மனிதன் ஈஸ்வரத்யானம் செய்துக்கொண்டிருக்கிற வரையில் தெய்வஸ்வபாவம் பொருந்தி யிருக்கின்றான்.

### அஹங்காரம்.

373. வினா:—மனிதனுக்கு மோக்ஷம் எப்பொழுது கைகூடும்?

விடை:—அஹங்காரம் அழியும்பொழுது.

374. அஹங்காரம் இருக்கிறவரையில் ஞானமாவது முக்தியாவது ஸாத்தியமில்லை. பிறப்பிறப்பும் ஒழியா.

375. சூரியன் உலகமுழுமைக்கும் வெப்பமும் ஒளியும் அளிக்கக் கூடியவனாயிருந்தும், அவனது கிர

ணங்களை மேகங்கள் மறைத்தால் அவனால் ஒன்றும் முடியாது. அதுபோலவே அஹங்காரமெனும் மேகம் ஜீவனை மறைத்துக்கொண்டிருக்கும்வரையில் திரு வருட்ப்ரகாசம் அதன்மேல் ப்ரகாசிப்பதில்லை.

376. அஹங்காரமானது கடவுளை நமக்குத் தெரியவொட்டாமல் மறைத்து வைக்கும் மேகத்தைப் போன்றது. குருவின் கடாக்ஷத்தினால் அஹங்காரம் ஒழிந்துபோனால் ப்ரஹ்மஸ்வரூபம் பூர்ண மஹிமை யுடன் ப்ரகாசிக்கும். அஃதெவ்வாறெனில் ஸ்ரீராமா யணத்திலே பகவானாகிய ஸ்ரீராமசந்திரனுக்கும் ஜீவ னாகிய லக்ஷ்மணனுக்கும் நடுவே இரண்டு மூன்று அடி மாத்திரமே யிருந்தும், மாயையாகிய ஸீதை இரு வருக்கும் இடையே வந்து ஸ்ரீராமனை லக்ஷ்மணன் பார்க்கவொட்டாது தடுக்கிறான்.

377. இந்த வஸ்திரத்தை என் எதிரே நான் தூக்கிப் பிடித்தால், நான் உங்களுக்கு அதிஸமீபமா யிருந்தும் நீங்கள் என்னைக் காணமாட்டீர்கள். அவ்வா றே கடவுள் எல்லாவற்றையும் விட உங்களுக்கு அதி ஸமீபத்திலே யிருந்தும் அஹங்காரமெனும் திரையால் மறைபட்டிருப்பதால் நீங்கள் அவனைக் காணமாட்டீர் கள்.

378. வினா:—நாங்கள் ஏன் இவ்வாறு கட்டுண் டிருக்கின்றோம்? நாங்கள் ஏன் கடவுளைக் காணமுடி யாது?

விடை:—ஜீவனுக்கு அஹங்காரமே மாயை. மா யையோ திருவருட் ப்ரகாசத்தை உட்புகவொட்டா

மல் தடுக்கின்றது. 'நான்' என்பது அழிந்தால், எல்லா கஷ்டங்களும் ஒழியும். கடவுளின் திருவருளால் "நான் அகர்த்தா" என்ற பாவனை எவனுடைய ஹ்ருதயத்திலே ஸ்திரமாய் ஊன்றிவிடுகின்றதோ, அவன் இப்பிறவியிலேயே முக்தனாகின்றான். இனி யவனுக்குப் பயமே யில்லை.

**மாயையால் மயங்கியவர் 'நானே எல்லாம்' என்கின்றனர்.**

379. புகழைத் தேடுகின்றவர்கள் மாயைக் குட்பட்டவர்களாவார். எல்லாம்வல்ல இறைவனாகிய முழுமுதற் கடவுளாலேயே யாவும் நடைபெறுகின்றன வென்பதையும், அவனன்றி யோரணுவு மசையாதென்பதையும் அவர்கள் மறந்துவிடுகின்றனர். "ஸர்வ நியாமகனாய் இருப்பது நீயே, ஈசா, நீயே யாவும்" என்றெப்பொழுதும் ஞானிகள் கூறுகின்றனர். மாயையில் மயங்கிய அஞ்ஞானிகளோ "நான்தான், நான்தான்" என்று கழறுகின்றனர்.

380. "எனக்குத் தெரியும்" "எனக்குத் தெரியாது" என்று நீ சொல்லிக்கொண்டிருக்கிறவரையில், நீ அஹங்காரத்துடன் கூடியவனே. பரதேவதையாகிய என் அருமைத்தாய் சொல்வதென்னவெனில்:—"எல்லாவிதமான அஹங்காரத்தையும் உன்னிடத்தினின்று நான் ஓட்டுங் காலையில்தான் என் அவ்யக்த ஸ்வரூபத்தை ஸமாதியில் அநுபவித் தறிவாய்." அதுவரையிலும் 'நான்' எனும் அகந்தை உன்னிலும் உன்னெதிரிலும் இருக்கவே இருக்கும்.

381. ஸ்ரீ சங்கராசார்யரிடத்தில் ஒரு சிஷ்யன் வெகு காலமாகத் தொண்டு புரிந்து வந்தும் அவனுக்கவர் யாதோருபதேசமும் செய்யவில்லை. ஒரு ஸமயம் சங்கரர் தனிமையாய் உட்கார்ந்திருக்கையில் யாரோ ஒருவர் பின்னால் வரும் காலடியரவத்தைக் கேட்டு, "யாரங்கே?" என்றார். சிஷ்யன் "நான்தான்" என்று விடை பகர்ந்தான். அதற்கு ஆசாரியர், "உனக்கு 'நான்' எனும் சொல்லில் அவ்வளவு ஆசையிருந்தால் அதை யெல்லையின்றி விரியும்படியாவது செய், அதாவது, ஸர்வமும் நீயென்றுணர், அல்லது, அதை யடியோடேயாவது ஒழித்துவிடு" என மொழிந்தார்.

## அஹங்காரத்தை யழிக்கும் விதம்.

382. வினா:—அஹங்காரத்தை யெவ்வாறு அழிக்கலாம்?

விடை:—அதை யழிப்பதற்கு இடைவிடாத அப்யாஸம் வேண்டியிருக்கின்றது. நெல் குத்தும்பொழுது உமிநீங்கி அரிசி வெளிப்பட்டதா வென்று அடிக்கடிப் பார்த்துக்கொண்டே யிருக்கவேண்டும்; அரிசி வெளிப்படாவிடில், உமி நீங்கும் வரையில் குத்திக்கொண்டே யிருக்கவேண்டும்.

383. ஸூக்ஷ்மமாகிய தராசிலே தங்கம் வைரக்கல் முதலிய விலையேறிய பொருள்களை நிறுக்கும்பொழுது, அடிக்கடித் தராசை யசைத்துத் தராசுமுள் நடுமையத்தில் வந்திருக்கின்றதா வென்று பார்க்கவேண்டியதுபோல், மனிதனும் தனது அஹம்பாவம் அழிந்து

போய்விட்டதா என்று தன்னை யடிக்கடிப் பரிசீலித்துப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

384. அஜீர்ண ரோகிக்குப் புளிப்புப் பதார்த்தங்கள் கெடுதி செய்யுமென்று தெரிந்திருந்தும், வாஸநா பலத்தினால் அவற்றைப் பார்க்கும்பொழுதே அவனுடைய நாக்கில் நீர் ஊறுகின்றது. அதுபோலவே அஹங்கார மமகாரங்களை யடக்க ஒருவன் எவ்வளவு முயன்றபோதிலும், கார்யாவஸரத்தில் அவ்வஹங்காரத்தின் ஸ்வரூபம் வெளிப்படுகின்றது.

அஹங்காரத்தை ஈசனுக்கடிமை யாக்குதல்.

385. இவ் அஹங்காரத்தை யொழிப்பது அஸாத்தியமென்று உனக்குத் தோன்றில், அது தாஸபூத அஹங்காரமா யிருக்கட்டும். "நான் எம்பெருமானுடைய தாஸன், நான் அவனது பக்தன்" என்று சொல்லுகிற "நான்" எனும் அஹங்காரத்தினால் அதிக துன்பம் விளையாது. தித்திப்புப் பதார்த்தங்கள் அஜீர்ண ரோகத்தை விருத்திப்படுத்துகின்றனவே யன்றி, யாதொரு கெடுதியும் செய்யாத கற்கண்டு அத்தகைய தித்திப்புப் பதார்த்தங்களிற் சேர்ந்ததன்று.

386. தாஸன், பக்தன், குழந்தை ஆகிய இவர்களது 'நான்' எனும் பாவனையானது நீரின்மேல் கோலால் கிழிந்த கோட்டைப் போல நீடித்து நிற்பதில்லை.

387. 'நான்' எனும் பாவனையை யொருவன் விசாரணை செய்து அஃதின்னதென்று கண்டுபிடிக்க முயல்வானாயின், அஃது அகந்தையைக் காட்டும் ஒரு பொ

ல்லை யன்றி வேறில்லை யென்றறிவான். அதை யொழிப்பது மஹா கஷ்டம். அப்பொழுதுதான் அவன், "பொல்லாத அகந்தையே, நீ எவ்விதத்தும் ஒழிந்து போக மாட்டாயாயின், கடவுளுக்குத் தொண்டு பூண்டிரு" என்கின்றான். இதுதான் பக்வமான அகந்தை யென்பது.

388. நீ பெருமை பாராட்ட வேண்டுமானால், கடவுளுக்குத் தொண்டனா யிருப்பதில் பெருமை கொள்ளு. ஸாதுக்களாகிய பெரியோர் குழந்தையைப் போன்றவர்கள். அவர்கள் கடவுளின் முன்பாக எப்பொழுதும் குழந்தைகளே யாதலால், அவர்களுக்கு அஹங்காரமே கிடையாது. அவர்களது பலமெல்லாம் கடவுளினுடையதே. அவர்களதென்பது ஒன்றுமில்லை.

### ஜீவஸங்கல்பத்தை ஈச்வரஸங்கல்பத்தில் லயிக்கச் செய்தல்.

389. ஸர்வமும் பகவத் ஸங்கல்பத்தாலேயே நடக்கிற தென்றும், தான் அவரது கரத்தில் ஒரு கருவி மாத்திர மென்றும் ஒருவனுக்கு எப்பொழுது திடவிச்வாஸம் உண்டாகின்றதோ, அப்பொழுதே அவன் ஜீவந்முக்தனாய்விடுகின்றான். "இக் கருமங்களை நான் செய்கின்றேன்" என்று ஸாதாரண ஜநங்கள் சொல்லுகின்றார்கள். ஆனால் இக் கருமங்களெல்லாம் உன்னுடையவையே, நீயே யவற்றைச் செய்கின்றாய்.

390. உனது அஹங்காரம் அழிந்துபோய், நீ பிரஹ்மத்தில் லயிக்கும்பொழுதுதான் உனக்கு முக்தி கைகூடும்.

391. ஸச்சிதாநந்த ஸ்வரூபமே ஜீவாத்மாவின் நிஜலக்ஷணம். அஹங்காரத்தினால் ஜீவாத்மா இத்தனை உபாதிகளை யடைந்து தன் நிஜஸ்வரூபத்தை மறந்திருக்கின்றான்.

392. உன்னை நீ யறிவாயானால், பிறகு அநாத்மாவையும் ஸர்வாத்மாவாகிய பகவானையும் அறிவாய். என் ஆத்மா என்பதென்ன? அஃது என்கையா, காலா, மாம்ஸமா, ரத்தமா, அல்லது தசையா, நரம்பா? இதை நீ ஆழ்ந்து விசாரிப்பாயாகில் 'நான்' என்பதே கிடையாதென்று தெளிவாய். வெங்காயத்தின் புரைகளை ஒவ்வொன்றாய் உரித்துக்கொண்டு செல்லச்செல்ல, மிகுந்திருப்பது ஒன்று மில்லாமைபோல், 'அஹம்' என்பதைச் சோதித்துக்கொண்டேபோனால் அதற்காதாரமாயிருக்கும் உண்மைப் பொருள் ஒன்றும் இலதாகின்றது. இத்தகைய பரிசோதனைகளெல்லாம் கடைசியிற் கடவுளிலேயே வந்து முடிகின்றன. அஹங்காரம் போய்விடும்பொழுது பிரஹ்மஸ்வரூபம் ஸ்வயம்பிரகாசமாய் ஜ்வலிக்கின்றது.

### அஹங்காரம் முழுவதும் ஒழிந்துபோமா?

393. வினா:—அஹங்காரம் ஒருகாலமும் முழுவதும் ஒழிந்து போகாதா?

விடை:—தாமரையின் இதழ்கள் காலக்கிரமத்தில் விழுந்துபோனபோதிலும், அவற்றின் அடையாளங்கள் மாத்திரம் போவதில்லை. அதுபோலவே அஹங்காரமும் அடியோடே போய்விட்டபோதிலும், அது முன்னிருந்த அடையாளங்கள் மாத்திரம் அப்படியே

யிருக்கின்றன. ஆனால் அவற்றால் யாதொரு கெடுதியும் விளைவதில்லை.

394. உள்ளிப்பூண்டு ரஸம் வைத்திருந்த கிண்ணத்தை ஆயிரந்தடவைதான் தேய்த்துக் கழுவினாலும் அதன் துர்க்கந்தம் மாத்திரம் போவதில்லை. அஹங்காரமென்பதும் அத்தகைய முரட்டு வஸ்துவானமையால், அஃது எப்பொழுதும் நம்மை முற்றிலும் விட்டுப் போவதில்லை.

395. தென்னமரத்தின் பாளைகள் விழுந்துவிட்டாலும் மரத்தில் அவைகள் இருந்த அடையாளங்கள் அப்படியே யிருக்கின்றன. அதுபோலவே ஒருவன எவ்வளவுதான் ப்ரஹ்மாநந்தாநுபவ முள்ளவனாயிருப்பினும், சரீர முள்ளவரையில் அஹங்காரத்தின் அடையாளம் இருந்தேதீரும். ஆனால் இவ்வஹங்காரம் அம்மனிதனை உலகத்திற் கட்டுப்படுத்தாது; மறுபிறப்புக்குங் காரணமாயிராது.

396. மனிதனுக்கு இரண்டுவித அஹங்காரங்கள் இருக்கின்றன. ஒன்று பக்வமானது, மற்றொன்று பக்வமாகாதது. "யாதும் என்னுடையதன்று; நான் காண்பதும் உணர்வதும் கேட்பதும்,—அவ்வளவேயன், இந்தச் சரீரமே என்னுடையதல்ல. நான் எப்பொழுதும் நித்யன், முக்தன், ஸர்வஜ்ஞன்" என்ற பாவனையையுடையது பக்வ அஹங்காரம். பக்வமாகாத அஹங்காரமோ "இது என் வீடு, என் குழந்தை, என் மனைவி, என் தேஹம்" என்றிவ்வாறு கருதுகின்றது.

397. பக்வமான அஹங்காரத்திற்கு தாஸனது அஹங்காரமென்றும், வித்யா அஹங்காரமென்றும் பெயர்.

398. வினா:—விஷம அஹங்காரமென்று எதற்குப்பெயர்?

விடை:—"என்னையவர்கள் அறியமாட்டார்களா? எனக்கு இவ்வளவு பணம் இருக்கிறதே; என்னைப்போல் பணக்காரன் எவன் இருக்கிறான்? என்னைமிஞ்சிப்போக யாரால் முடியும்?" என்று சொல்லும் அஹங்காரமே விஷம அஹங்காரம்.

399. அஞ்ஞானத்தால் உண்டாகும் அஹங்காரமே தமோகுண லக்ஷணம்.

எல்லாம் உன்னுடைமையே.

400. நான் எப்பொழுது முக்தனாவேன்? 'நான்' போய்விட்டபொழுதுதான். நான், எனது என்பதே அஞ்ஞானம். நீ, உனது என்பதுதான் மெய்ஞ்ஞானம். மெய்யன்புள்ள பக்தன், "ஈசா, நீயொருவனே கர்த்தா, நீயே அனைத்தையுஞ் செய்கின்றாய், அடியேன் உன் கையில் கருவிமாத்திரமாயுள்ளவன். நீ ஏவுகின்றதையெல்லாம் நான் செய்கிறேன். இவையெல்லாம் நின் பெருமையே. இவ்வீடும் பரிஜனமும் உன்னுடையவையே. என்னுடையவையல்ல. நீ எப்படி விதிக்கின்றனையோ அப்படி நடப்பதற்கு மாத்திரந்தான் எனக்கதிகாரம்" என்று எப்பொழுதும் கூறுகின்றான்.

401. "இந்த ஸம்ஸார விசாரங்களெல்லாம் என்னுடையவையல்ல. கடவுளைச் சேர்ந்தவையே. நான்

அவரது கட்டளைப்படி நடக்கவே இங்கே வந்திருக்கின்றேன்" என்று எப்பொழுதும் நினைக்கவேண்டும். இவ்வெண்ணம் நிலையூன்றிவிட்டால், பிறகு ஒருவனுக்குத் தன்னதென்று சொல்லக்கூடியது ஒன்று மிராது.

402. ஒரு பணக்காரனுடைய குடும்பத்திலேயுள்ள தாதியானவள் தன் எஜமானுடைய குழந்தையைத் தன் குழந்தையைப்போலவே ஆசையுடன் வளர்த்துவந்தபோதிலும், அக் குழந்தை தனக்குச் சொந்தமன்றென்பதை நன்றாய் அறிந்திருப்பதுபோல் உங்கள் குழந்தைகளுக்கும் நீங்கள் வெறும் தர்மகர்த்தர்களும் போஷணைகர்த்தர்களுமேயென்றும், அவற்றின் நிஜமான பிதா கைவல்ய நாதனாகிய கடவுளேயென்றும் எண்ணக்கடவீர்கள்.

403. பகவானுடைய முகமண்டலத்திலே மந்தஹாஸம் (புன்சிரிப்பு) தவழுங்காலம் இரண்டு. ஒன்று, ஸஹோதரர்கள் குடும்ப சொத்துக்களைத் தமக்குள் இது என்னுடையது, என்று பிரிவினை செய்து பாகித்துக்கொள்ளும்பொழுதும்; மற்றொன்று, நோயாளி உயிரை விடும் தறுவாயில் வைத்தியன் வந்து "நான் அவனைச் சொஸ்தப்படுத்திவிடுகிறேன்" என்று சொல்லும்பொழுதுமாம்.

### ஜாதிபேதம்

404. வினா:—பூணூலைப் போட்டுக்கொள்ளாமலிருப்பது நியாயமா?

விடை:—ப்ரஹ்மஜ்ஞானம் கைகூடும்பொழுது, சகல பந்தங்களும் தாமாகவே விழுந்துவிடுகின்றன. அப

பொழுது ப்ராஹ்மணனுக்கும் சூத்ரனுக்கும் உயர் குலத்தானுக்கும் இழிகுலத்தானுக்கும் பேதம் இல்லை. அந்த நிலையிலே ஜாதியின் சின்னமாகிய பூணூல் தானாகவே விழுந்துவிடுகின்றது; ஆனால் ஒருவன் பேதமும் வித்யாஸமும் பாராட்டிக்கொண்டிருக்கும் வரையில் அதை வலியிலே பிய்த்தெறிந்துவிடக்கூடாது.

415. தானாகவே பழுத்து விழுகிற பழம் அதிக ருசியாயிருக்கும். பழுக்காத காயைப்பறித்துப் பின்னர் அதைப் பழுக்கவைத்தால், தானாய்ப் பழுத்த பழம்போல் அவ்வளவு ருசியாயில்லாமல் சுருங்கிப் போகின்றது. அதுபோலவே ஸர்வமும் ப்ரஹ்மமயம் என்ற அநுபவம் ஒருவனுக்கு உண்டாகும்போது தான் ஜாதிபேதம் அனாவச்யமேயன்றி, அதற்கு முன் அன்று; ஆனால் இந்த உத்தமமான நிலைமையை அடையாதவரையில் உயர்வு தாழ்வு என்கிற பேதத்தை யொழிக்க ஒருவராலும் ஆகாதாகையால் ஒவ்வொருவரும் ஜாதியாசாரங்களை அநுஷ்டிக்க வேண்டும்.

416. ஒருகால் ஒருமாணாக்கன் ஸ்ரீராமக்ருஷ்ண பகவானை நோக்கி, "ஒரே ஹரியானவர் ஸர்வஜீவகோடிகளிலும் வ்யாபித்திருக்க யார் கையிலிருந்து அன்னத்தை வாங்கிப் புஜித்தாலும் தோஷமென்ன?" என்று கேட்க, பகவான் அவனை, "நீ ப்ராஹ்மணனோ?" என்று கேட்டார். அவன் "ஆமாம்" எனவும், பகவான்: "ஆகையினால்தான் நீ என்னை அந்தக்கேள்வி கேட்டாய். நெருப்பைமூட்டி அதன்மேல் ஒருசுமை விறகைப்போட்டால், நெருப்பின் கதி என்னவாகும்?" என, மாணாக

413. மனிதன் தலையணையுறைப் போன்றவன். ஓர் உறை சிவப்புநிறமாயும், மற்றொன்று நீலநிறமாயும் பிறிதொன்று கறுப்பு நிறமாயு மிருந்தபோதிலும், அவற்றினுள்ளே இருப்பது மாத்திரம் ஒரே பஞ்சு தான். அதுபோலவே ஒரு மனிதன் அழகாயும், மற்றொருவன் கறுப்பாயும், வேறொருவன் பரிசுத்தனாயும், இன்னொருவன் துஷ்டனாயு மிருந்தபோதிலும், அவர்களெல்லாருள்ளும் இருப்பது ஒரே பரப்ரஹ்மமாம்.

414. ஸர்வமும் நாராயணஸ்வரூபம். மனிதனாயினும் ஜந்துவாயினும் புண்ய புருஷனாயினும் போக்கிலியாயினும் அகிலப்ரபஞ்சமும் நாராயண ஸ்வரூபமேயாம்.

415. "கடிக்கும் காளஸர்ப்பமும் நானே, கடியையாற்றும் மாந்த்ரிகனும் நானே. தண்டனை விதிக்கும் ந்யாயாதிபதியும் நானே. கசையடியடித்து அத்தண்டனையை நிறைவேற்றுவோனும் நானே" என்று கடவுள் கூறுகின்றார்.

416. கடவுள் திருடனைத் திருடப்போகும்படி ஏவிவிட்டு, வீட்டுக்காரர்களையும் ஜாக்கிரதையா யிருக்கும்படி எச்சரிக்கின்றார்.

417. நீரிலே வைக்கப்பட்ட குடத்தின் உள்ளும் புறமும் நீர் நிறைந்திருக்கின்றது. அவ்வாறே பகவத் ஸ்வரூபத்தில் ஆழ்ந்தவர்கள் எங்கும் நிறைந்த பொருளை உள்ளும் புறமும் காண்கின்றனர்.

### பாபத்தைப் போக்கும் விதம்.

418. வினா:—நமக்குள்ளிருக்கும் பாபத்தைப் போக்கடிப்பதெப்படி?

விடை:—பூவினின்றும் காய் வெளிப்படும் பொழுது இதழ்கள் தாமாகவே விழுந்துவிடுகின்றன. அது போலவே உன்னிடத்திலுள்ள திவ்யாத்மஸ்வரூபம் விரிந்து ப்ரகாசிக்கும்பொழுது, உனது பாபஸ்வபாவம் தானாகவே ஒழிந்துபோகும்.

419. தெய்வத்தன்மை உதயமாகுமுன் மனிதத் தன்மை யழியவேண்டும். இத்தெய்வத்தன்மையும் ஆநந்தமயமான அன்னையின் திவ்யரூப தர்சனத்தின் முன் மடியவேண்டியதே. மடிந்த தெய்வத்தன்மையின் வடிவமாகிய பரமசிவனது மார்பின்மேலன்றோ ஆநந்தத்தாய் அற்புதநடனம் புரிகின்றாள்.

### அன்பு.

420. ஒரு மட்பாண்டம் நிறைய நீரை வார்த்து அதனை ஒரு மாடத்தில் வைத்தால், அதிலுள்ள நீர் சில திநங்களுக்குள் வற்றிப்போகும். ஆனால் அதைத் தண்ணீரிலேயே அமிழ்த்திவைத்திருந்தால், அதில் எப்போதும் நீர் நிறைந்திருக்கும். ஈசனிடத்தில் உனக்குள்ள அன்பும் அவ்வாறுதான். சிறிது நேரம் உன் மநத்தை ஈசனது அன்பால் நிறைத்துப் பிறகு அவரை முழுதும் மறந்து வேறு விஷயங்களில் புத்தியைச் செலுத்துவாயாகில், முன்னிருந்த அருமையான அன்பு உன் மநத்தைவிட்டு நீங்க, அம்மநம் 'காலி' யாகி வருமை.

யடைந்ததாகும். அப்படியின்றி உன் மனத்தை ஸதா ஈச்வர பக்திஸாகரத்திலேயே அமிழ்த்திவைத்திருப்பாயாகில், அஃது எக்காலமும் அன்பெனும் வாரியால் நிறைந்து ததும்பிக்கொண்டிருப்பது நிச்சயம்.

421. அன்புள்ள நண்பனே, நான் இவ்வுலகத்தில் இருக்க இருக்க, பக்திப்ரேமைகளின் விசித்ர ரஹஸ்யங்களை திநமும் அதிகமாய் அறிந்துகொள்கின்றேன்.

422. வி௵:—பகவானிடத்தில் வைக்கும் அன்பு எவ்விதமா யிருக்கவேண்டும்?

விடை:—உண்மையான பதிவ்ரதை தன் புருஷனைக் காதலிப்பது போலவும், ஒருகாசும் செலவழிக்காத உலோபி தான் சேர்த்துவைத்த செல்வத்தை நேசிப்பது போலவும், பக்தனானவன் த்ரிகரண சுத்தியாய்ப் பகவானிடத்தில் அன்பாயிருக்க வேண்டும்.

423. வி௵:—புஸ்தகங்களைப் படிப்பதால் பகவத்பக்தி யுண்டாகுமா?

விடை:—பஞ்சாங்கங்களிலே, தேசம் முழுவதும் இன்னின்ன காலத்திலே இவ்வளவு மழைபெய்யும் என்று வருஷாதிபலன் முன்னடியாகவே கூறப்பட்டிருக்கிறதல்லவா? ஆனால் மழையைப்பற்றி அவ்வளவு சொல்லப்பட்டிருக்கும் பஞ்சாங்க புஸ்தகத்தைக் கசக்கிப் பிழிந்தால் ஒருசொட்டு மழையாவது கிடைக்குமா? அதுபோலவே பரிசுத்தமான மதநூல்களிலே எவ்வளவோ நல்லுபதேசங்கள் இருந்தபோதிலும் அவற்

றைச் சும்மா படிப்பதால் மாத்திரம் ஒருவன் ஞாநியாக மாட்டான். பகவத்பக்தி யுண்டாகவேண்டுமாயின், அந் நூல்களிற் கூறப்பட்டவைகளை அநுஷ்டிக்கவேண்டும்.

424. பகவானையும், அவரது பெருமையை யுரைக்கும் பாகவதத்தையும், அவருக்குத் தொண்டு பூண்டொழுகும் பாகவதர்களையும் ஒன்றென, அதாவது, ஸமாந கௌரவத்துக் குரியவரெனக் கருதவேண்டும்.

425. வினா:—உண்மையான பக்தன் பகவானை யெவ்வாறு பாவிக்கின்றான்?

விடை:—ப்ருந்தாவநத்துக் கோபிகாமணிகள் கண்ணனை ஜகந்நாதனெனக் கருதாமல் தங்கள் அன்பார்ந்த ஆசைக் கண்மணியான கோபீநாதனென்றே பாவித்ததுபோல், உண்மையான பக்தனும் பகவானைத் தனக்கு நெருங்கின ஆசாபாசமுள்ள பந்துவெனப் பாவிக்கிறான்.

**கடவுளைக் காதலிக்கும் அன்பன்.**

426. வினா:—பகவானைத் 'தாயே' என்று கூவி யழைப்பதில் பக்தனுக்கு அவ்வளவு ஆநந்த பரவசம் உண்டாவதற்குக் காரணமென்ன?

விடை:—குழந்தை தாயினிடத்தில் அதிக சுதந்திரமாயும் தாராளமாயும் இருக்கிறபடியால், மற்றவர்களைப் பார்க்கிலும் தாயானவள் குழந்தையினிடத்தில் அதிக ஆசையாயிருப்பதே அதற்குக் காரணம்.

427. ஒரு ஸமயத்தில் தார்க்கிகன் ஒருவன் ஸ்ரீராமகிருஷ்ணரை, "ஞாநம் * என்பதென்ன? ஞாத்ரு † என்பதென்ன? ஞேயம் ‡ என்பதென்ன?" என்று

* அறிவு. † அறிவோன். ‡ அறிபடுபொருள்.

விறைவ, பரமஹம்ஸர், "அப்பா, இந்த சாஸ்த்ர மர்மங்களெல்லாம் எனக்குத் தெரியா. தேவதேவியாகிய அம்மையே என் அருமைத்தாயென்றும் அவளுக்கு நான் மகனென்றும் இவ்வளவுதான் எனக்குத் தெரியும்" என்றார்.

428. வினா:—கடவுளைக் காதலிக்கும் அன்பன் அவர்பொருட்டு அகிலமெல்லாம் ஏன் துறந்துவிடுகின்றான்?

விடை:—விட்டிற்பூச்சி விளக்கைக் கண்டபிறகு இருளைநோக்கி ஒருபோதும் திரும்பிவாராது. எறும்பானது சர்க்கரைக் குவியலிலேயே சாகுமேயன்றி அதை விட்டுப்போவதில்லை. அதுபோலவே, கடவுளைக் காதலிக்கும் அன்பனும் ப்ரஹ்மானந்தத்தை யடையும் பொருட்டு தன் உயிரையே ஸந்தோஷமாய் விட்டுவிடுவதால், மற்றெதுவும் அவனுக்கு லக்ஷ்யமில்லை.

429. சிலருக்கு ஒரு சிறு 'க்ளாஸ்' சாராயம் குடித்த மாத்திரத்திலேயே குடிமயக்கம் உண்டாய் விடுகின்றது. சிலருக்கு இரண்டு மூன்று 'புட்டி' குடிக்க கால்தான் மயக்கம் உண்டாகும். ஆனால் இவ்விரு வகையாரும் அநுபவிக்கும் மயக்கவின்பம் மாத்திரம் பூரணமாயும் ஸமானமாயுந்தான் இருக்கிறது. அதுபோலவே சிலருக்குப் பரஞ்சோதியின் ஒளி அணுமாத்திரம் பட்டபொழுதே ஆநந்த பரவச முண்டாகிவிடுகின்றது. மற்றுஞ் சிலருக்கோ, எல்லாம் வல்ல இறைவனே ப்ரத்யக்ஷ மானால்தான் பேரின்பப் பரவசம் உண்டாகும். ஆனால் இவ்விருவகையாருக்கும் கிடைக்கும் அதிஷ்டமும் ஆநந்தமும் மாத்திரம் ஸமானமேயாகும்.

430. அன்பு தரும்பும் பேரின்பவாரியை விடாய் தீரப் பருகினவன் வெறிக்கக் குடித்தவனைப் போலவே இருக்கின்றமையால், உசிதம், அநுசிதம் என்னும் கட்டுப்பாடுகளை அவன் எல்லா ஸமயங்களிலுங் கவனிப்பதில்லை.

431. சர்க்கரைமலைச் சொறியச் சொறிய நமைச்சல் அதிகமாகி மீண்டும் சொறிவதால் அதிக ஆநந்தம் உண்டாவதுபோல், மெய்யன்பர்கள் எம்பெருமான் பெருமைகளை ஒருமுறை பாடத் தொடங்கிவிட்டால், பின்னர் எப்போதும் அலுப்பு சலிப்பின்றி, அதே ரீதியாய் எத்தனை நாழிகையானாலும் பாடிக்கொண்டேயிருப்பார்கள்.

மெய்யன்பர்களின் கூட்டுறவு.

432. வினா:—கடவுளின் மெய்யன்பன் ஏகாங்கியிருப்பதற்கு ஏன் இச்சிப்பதில்லை?

விடை:—'கஞ்சா' குடிக்கிறவன் ஸகாக்களின்றி தனியே குடிக்க விரும்புவதில்லை. அதுபோலவே மெய்யன்பனும் மற்றோர் தவனது திருநாமத்தையும் பெருமைகளையும் ஏகாங்கியாய்ப் பாடுவதிற் களிப்படைவதில்லை.

433. ஒரு ஸ்திரீ தான் திநமும் தன் புருஷனுடன் செய்யும் ஸரஸஸல்லாபங்களையெல்லாம் பிறருக்குச் சொல்ல ஸஹஜமாய் லஜ்ஜைப்படுகின்றாள். அவற்றை அவள் ஒருவருக்கும் எப்பொழுதும் சொல்வதில்லை; சொல்லப் பிரியப்படுவதுமில்லை. எப்படியா

பொய்யன்பனது அன்பு அணைந்தது

435. வினா:—பொய்யன்பர்களின் ஆத்ம விசாரத்துக்கும் தர்ம சிந்தைக்கும் முடிவே யில்லாமலிருப்பதற்குக் காரணமென்ன?

விடை:—ஒரு பணக்காரனுடைய கஜாநியத்தி லின்று நாணயம் வாங்குகின்றவனுக்கு, நாணயம் அளந்து கொடுக்கின்றவன் தன் இடத்தைவிட்டு எழுந்திருக்காமலே, வேலைக்காரி கஜாநியத்திலிருந்து நாணயங் கூடை கூடையாய் வாரிக் கொடுத்துக்கொண்டிருக்கும் நாணயத்தைச் சலியாமல் அளந்து போட்டுக்கொண்டே யிருக்கின்றான். ஆனால் ஸாமான்யமான சில்லறை வர்த்தகனுக்கோ, அத்தனை வேலைக்காரர்களுமில்லை; அப்படிப்பட்ட வடியாத கஜாநியமும் கிடையாது. அது போலவே, பகவானே தமது மெய்யன்பர்களின் மனத்திலே உதிக்கும் புதிய கருத்துக்களையும் தர்ம சாதனைகளையும் தமது பேரருளால் ஸங்கல்பிக்கின்றார். மற்ற நூல்களின் அருள் மாத்திரம் பெற்ற ஸாமான்யப் புலவர்களோ, சீக்கிரத்தில் செலவழிந்துபோகும் சரக்குள்ள சில்லறை வர்த்தகர்களைப் போன்றிருக்கின்றனர்.

436. பிரேமை என்பது அன்பு. அது தன்னயமற்றது (ஸமார்த்தா), அபேக்ஷையானது (ஸாமஞ்ஜஸா), தன்னய முள்ளது (ஸாதாரணீ) என மூவகைத்து. இவற்றுள் தன்னயமற்ற அன்பாகிய ஸமார்த்த பிரேமையே உத்தமமானது. அத்தகைய அன்புள்ளவன் தனது சுகதுக்கங்களைச் சிறிதேனும் பாராட்டா

மல் தன் அன்பிற்குரியவனது க்ஷேமத்தையே விரும்புவான். அஹேதுகப்ரேமையாகிய ஸாமஞ்ஜஸப்ரேமையுள்ளவன், தன் சுகத்தையும் பார்த்துக்கொண்டு தன் அன்பிற்குரியவன் சுகத்தையும் விரும்புகின்றான். இது மத்யமம். தன்னையுமுள்ள அன்பாகிய ஸாதாரண ப்ரேமையோ எல்லாவற்றிலும் அதமமானது. அவ்வதம அன்புள்ளவன் தன் அன்பிற்குரியவன் சுகித்தாலும் சரி, அசுகித்தாலும் சரி, தான் சுகம் அடைவதையே பார்ப்பான்.

437. சக்கிமுக்கிக்கல் கோடி வருஷம் நீருக்குள்ளே இருந்தாலும், அதற்குள் இருக்கும் நெருப்பு அதைவிட்டுப் போகாது. அதை எப்பொழுது எக்கிறால் அடித்தாலும் உடனே தீப்பொறி ஜ்வலித்துக் கொண்டு வெளிப்படுகின்றது. அதுபோலவே, மெய்யன்பனும் திடவிச்வாஸ முள்ளவனாகையால், உலகத்தின் அசுசிகள் ஆயிரம் அவனைச் சுற்றிக்கொண்டிருந்தாலும், அவன் பக்தியையும் விச்வாஸத்தையும் மாத்திரம் எப்போதும் விடமாட்டான்; எம்பெருமானது திருநாமத்தைக் கேட்டமாத்திரத்திலேயே ஆநந்த பரவசனாய்விடுவான்.

ஹரிநாமமும் த்யாநஸாதநங்களும்..

438. ஸ்ரீஹரியின் நாமோச்சாரணத்தினாலேயே எவன் ஆநந்தத்தால் மெய்மறந்து புளகாங்கிதனாகின்றானோ (மயிர்க்கூச்செறிகின்றானோ), எம்பெருமான் திருநாமத்தைக் கேட்டமாத்திரத்திலேயே எவனுக்கு அன்புநீர் ஆறாய்ப் பெருகுகின்றதோ, அவனுக்கு இப்பொழுதுள்ள பிறவியே கடைசியான பிறவியாம்.

439. ஹரி என்னும் பதம், ஹ்ரு=கவர், திருடு, என்ற வினையடியாகப் பிறந்தது. ஆகவே ஹரியென்றால், 'எம் உள்ளங்களைக் கவர்பவன்' என்று பொருளாகும். 'ஹரிபோல்' என்றால் ஹரிபலம், அல்லது ஹரியே எமது பலம் என்று பொருளாகும்.

440. ஸ்ரீஹரியின் பெருமைகளைப் பாடிப் பஜனம் செய்யும் இடத்திலே 'சைத்தான்' ஒருபோதும் ப்ரவேசிக்காது.

ஜபதபங்கள்.

441. "பித்தளைப் பாத்திரத்தைத் தினமும் தேய்க்காவிடின், அது துருப்பிடித்துப்போம். அதுபோலவே மனிதன் தினந்தோறும் ஈச்வரத்யானம் செய்யாவிடின் அவன் மனமும் அசுத்தமாய்விடும்" என்று தோதாபுரியென்னும் ஞானி உரைப்பது வழக்கம். அதைக்கேட்டுப் பரமஹம்ஸர், "ஆமாம், தங்கபாத்திரமா யிருந்தால் அதைத் தினமும் சுத்திசெய்ய வேண்டியதில்லை யல்லவா? அதுபோல், ப்ரஹ்மத்தை யறிந்தவனுக்கு ஜபதபங்கள் வேண்டியதில்லை" என்றார்.

442. வினா:—ஜபம் செய்வதில் யாதேனும் பலனுண்டா?

விடை:—மனமும் வாக்கும் ஒன்றுபட்டுப் பகவானை நோக்கி ஜபம்செய்தால் அஃது உடனே பலனளிக்கின்றது. ஆனால், "ஸ்வாமீ, இவையெல்லாம் உன்னுடையவையே" என்று வாயால் மாத்திரம் சொல்லிவிட்டு, ஹ்ருதயத்திலே, அவையெல்லாம் தன்னுடைய

சேருகின்றது. அதுபோல விசுவாசமுள்ளவன் திடசித்தமானது உலக துக்கங்களுக்கும் சங்கடங்களுக்கும் உட்பட்டு மங்கிப்போவதில்லை. அப்படி விசுவாசமுள்ளவனிடம் பிறர் சொற்ப காரணத்தாலும் தளர்ந்து போய்விடுகின்றனர்.

448. ரயிலியந்திரம் பாரம் நிறைந்த வண்டித் தொடரை வெகு சுலபமாய் இழுத்துக்கொண்டு செல்வதுபோல், கடவுளினிடத்தில் திடமான பக்தி விசுவாசமுள்ள அவரது அடியார்களும் லௌகீகத்தின் வளைந்த பாதைகளையும் யாதொரு கஷ்டமுமில்லாமற் கடந்து, தம்முடன் பிறரையும் பரம வஸதி ஸ்தானத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கின்றார்கள்.

449. வேகமாய் ஓடும் பிரவாஹ ஜலமானது சில விடங்களில் சிற்சுழல்களில் அகப்பட்டுக்கொண்டு சுற்றிச் சுற்றிவந்து, அவைகளைக் கடந்தவுடனே, முன்போலவே வேகமாய் நேராகச் செல்லுகின்றது. அவ்வாறே பக்தனுடைய மனதானதும் சிற்சில சமயங்களில் விசனம், துக்கம், நம்பிக்கையின்மையெனும் சுழல்களில் விழுந்தபோதிலும், அது க்ஷணகால மாத்திரமுள்ள தடங்கலேயன்றி நெடுங்காலம் நீடித்திருப்பதன்று.

450. கருமானின் பட்டடையின்மேல் சம்மட்டியால் எத்தனையடி அடித்தபோதிலும், அது சிறிதேனும் சலனமின்றி யிருப்பதுபோல், மனிதனும் எத்தனை சஞ்சலமும் தூஷணையும் வந்தபோதிலும் அவற்றையெல்லாம் பொறுமையாய்த் தாங்கக்கடவன்.

## விநயம்.

451. இரும்பை நல்ல எஃகாகச் செய்யவேண்டுமாயின் அதை யெத்தனையோ தடவை நன்றாய்க் காய்ச்சி செம்மட்டியால் பலதடவையும் அடிக்கவேண்டும். அப்பொழுதுதான் அஃது ஒரு கூர்மையான கத்தியாகச் செய்வதற்குத் தக்கதாகும்; எப்படி வேண்டுமானாலும் அதை வளைக்கலாம். அதுபோலவே மனிதன் சுத்தமாயும் விநயமுள்ளவனாயும் ஆக வேண்டுமாயின் அவன் பலமுறையும் இடுக்கண்களாகிய சூளையிலே காய்ச்சப்பெற்று இவ்வுலகத்தின் துன்பங்களாகிற செம்மட்டி யடிபட்டுத் தேறவேண்டும்.

452. ஊசியில் நூலைக் கோக்க வேண்டுமாயின், நூலை நுண்ணியதாய் முறுக்கி நுனியிலுள்ள தூசிமுதலானதை நீக்கிக் கோத்தால் ஊசியின் காதில் நூல் எளிதில் நுழையும். அதுபோலவே நின் இதயத்தைக் கடவுளின்மேல் நிறுத்த விரும்பினால், ஆசையை யறவொழித்து, சாந்தமாயும் விநயமாயும் ஸாதுவாயும் இருக்கக்கடவாய்.

453. பழங்கள் நிறைந்த மரம் எப்பொழுதும் தாழ வளைகின்றது. அதுபோலவே, நீ மேன்மை யடையவேண்டுமாயின் தாழ்மை யுள்ளவனாயும் ஸாதுவாயுமிரு.

454. மழைநீர் எப்பொழுதும் மேட்டில் தங்குதில்லாமல் பள்ளத்தை நோக்கி யோடுகின்றது. அதுபோலவே கடவுளின் கருணையானது கர்வமும் வீண் பெருமையும் உள்ளவர்களின் இதயங்களில் தங்கி நில்

லாமல் தாழ்மையானவர்களின் உள்ளங்களை நோக்கி யோடுகின்றது.

455. பாரமான தராசுத்தட்டு கீழேசாய, லேசானது மேலேலெழுகின்றது. அதுபோலவே, குணமும் சக்தியும் வாய்ந்தவன் எப்பொழுதும் தாழ்மையாயும் ஸாதுவாயுமிருக்க, மூடன் வீண்பெருமையால் அஹங்கரித்துத் திரிகிறான்.

### வீண்பெருமை.

456. வீண்பெருமை சாம்பற்குவியலுக்கு ஸமானமானது. சாம்பலில் நீர் சிந்தினால் உடனே உலர்ந்துபோய் விடுகின்றது. அதுபோல, வீண்பெருமையால் செருக்குற்றிருக்கிற இருதயங்களுக்கு த்யாநத்தாலும் ஜபதபங்களாலும் யாதொரு பயனும் உண்டாவதில்லை.

457. பெருங்காற்றின் முன் எறியப்பட்ட இலைபோல் வீண்பெருமையற்றிரு.

458. ஸாமாந்யரான எல்லாருடைய வீண்பெருமையும் படிப்படியாய் அழிந்துபோகும்; ஆனால், ஞானிக்குத் தான் ஞானியென்ற பெருமைமட்டும் எளிதில் ஒழிவது கடினம்.

459. ஏகாந்தமான ஒரு வநத்திலே ஒருவன் பதினான்குவருஷம் தவம்புரிந்த பின்பு, கடைசியில் நீர்மேல் நடக்கும் சக்தியைப்பெற்று மிகவுங் களிப்படைந்து, தன் குருவினிடஞ்சென்று "ஸ்வாமீ, நான் நீரின்மேல் நடக்கும் சக்தியைப் பெற்றுவந்திருக்கின்றேன்" என்று தெரிவித்தான். ஆசார்யர் அவனைக்கண்டித்து

"ஐயோ, பேதைமையே, பதினான்கு வருஷம் ப்ரயாஸப்பட்டதின் பலன் இதுதானா? நீ கற்ற வித்தை பைசாவுக்குமேல் பெறுமே. நீ பதினான்கு வருஷம் கஷ்டப்பட்டு ஸாதித்ததை ஸாதாரண மனிதர் படகுக்காரனுக்கு ஒருபைசா கொடுத்து முடித்துக்கொள்ளுகிறார்களே" என்றார்.

460. பரமஹம்ஸரது பாலஸிஷ்யன் ஒருவன் பிறர்கருத்தறியும் சக்தியைப்பெற்று அதனால் அதிகக் களிப்படைந்து தன் பெருமையைப் பகவானிடம் சொல்லிக்கொள்ள, அவர் அவனைக் கண்டித்து, "குழந்தாய், வெட்கமில்லையா உனக்கு? இவ்வற்ப விஷயங்களிலே உன் சக்தியை வீணாக்காதே" என்று கூறினார்.

திருவருள்.

461. ஒரு பக்தன் பகவந் நாமத்தை மௌனமாய் உச்சரித்துக்கொண்டு ஸதா ஜபமாலைமணிகளை எண்ணிக் கொண்டிருப்பது வழக்கம். அவனைப் பார்த்துப் பரமஹம்ஸர், "நீ ஏன் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்கிறாய்? வெளியே சென்று ஸஞ்சரிக்கலாமே" என்று கேட்டதற்கு, அந்த பக்தன், "அவன் அருளின்றி அவ்வாறு முடியாது" என்றான். அதற்கு பகவாந், "கடவுளின் திருவருளாகிய தென்றற்காற்று இரவும் பகலும் உன் தலைமேல் வீசிக்கொண்டிருக்கிறது. ஸம்ஸாரத்தினின்று சீக்ரம் கடைத்தேறவேண்டுமானால் உன் மநமாகிய படகின் கப்பற்பாயை யவிழ்த்து விரித்துவிடு" என்றார்.

462. கடவுளின் அருட்காற்று இடைவிடாமல் அடித்துக்கொண்டே இருக்கின்றது. இச் சம்ஸாரஸாகரத்திலே செல்லும் சோம்பேறிப் பிரயாணிகள் அதனாற் பயனடைகின்றார்களில்லை. சுறுசுறுப்பும் வல்லமையுமுள்ளவர்களோ, அநுகூலமான காற்றைப் பற்றிக்கொள்ளத் தங்கள் மநங்களாகிற பாயை விரித்துவிட்டுத் தங்கள் உத்தேச ஸ்தாநத்தை விரைவிற் போய்ச் சேருகின்றனர்.

463. இக்கலிகாலத்திலே ஒருவன் பூர்ணஞாநியாவதற்கு மூன்றே நாள் போதும்.

464. காற்றடிக்காதவரையில் வெப்பத்தைத் தணித்துக்கொள்ளும்பொருட்டு விசிறியால் விசிறிக் கொள்ளுகின்றோம். ஆனால் பணக்காரன், ஏழை என்ற வேற்றுமையின்றி எல்லாருக்கும் பொதுவாய்க் காற்றடிக்கும்போது விசிறிக்கொள்வதை விட்டுவிடுகின்றோம். அதுபோலவே ஈஸ்வராநுக்ரஹம் உண்டாகாதவரையில் உத்தமகதியை யடையவேண்டி, நாம் ஊக்கத்துடன் முயலவேண்டியவர்களே. ஆனால் அத்தகைய அநுக்ரஹம் அதிஷ்டவசத்தால் நமக்குங் கிடைத்துவிட்டால், அப்பொழுது எவ்வித முயற்சியும் வேண்டியதில்லை.

465. காற்றடிக்கும்போது விசிறியைத் தள்ளிவிட வேண்டியது. அதுபோல, பரமனது திருவருள் இறங்கி வரும்பொழுது ஜபதபங்களை த்யஜிக்கவேண்டும்.

## விடாமுயற்சி.

466. பரம்பரையாய்ப் பயிரிடுங் குடியானவன், பன்னிரண்டு வருஷம் சேர்ந்து மழைபெய்யாமலிருந்தாலும், நிலத்தை யுழுவதை நிறுத்தமாட்டான். புதிதாக உழவு தொழிலைக் கைக்கொண்ட வர்த்தகனோ ஒரு காலமழை பெய்யாது போகும்போதே அதைரியம் அடைந்துவிடுகின்றான். அதுபோலவே, ஆயுட்காலபர்யந்தம் பக்திசெய்து பகவானைக் காணாவிடினுங் கூட உண்மையான பக்தன் ஒருகாலும் அதைரியமடைவதில்லை.

467. நன்றாய் நீந்தக் கற்றுக்கொள்ளவேண்டுமானால் [illegible] அதுபோலவே [illegible] பலமுறை [illegible] ருவன் ஞானம் அடைவதற்கு அதிகாரியாவதொழிய, பரப்ரஹ்மானந்த ஸாகரத்திலே சாந்தமாய் நீந்தும் ஸுகத்தை உடனே அநுபவிக்க முடியாது.

468. [illegible] திசைகாட்டுங் கருவி வடக்குதிசையே காட்டிக்கொண்டிருக்கும் வரையில் கப்பல் வழிதப்பிப்போகுமென்ற பயமே இல்லை. அதுபோலவே ஸம்ஸாரமாகிய மரக்கலத்தின் திசைகாட்டும் முள்ளாகிய மநமும் சிறிதேனும் சலிக்காமல் எப்பொழுதும் பரப்ரஹ்மத்தையே நோக்கி நிற்கும் பக்ஷத்தில், எவ்வித அபாயத்தையும் நிர்ப்பயமாய் எதிர்த்து நிற்கலாம்.

விடை:—எம்பெருமானுக்கே எல்லாவற்றையும் அர்ப்பணம்செய்துவிட்டு உன்னையும் அவனது கையிலேயே ஒப்புவித்துவிடுவாயாகில், அதுமுதல் உனக்கு எக்காலமும் துன்பம் வாராது. அப்பொழுதுதான் எல்லாம் அவனது ஸங்கற்பத்தின்படி நடக்கிறதென்பதையறிந்துகொள்வாய்.

474. பகல்மா என்னும் மார்க்கத்தைவிட அதிக பத்திரமும் ஸுலபமுமானவழி பிறிதொன்று கிடையாது. பகல்மா என்றால் தன்னையே ஈஸ்வரார்ப்பணம் செய்துவிட்டு 'எனது' என்று தனக்குச் சொந்தமாய்க் கருதக்கூடியது எதுவுமில்லையென்றுணரும் உணர்ச்சியேயாம்.

475. உலகத்தில் இருப்பதும் அதை விடுவதும் ஈஸ்வர ஸங்கல்பாதீநம். ஆகையால் ஸகலபாரத்தையும் அவர் மேற்போட்டுவிட்டு அவரது கைங்கர்யத்தைச் செய்வதே உன் கடமையாகும். அதையன்றி நீ வேறென்ன செய்யக்கூடும்.

476. ஒன்றெனும் (1) எண்ணுக்குப்பின் விந்து (பூஜ்யம்=0) க்களைச் சேர்ப்பதனால் அவ்வெண்ணின் மதிப்பை பதிகரிக்கலாமேயன்றி, ஒன்றை யெடுத்து விடும்பக்ஷத்தில் வெறும் விந்துக்களுக்கு யாதொரு மதிப்புங் கிடையாது. அதுபோலவே ஜீவாத்மா பரமாத்மாவைத் தொத்திக்கொண்டிருக்கும் வரையில் தான பயனுண்டு; இல்லாவிடில் அது செய்யும் ஸகல கார்யங்களும் முயற்சிகளும் வீணேயாகும்.

477. வினா:—உத்தம விஸ்வாஸத்தின் இலக்கணம் என்ன?

விடை:—அது, பகல் முழுவதும் உழைத்து வேலைசெய்து களைப்படைந்தவன் திண்டின்மேல் சாய்ந்துகொண்டு விசாரமின்றி சுருட்டு பிடித்துக்கொண்டிருக்கையில் அநுபவிக்கும் ஸுகாநந்தநிலைக்கொப்பாகும். அதுவே ஸகலவித விசாரங்களும் தொல்லைகளும் ஒழிந்திருக்கும் நிலையாம்.

478. உலர்ந்துபோன சருகுகள் காற்றால் இங்குமங்கும் மோதப்பெற்று, தம்மிஷ்டப்படி இருக்கமுடியாமலும் தாமாய் ஓரிடத்திற்குப் போகாமலும் இருப்பதுபோல், எம்பெருமானே கதியென நம்பியிருக்கும் அன்பர்கள் அவனது திருவுள்ளப்படியே நடக்கின்றமையால் அவர்களுக்கென்று தனியான இச்சையும் முயற்சியும் கிடையா.

479. திறந்த புலத்திலேயுள்ள ஆழமில்லாத குட்டையின் ஜலமானது, பிறர் உபயோகப்படுத்திக் குறையாவிட்டாலும், தானாகவே உலர்ந்துபோகின்றது. அதுபோலவே எம்பெருமானது திருவருளும் கருணையுமே சரணமென்று நம்பி ஆத்மார்ப்பணம் செய்கின்ற பாபியும் பரிசுத்தனாகின்றான்.

480. அநேக எலும்புகளுள்ள மீன்கள் சிலவும் ஒரே எலும்புள்ள மீன்கள் சிலவும் இருந்தபோதிலும், சாப்பிடுகின்றவர்கள் எல்லா எலும்புகளையும் களைந்துவிட்டு மீன்களைச் சாப்பிடுவதுபோல், சிலர் அநேக பா

பங்கள புரிந்தவர்களாயும், சிலர் சொற்ப பாபம் புரிந்தவர்களாயு மிருப்பினும், எம்பெருமானது திருவருள் அவர்களெல்லோரையும் காலக்ரமத்தில் பரிசுத்தர்களாக்கி விடுகின்றது.

481. குரங்குக்குட்டியானது தன் தாயைத் தழுவிக் கெட்டியாய்ப் பிடித்துககொள்ளுகிறது. பூனைக்குட்டியோ அப்படித் தழுவிக் கட்டிக்கொள்ளமுடியாமல், தன் தாயாரையே நம்பி அது தன்னை வைக்குமிடத்தி லெல்லாம் பரிதாபமாய் அழுகின்றது. குரங்குக்குட்டி தன் சொந்த சக்தியால் தாயைத் தொத்திக்கொள்ள வேண்டியிருப்பதால், தான் பிடித்துக்கொண்டிருக்கும் பிடிப்பைச் சிறிது தளரவிட்டாலும் கீழே விழுந்து துன்பமுறுகின்றது. ஆனால் பூனைக்குட்டியை அதன் தாயே ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் கொண்டு போகிறபடியால், அதற்கு யாதொரு அபாயமும் நேரிடுவதில்லை. தன் சொந்த சக்தியை நம்பிக்கொண்டிருப்பதற்கும் ஸகலத்தையும் ஈசுவரார்ப்பணம் செய்து விட்டிருப்பதற்கு முள்ள வேற்றுமை இதுதான்.

குறிப்பு:—இதை வடநூலர் மர்க்கட கிசோர ந்யாய மென்றும் மார்ஜால கிசோர ந்யாய மென்றும் கூறுவர். மர்க்கடகிசோரம்=குரங்குக் குட்டி ; மார்ஜாலகிசோரம்=பூனைக்குட்டி.

ஜகந்மாதாவின் ஸ்மரணம்.

482. ஆசையை யுண்டாக்கும் இடங்களுக்கு அவஸ்யமாய்ப் போகும்படி நேரிடும்போது ஜகன்மாதாவை இடைவிடாமல் ஸ்மரணம செய்துகொண்டு

போனால், உன் ஹ்ருதயத்திலே பதுங்கிப் பார்த்துக் கொண்டிருக்கும் கெடுதிகளுக்குக் கூட உட்பட வொட்டாமல் அப்பரதேவதை உன்னைப் பாதுகாப்பள். அப்படிப்பட்ட இடங்களில் உன் அன்னையாகிய அம்பிகையின் ஸாந்நித்தியமே உன்னைத் தீய செய்கைகளுக்கும் எண்ணங்களுக்கும் உட்படவொட்டாது வெட்கமுறச் செய்து தவிர்க்கும்.

483. பெண்ணும் பொன்னுமே உலகமுழுவதையும் பாவத்தில் மூழ்க்கடித்துவிட்டன. பெண்ணை ஜகந்மாதாவின் ஸ்வரூபமென்று நீ எண்ணுங்கால் அவளுடைய வன்மை அடங்கிப் போய்விடுகின்றது.

ஸாதகனது பலம்.

484. வினா:—ஸாதகனுடைய பலம் எங்கே இருக்கின்றது?

விடை:—அவன் கடவுளின் குழந்தையாதலால், கம்பலையும் கண்ணீருமே அவனது சிறந்த பலமாகும்; ஓயாது அழுதுக்கொண்டிருக்கும் குழந்தையின் இஷ்டத்தை நிறைவேற்ற உடன்படும் தாயார்போல், கடவுளும் அன்பனது அபீஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறேனென்று வாக்களிக்கின்றார்.

485. துக்கக்கண்ணீரும் ஆநந்தக் கண்ணீரும் கண்ணின் வெவ்வேறு மூலைகளினின்று பெருகுகின்றன. துக்கக்கண்ணீர் நாசிக்கருகிலுள்ள பக்கத்தினின்றும் ஆநந்தக் கண்ணீர் மற்ற மூலையிலிருந்தும் பெருகுகின்றன.

## இடைவிடாத பக்தி.

486. வினா:—உபசாந்தியானது மநத்தின்கண் சிறிதுகாலம் மாத்திரம் இருக்கின்றதேயன்றி எக்காலமும் ஏன் குடிகொண்டிருப்பதில்லை?

விடை:—மூங்கிலைக் கொளுத்தி எரிக்கும் நெருப்பானது, ஓயாமல் ஊதிக்கொண்டிருந்தாலன்றி, சீக்ரத்தில் அவிந்துபோகும். அதுபோலவே அத்யாத்ம அக்னி எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்க வேண்டுமாயின், இடைவிடாத பக்தி இன்றியமையாதது.

487. வினா:—அன்றன்றைக்கு வேண்டிய அன்னத்தைப்பற்றியே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கும் நான் எவ்வாறு பக்தி பண்ணுவேன்? [அன்னம்=சாப்பாடு.]

விடை:—நீ யாருக்காக ஊழியம் செய்கின்றாயோ அவன் உனக்கு வேண்டியவற்றை யளிப்பான். கடவுள் உன்னை இவ்வுலகத்திற்கு அனுப்புவதன் முன்னமே உன் போஷணைக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்து வைத்திருக்கின்றார்.

488. பிறரைக் கொல்வதற்குக் கத்தியும் கேடயமும் வேண்டுமேயன்றி, தன்னையே மாய்த்துக்கொள்வதற்கு ஒரு குண்டூசியே போதுமானது. அதுபோல, பிறருக்கு உபதேசிக்கவேண்டுமானால் ஒருவன் வேதங்களையும் ஶாஸ்த்ரங்களையும் படிக்க வேண்டுமேயன்றி, ஸ்வயம்ப்ரகாஶம் அடைய வேண்டுமாயின் ஒரே மூல மந்த்ரத்தில் திடமான விஶ்வாஸம் இருந்தாற்போதும்.

## திடசித்தம்.

489. நாட்டுப்புறங்களிலுள்ள பெண்கள் நாலைந்து தண்ணீர்ப்பானைகளை ஒன்றன்மேல் ஒன்றாகத் தலைமேல் வைத்துக்கொண்டு, வழிநெடுகத் தங்கள் ஸுகதுக்கங்களைப்பற்றி ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டே போனபோதிலும், ஒரு துளி ஜலமாவது கீழே சிந்தாமற்படி ஜாக்ரதையாய்க் கொண்டுபோகிறார்கள். அதுபோலவே புண்ய மார்க்கத்திற்போகும் ப்ரயாணியும் நடக்கவேண்டும். எத்தனைய கிலேசங்கள் அவனைச் சூழ்ந்திருந்தபோதிலும் அவனது ஹ்ருதயம்மாத்திரம் உண்மை நெறியிலிருந்து நழுவாதிருக்கும் வண்ணம் அவன் ஜாக்ரதையா யிருத்தல் வேண்டும்.

490. மித்ரனே, நான் ஜீவித்துக்கொண்டிருக்கும் வரையிலும் கற்றுக்கொண்டே யிருக்கின்றேன்.

## ஏகாக்ரசித்தம்.

491. கரதாளம் போட்டுக்கொண்டே அதற்குச் சரியாக ஸ்ரீஹரியின் இனிய நாமத்தை யிடைவிடாது உச்சரிப்பாயாகில், உனக்கு ஏகாக்ரசித்தம் கைகூடும். மரத்தின் அடியில் உட்கார்ந்துகொண்டு கைகொட்டினால் அம்மரத்தின் கிளைகளிலுள்ள பக்ஷிகளெல்லாம் பல திக்குகளிலும் பறந்தோடிப் போவதுபோல், ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே கரதாளம்போட்டால் உன் மனத்திலிருந்து ஸகலபாப சிந்தைகளும் பறந்தோடிப்போகும் [ஏகாக்ரசித்தம் = ஒருமைப்பாடுள்ள மனம்.]

492. குறிபார்த்துச் சுடுகின்றவன் முதலில் பெரிய வஸ்துக்களின்மேல் இலக்குவைத்து எய்யக் கற்றுக் கொள்ளுகிறான். இந்தப் பழக்கம் அவனுக்கு அதிகமாக ஆக, சிறிய குறிகளையும் ஸுலபமாய்ச் சுடும் ஸாமர்த்யம் அதிகரிக்கின்றது. அதுபோலவே உருவுள்ள விக்ரஹங்களைத் த்யானிக்க மநம் பழகியிருக்குமாயின், உருவிலாப் பொருளாகிய கடவுளின்மேலும் அதை நிறுத்துவது எளிதாயிருக்கும்.

493. ஒரு சிறுவன் சிறிய எழுத்துக்களை நன்றாய் எழுதுவதில் தேர்ச்சி பெறுமுன் பெரியவரிகளை முதலில் வரைந்து, எழுதும் வழியைக் கற்றுக்கொள்வது போலவே, ஏகாக்ர ஶக்தி நமக்கு ஸித்தியாக வேண்டுமானால், மநத்தை முதலில் உருவப் பொருள்களின்மேல் நிறுத்திப் பழகவேண்டும். அதில் ஸித்தியுண்டான பிறகு அருவப் பொருளின்மேல் அதை எளிதில் நிறுத்தலாம்.

494. தீபசிகையைத் த்யானிப்பதே மநத்தை ஏகாக்ரப் படுத்துவதற்கு ஸர்வ ஸுலபமான மார்க்கமாம். அதன் உள்ளே இருக்கும் நீல நிறமான காந்தியைக் காரண சரீரத்துடனும், அதைச் சுற்றிக் கவிந்து கொண்டிருக்கிற ஒளியை ஸூக்ஷ்ம ஶரீரத்துடனும், வெளியிற் சுற்றிலுமுள்ள ஒளியை ஸ்தூல ஶரீரத்துடனும் ஒப்பிடலாம். ஆகையால் காரண ஶரீரத்தை யொத்திருக்கிற நீலவர்ணமுள்ள தீபகாந்தியில் மநத்தை நிறுத்திப் பயின்றால் மநத்தின் ஏகாக்ரதிலே ஸித்தியாகும்.

495. முதன்முதலில் ஒருவன் ஏகாந்தமான இடத்திலே மநத்தை ஒருவழிப்படுத்த முயலவேண்டும்.

இல்லாவிடில் பலவித விஷயங்களும் அதைக் கலக்கி விடும். பாலையும் நீரையும் ஒன்ருய் வைத்திருந்தால் அவை இரண்டும் கலந்துபோவது நிச்சயம். ஆனல் பாலைக்கடைந்து வெண்ணெயாக மாற்றிவிட்டால், வெண்ணெயாய் மாறிய பால் நீருடன் சேர்ந்துபோகாமல் அதன்மேலேயே மிதந்துகொண்டிருக்கும். அதுபோலவே இடைவிடாப் பயிற்சியால் ஒருவன் மநத்தை ஏகாக்ரப்படுத்தும் ஸக்தியுள்ளவனாகும்பொழுது அவன்மநம் சுற்றிலுமுள்ள தாழ்ந்த பொருள்களுடன் கலந்திராமல் மேலாக எழுந்து கடவுளினிடத்திலே சாந்தியடைந்து நிற்கும்.

## த்யாநம்.

496. ஸாதகன் த்யாநயோகத்திலிருக்குங் காலையில் சில ஸமயங்களில் யோகநித்ரை என்ற ஒருவித தூக்கத்தில் அமர்ந்து விடுகின்றான். அப்பொழுது அவன் சில திவ்யகாட்சிகளைத் தப்பாமற் காண்கின்றான்.

497. த்யாநத்திலே பூர்ணஸித்தி யடைந்தவனுக்கு மோக்ஷம் உள்ளங்கையிலே இருக்கின்றது. ஒருவனுக்கு த்யாநத்தில் பூர்ணஸித்தி எப்பொழுது உண்டாகின்றது தெரியுமா? த்யாநம் செய்வதற்காக அவன் உட்கார்ந்தவுடனே அவன் திவ்ய தேஜஸ்ஸாற் சூழப்பெற்றுக் கடவுளுடன் கலந்து நிற்கும்பொழுதுதான்.

498. எவன் த்யாநயோகத்திலிருக்கும் ஸமயத்தில் தன்னைச்சுற்றிலும் உள்ள எவ்விஷயத்தையும் முற்றுமுணராம லிருக்கின்றானே,—தன் தலையில் பறவை

கள் கூடுகட்டினாலும் அறியாமலிருக்கின்றானோ, அவனே த்யாநயோகத்தில் ஸம்பூர்ண ஸித்தி பெற்றவன்.

ஸமாதிநிலை.

499. நானெனும் அஹந்தையை யகற்றி ஸமாதி நிலையை அடைபவர் வெகு சிலரே யாவர். அவ்வஹந்தை ஸாதாரணமாய்ப் போகிறதேயில்லை. நீ எவ்வளவு தூரம் எல்லையின்றித் தர்க்கித்து ஆராய்ச்சி செய்தபோதிலும், இந்த 'அஹம்' என்பது அடிக்கடி உன்னிடம் திரும்பிவந்துகொண்டேயிருக்கும். இன்றைக்கு நீ மரத்தை வெட்டினால் நாளைக்கு மறுபடியும் அது தளிர்த்து விடுகின்றது.

500. ஆத்மஜ்ஞாந வொளியை யடையும் பொருட்டுப் பலநாள் அவித்தையுடன் கடும்போர் புரிந்து பலவித கடினமான ஸாதநங்களிற் பயின்ற பிறகு ஸமாதி நிலை கைகூடும்பொழுதுதான், அஹங்காரம் தன் பரிவார ஸஹிதமாய் ஒழிந்துபோய்விடும். ஆனால் இவ்வஹங்காரம் பெரும் பிடிவாதமுள்ளதானமையால் ஸமாதியடைவது வெகு கஷ்டம். இக்காரணத்தினாலேயே இவ்வுலகத்தில் அடிக்கடி பிறக்கவேண்டி யிருக்கின்றது.

501. வினா:—ஸமாதியிலுள்ளவன் மநம் எந்த நிலையில் இருக்கின்றது?

விடை:—மீனைத் தண்ணீரிலிருந்து வெளியே கொஞ்சநேரம் வைத்திருந்து, மறுபடியும் தண்ணீருக்குள் போட்டால், அது எவ்வித ஸுகத்தை யநுபவிக்குமோ, அதைப்போன்ற நிலையிலுள்ளது, ஸமாதியிலுள்ளவனது மநம்.

502. கடலுக்குள்ளே மலைகளும் குன்றுகளும் திட்டுகளும் பள்ளத்தாக்குகளும் இருந்தபோதிலும், மேலே யிருந்து பார்த்தால் அவை புலப்படுவதில்லை. அதுபோலவே ஸமாதிநிலையிலே யொருவன் ஸச்சிதாநந்தக் கடலிலே மிதந்துகொண்டிருக்கும்பொழுது மானுட வுணர்வெலாம் மறைந்து கிடக்கின்றது.

503. அதைத் திரும்பிப்போய்ச் சேர்ந்து மறுபடியும் வருகிற நிலையெனச் சொல்லலாம். நீ கடவுளிடத்திலிருந்து திரும்பிப்போய் அவருடன் ஒன்றாய்க் கலக்கின்றாய். இதுதான் ஸமாதி. பிறகு நீ அங்கிருந்து திரும்பிவந்து மறுபடியும் ஜீவஸ்வரூபத்தை யடைந்து, நீ முன் எந்த ஸ்தானத்திலிருந்து புறப்பட்டாயோ, அந்த ஸ்தானத்திற்கு மீண்டும் வந்து, உன் பழைய வடிவமாகிய ஜீவாத்மா பரமாத்மாவினின்று உண்டானதே யென்றும், கடவுள், மனிதன், ப்ரக்ருதி என்பன ஒரே உண்மைப்பொருளின் ஸ்வரூபங்களென்றும், அவற்றுள் எதையேனும் ஒன்றை உறுதியாய்ப்பற்றினால் அவற்றை யெல்லாம் அநுபவித் துணரக்கூடுமென்றும் அறிகின்றாய்.

504. ஸத்வகுணமுள்ள புருஷன் எவ்வாறு த்யானம் செய்கின்றான்? பிறர் தன்னைப் பாராதிருக்கும்படி அவன் அர்த்தராத்ரியிலே படுக்கையின்மேல் திரைக்குள்ளிருந்துகொண்டு த்யானஞ் செய்கின்றான்.

ஸாதகன் விசேஷமான உடைதரிக்கவேண்டுமோ?

505. வினா:—ஸாதகன் ஏதாகிலும் விசேஷமான வுடைதரிக்கவேண்டுமா?

விடை:—தக்கதோர் உடை தரிப்பது நல்லதே. துறவியின் காவியுடை யணிந்து கையில் தாளமும் தம்புரும் வைத்துக்கொண்டிருப்பவனுக்குத் தன்னிஷ்டப்படி அற்பமான அசுத்தப்பேச்சுகளைப் பேசவாவது சிற்றின்பப்பாடல்களைப் பாடவாவது மநம் வராது. ஆனால் ஒழுங்கு மாப்பிள்ளையைப்போல் அழகாய் உடையணிபவன் ஸதாரணமாய்த் தன் மநத்தை உலக விஷயங்களிற் செலுத்திச் சிங்கார பதங்களையே பாடிக்கொண்டிருப்பான்.

506. வினா:—ஸங்ந்யாஸியின் காஷாய வஸ்த்ரத்தை யணிவதால் யாது பயன்? வெறும் உடையில் என்ன இருக்கின்றது?

விடை:—காஷாய வஸ்த்ரத்தைக் கண்டவுடனே பரிசுத்த சிந்தையுண்டாகின்றது. கிழிந்த செருப்பும் நைந்த கந்தையும் மநத்தில் விநயாதிகுணங்களின் நினைவை உண்டாக்குகின்றன. 'நிஜா'ரும் 'கோட்'டும் பதனிட்ட தோல் 'ஜோடு'ம் தரிக்கின்றவன் சாதாரணமாய்க் கர்வமும் வீண்பெருமையும் பாராட்டுகின்றான்; கருப்புக் கரையுள்ள வேஷ்டியை ஒழுங்காய் உடுத்திக் கொள்வதால் ஒருவன் உல்லாஸமாயிருக்கவும் சிங்காரப் பதங்களைப் பாடவும் வழிக்கு வந்து விடுகின்றான். ஸங்ந்யாஸியின் காஷாய வஸ்த்ர தாரணமோ பரிசுத்தமான சிந்தைகளை மநத்திலே ப்ரவேசிக்கச் செய்கின்றன. வெறும் உடையினால் யாதொருபயனுமில்லாமற் போயினும், ஒவ்வொருவிதமான உடையில் அதனதன் குணம் சேர்ந்தேயிருக்கின்றது.

507. வக்கீலைப் பார்க்கும்பொழுது வ்யாஜ்யங்களும் வழக்குகளும் ஞாபகத்துக்கு வருவனபோல், பகவத் பக்தனைப் பார்க்கும்பொழுது பகவாந் ஞாபகமும் பரலோக ஞாபகமும் உண்டாகின்றன.

508. பாதரஸம் பூசிய கண்ணாடியிலே முகமானது ப்ரதிபலித்துக் காணப்படுவதுபோல், நல்லொழுக்கமுள்ள பக்தனது பரிசுத்தமான ஹ்ருதயத்திலே ஸர்வேச்வரனது ஸ்வரூபமும் ப்ரதிபலித்துக் காணப்படுகின்றது.

## பூர்ணபுருஷன்.

509. நன்றாய் அலர்ந்த மலரின் நறுமணத்தைக் கந்தவஹன் தாங்கி நாற்றிசைகளிலும் இறைக்கும்பொழுது, தேனீ தானாகவே அம்மலரிடம் வருகின்றது. தித்திப்புப் பண்டங்கள் வைத்திருக்குமிடத்திற்கு எறும்புகள் தாமாகவே வந்து சேர்கின்றன. தேனீயையாவது எறும்பையாவது ஒருவரும் வருந்தியழைக்க வேண்டியதில்லை. அதுபோலவே ஒருவன் ஸர்வகுணப் பரிபூர்ணநிலையடையும்பொழுது, அவனது சீலத்தின் திவ்ய ப்ரபாவமானது எங்கும் பரவுவதால், உண்மையைத் தேடும் யாவரும் தாமாகவே அவனிடத்தில் வந்து சேருகின்றார்கள். ஆதலால் அவன் தான் கண்ட உண்மையை உபதேசிக்கும் பொருட்டு ஜநங்களைத் தேடி இங்கு மங்கும் அலையவேண்டிய அவசியமில்லை [கந்தவஹன்=காற்று].



# வேதாந்த கீர்த்தநங்கள்.

### பல்லவி.

சிந்தா நாஸ்தி கில — தேஷாம்
சிந்தா நாஸ்தி கில.

### சரணங்கள்.

1. ஶமதமகருணா ஸம்பூர்ணாநாம்
ஸாதுஸமாகம ஸங்கீர்ணாநாம் சிந்தா.

2. காலத்ரயஜித கந்தர்ப்பாணாம்
கண்டிதஸர்வேந்த்ரிய தர்ப்பாணாம் சிந்தா.

3. பரமஹம்ஸகுரு பதசித்தாநாம்
ப்ரஹ்மாநந்தாம்ருதமத்தாநாம் சிந்தா.

---

### பல்லவி.

ஸ்மர வாரம் வாரம், அயி சேதஃ
ஸ்மர நந்தகுமாரம்.

### சரணங்கள்.

1. கோஷகுடீரபயோதரசோரம்
கோகுலவ்ருந்தாவநஸஞ்சாரம் ... ஸ்மர.

2. வேணுரவாம்ருதபாநவிஹாரம்
விஶ்வஸ்திதிலயஹேதுவிஹாரம் ஸ்மர.

3. பரமஹம்ஸஹ்ருத்பஞ்ஜரகீரம்
பாதகயேநுகவகஸம்ஹாரம் ஸ்மர.

---



தாயே, யான் யந்த்ரம், நீ அதை யியக்கும் யந்த்ரி; யான் அறை, நீ அதிலே குடியிருப்பவள்; யான் உறை, நீ அதில் வைத்திருக்கும் கத்தி; யான் தேர், நீ அதை யோட்டும் ஸாரதி; நீ என்னைச் செய்யுமாறு ஏவும் வண்ணமே செய்கின்றேன்; நீ என்னைப் பேசுமாறு செய்யும் வண்ணமே பேசுகின்றேன்; நீ என்னை நடக்குமாறு ஏவும் வண்ணமே நடக்கின்றேன்; 'நான்' என்பதே இல்லை; 'நான்' என்பதே இல்லை; எல்லாம் "நீயே".

# உபாக்யாநங்கள்.



நாற்புறமும் உயர்ந்த மதிள்சுவரால் சூழப்பெற்ற ப்ரதேசம் ஒன்றிருந்தது. அஃது இப்படிப்பட்ட இடமென்று வெளியிலுள்ளவர்களுக்குத் தெரியாது. ஒரு ஸமயம் நான்கு மனிதர் சேர்ந்து ஏணி வைத்து இச்சுவரின்மேலேறி உள்ளே என்ன இருக்கிறது பார்ப்போம் என்று தீர்மானித்தார்கள். முதல் மனிதன் மதிளின்மேலேறி "ஹா, ஹா, ஹா" என்று சிரித்து உள்ளே குதித்துவிட்டான். இரண்டாமவனும் ஏறினவுடன் அவ்வாறே உரக்கச் சிரித்துக் குதித்துவிட்டான். மூன்றுமவனும் அப்படியே செய்தான். கடைசி மனிதனான நாலாமவன் மேலே ஏறிப் பார்த்தபொழுது அதற்குள் ரமணீயமான சோலைகளும் மதுரமான பழங்களுமுள்ள வோர் அழகிய விசாலமான தோட்டத்தைக் கண்டான். உடனே குதித்து அவ்வழகிய காட்சியை அநுபவிக்க வேண்டுமென்று அவன் மனத்தில் அடக்கமுடியாத ஆசையுண்டான போதிலும், அதை அவன் அடக்கிக்கொண்டு ஏணியின் வழியே இறங்கிவந்து அவ்வழகிய தோட்டத்தைப்பற்றி வெளியே யிருப்பவர்களுக்கு ப்ரஸங்கித்தான். ப்ரஹ்மமானது மதிள்சூழ்ந்த தோட்டத்தைப் போன்றது. அதைக் காண்கிறவன் தன் நிலையையே மற

ந்து ஆநந்தபரவசனாகி மோக்ஷம் அடையும்பொருட்டு அதிற்போய்த் தலைகீழாய் விழுகின்றான். உலகத்தில் ஞானிகளென்றும் பக்தர்களென்றும் சொல்லப்படுகின்றவர் இத்தகையவர்களே. ஆனால் உலகரக்ஷகர்களாயுள்ளோர் யாரெனில்,—ப்ரஹ்மத்தை யறிந்து அவ்வாநந்தத்தைப் பிறருடனும் பகிர்ந்துகொண்டு அநுபவிக்க வேண்டுமென்னும் விருப்பத்துடன் தங்களுக்கு விதித்தமாயிருக்கும் மோக்ஷத்தையும் தள்ளிவிட்டு, ஸம்ஸாரத்தில் சிக்குண்டு தவிக்கும் மாநவகோடிகளுக்கு உண்மையை உபதேசித்து அதன்மூலமாய் அவர்களைக் கரையேற்றும் பொருட்டுத் தாமே இவ்வுலகத்தின் ஜநநமரணமாகிற துக்கத்துக்கு உட்படுகின்றவர்களே யாவர்.

512. விறகு விற்பவன் ஒருவன் பக்கத்திலுள்ள ஒரு காட்டிலிருந்து தினந்தோறும் விறகு வெட்டிக்கொண்டுபோய் விற்று அதனால் வரும் சொற்பகாசை வைத்துக்கொண்டு கஷ்டஜீவனம் பண்ணிவந்தான். ஒருநாள் அக்காட்டின் வழியே போய்க்கொண்டிருந்த ஸந்யாஸியொருவர் அவன் விறகு வெட்டிக்கொண்டிருப்பதைக் கண்டு, "நீ இக்காட்டினுள்ளே இன்னும் தூரமாய்ச் செல்வாயாகில் உனக்கு அதிக லாபம் கிடைக்கும்" என்றார். விறகு விற்பவன் அவரது கட்டளையைச் சிரமேற்கொண்டு அக்கானகத்தினுள்ளே செல்ல, அங்கே ஒரு சந்தநமரத்தைக் கண்டான். அதைக்கண்டதும் களிப்படைந்து தன்னால் தூக்கிக்கொண்டு போகக்கூடிய அளவு சந்தநக்கட்டைகளை வெட்டி யெடுத்துக்கொண்டு

போய்க் கடைத்தெருவில் விற்று அதிகலாபம்பெற்றான். பிறகு அவன், இந்த ஸந்யாஸி காட்டுக்குள்ளே என்னைப் போகச் சொன்னாரே யன்றி சந்தனமரங்களைப் பற்றி யேதும் சொல்லாமைக்கு யாதாயினும் காரணமிருக்க வேண்டுமென்று தனக்குள்ளே யோசித்து, மறுநாள் சந்தனமரக்காட்டைக் கடந்து இன்னும் அப்புறம் போய்க்கொண்டிருக்கையில், தாமிர சுரங்கமொன்றைக் கண்டு அதிலிருந்து தன்னால் தூக்கக்கூடிய வளவு தாமிரம் எடுத்துக்கொண்டுபோய்க் கடைத்தெருவில் விற்று அதிகலாபமடைந்தான். மறுநாள் அவன் அத் தாமிர கனியையுங் கடந்து ஸாதுவானவர் கூறியபடியே இன்னும் தூரமாய்ப்போக, வெள்ளிசுரங்க மொன்றைக் கண்டு அதிலிருந்து தன்னால் சுமக்கக்கூடிய அளவு வெள்ளியை யெடுத்துக்கொண்டுபோய் விற்று முன்னிலும் அதிகமாய்ப் பணம் ஸம்பாதித்தான். இவ்வாறே அவன் தினந்தோறும் காட்டுக்குள்ளே சிறிதுசிறிதாய் வெகுதூரம் சென்று கடைசியில் பொன் சுரங்கங்களையும் வைரச்சுரங்கங்களையும் கண்டு அவற்றின் மூலமாய்ப் பெரும்பணக்காரனாய்விட்டான். ப்ரஹ்மஜ்ஞானமடைய விரும்பும்மனிதனுடைய நிலையும் இத்தகையதே. அவன் சில அற்புத ஸித்திகளை யடைந்தவுடன் அத்துடனே நில்லாமல் மேலும் மேலும் ஆத்மவிசாரம் செய்து கொண்டு போவானேயாகில் ஸத்திய ஸ்வரூபமான அழியா ஞானச்செல்வத்தை யடைவான்.

513. ஒருவன் கிணறுவெட்டத் தொடங்கிச் சில அடி வெட்டியானவுடன் வேறொருவன் அவனிடம்

வந்து "தம்பி, இங்கே என் நீ வீணாய்க் கஷ்டப்படுகிறாய்? இதன் கீழ் நீரூற்று கிடையாது. இங்கே வறண்ட மணலைத் தவிர வேறொன்றுமில்லை" என்றான். அதைக்கேட்டுக்கொண்டு அவன் அவ்விடத்தைவிட்டு மற்றோரிடஞ் சென்று வெட்டத்தொடங்கினான். அவ்விடத்துக்கும் யாரோ ஒருவன் வந்து, "அப்பா, முன் இங்கே ஒரு கிணறு இருந்தது; நீ என் வீணாய்ச் சிரமப்படுகிறாய்? இன்னும் சிறிது தூரம் தெற்கே சென்றுவெட்டினால், நல்ல நீரூற்று உண்டாகும்" என்றான். அவன் சொன்னபடியே போய் வெட்டிக்கொண்டிருக்கையில் இன்னொருவன் வந்து தடுத்தான். இவ்வாறு அவன் வெட்டத்தொடங்கின ஒவ்வோரிடத்திலும் பிறரால் தடுக்கப்பட்டுக் கடைசியில் கிணறு வெட்டாமலே போய்விட்டான். அதுபோலவே ஞானமார்க்கத்தில் அநேகர் தான் தோன்றித் தம்பிரான்களின் உபதேசத்தைக் கேட்டுப் பெருநஷ்டம் அடைந்திருக்கின்றார்கள். அவர்கள் இன்னைக்கு ஒருகுருவைப்போய் அநுஸரிப்பார்கள்; ஆனால் ஸ்திரமான பக்தி யில்லாமையினாலும், ஞானமார்க்கத்திலுண்டாகும் பலவித கஷ்டங்களுக்கும் பிரதிபந்தங்களுக்கும் சளைக்காமல் ஈடுகொடுக்கும் வல்லமை இல்லாமையாலும், அந்தக் குருவைவிட்டு வேறொருவரிடம் போவார்கள். பிறகு அவரையும் விட்டு இன்னொருவரிடத்திலும், இவ்வாறு எங்கேயும் நிலைக்காமல் திரிந்து கடைசியில் கொழுத்த நாஸ்திகர்களாகவேனும் ஆகின்றார்கள்; அல்லது இப்பிறவியில் ஆத்மஜ்ஞானம் அடைவது அஸாத்தியமென்னும் முடிவுக்காவது வருகின்றார்கள். ஆனால் ஜ்ஞானமடைய விரும்புகிறவன் ஒரே

குருவை ஸ்திரமாய் நம்பி அவர் சொல்வதை யெதிர்க்காமல் பொறுமையுடன் கேட்டு நடக்கவேண்டும்.

514. ஒருவன் ஆற்றைக்கடக்க யோசித்துக்கொண்டிருக்கையில் ஒரு முநிவர் அவனிடத்தில் ஒரு ரக்ஷாபந்தனத்தைக்கொடுத்து "இஃது உன்னை அக்கரை கொண்டுபோய்ச் சேர்க்கும்" என்று சொல்லிப்போனார். அவனும் அதைக்கையில் எடுத்துக்கொண்டு நீரின் மேல் நடக்க ஆரம்பித்தான். ஆற்றில்பாதிதூரம் போனவுடனே இதில் என்ன இருக்கிறது பார்க்கலாம் என்ற ஆவலுடன் அதைத் திறந்துபார்க்க, அதில் ஒரு காகிதத்தின்மேல் ஸ்ரீராமநாமம் எழுதப்பட்டிருப்பதைக் கண்டு "இதுதானா ரஹஸ்யம்" என்று அலக்ஷ்யமாய்ச் சொல்லவே, நீரிலே விழுந்து முழுகிப்போய்விட்டான். ஆதலால் பகவந் நாமத்திலுள்ள நம்பிக்கையே அமாநுஷ்யமான அத்புத காரியங்களையும் ஸாதிக்கின்றது. நம்பிக்கையே உயிர். ஸந்தேஹமே மரணம். "ஸம்ஸயாத்மா விநஶ்யதி"

515. ஸ்ரீராமசந்த்ரபகவாந் லங்காபுரிக்குப்போகும்பொருட்டுக் கடலின்மேல் ஸேதுபந்தநம் செய்ய வேண்டிவந்தது. ஆனால் அவரது பரமபக்தனான ஹநுமானோ, தமதுதிடமான ராமபக்தியின் துணையால் அக்கடலை ஒரே தாண்டாய்த் தாண்டிவிட்டார். கேவல பக்தியின் மூலமாகவே யஜமானனைவிட ஸேவகன் அதிக ஸுலபமாயும் ஸாமர்த்யமாயும் கார்யத்தை முடிப்பதற்கு இது சிறந்த உதாரணமாகும்.

516. குருபக்தியில் ஒப்புயர்வற்ற ஒரு ஶிஷ்யன் குருவின் திருநாமத்தைக் கேவலம் உச்சரிப்பதனாலே

யே ஓர் ஆற்றைக் கடந்துசென்றான். குருவானவர் அதைக் கண்டு, "என் பெயருக்கு இவ்வளவு பெருமையிருக்கின்றதா? அப்படியானால் நான் மகா பெரியவனாயும் சக்திமானாயு மிருப்பதற்கு ஸந்தேஹமேயில்லை" என்று தனக்குள்ளே நினைத்துக்கொண்டு, மறுநாள் "நான், நான், நான்" என்று சொல்லிக்கொண்டு தாமும் ஆற்றின்மேல் நடக்கமுயன்றார். ஆனால் அவர் ஜலத்தில் காலைவைத்தாரோ இல்லையோ, உடனே நீரில் ஆழ்ந்து முழுகிப்போய்விட்டார். நம்பிக்கையால் அற்புதங்களையும் செய்யலாம். வீண்பெருமையும் அஹங்காரமுமோ மனிதனை மரணத்துக்குத்தான் ஆளாக்கும்.

517. ஒரு பால்காரப்பெண் ஆற்றின் அக்கரையில் வஸிக்கும் ஒரு வைதிக ப்ராஹ்மணருக்குப் பால் கொண்டுபோய்க் கொடுப்பது வழக்கம். ஓடமேறி அக்கரைக்குப் போகவேண்டியிருந்ததால், ஓடம் விடுவதில் உண்டாகும் அஸந்தர்ப்பங்களால் நாள்தோறும் கால தாமஸமின்றி பால் கொண்டுபோய்க்கொடுக்க முடியாமற்போய்விடும். இப்படிக் காலந்தப்பி வருவதைப் பற்றி அந்தப் ப்ராஹ்மணர் ஒருநாள் அவளைக்கடிந்து பேச, அவ்வேழைப் பெண், "ஐயரே, நான் என்ன செய்வேன்? நான் வீட்டிலிருந்து சீக்கிரமாய்த்தான் புறப்படுகிறேன்; ஆனால் ஓடக்காரனும் மற்ற பிரயாணிகளும் வரும்வரைக்கும் ஆற்றங்கரையில் வெகுநேரம் காத்துக்கொண்டிருக்க வேண்டியிருக்கிறது" என்றாள். அதற்கு அவர் 'பெண்ணே, பகவானுடைய திவ்யநாமத்தைச் சொல்லி ஸம்ஸாரக்கடலைக் கடக்கின்றார்க

ளே? இந்திரிய ஆற்றைக் கடக்க உன்னால் ஆகவில்லையா?" என்றார். அக் கவடற்ற பெண் அதைக் கேட்டு, ஆற்றைக் கடப்பதற்கு இவ்வளவு சுலபமான உபாயம் தனக்குத் தெரிந்து விட்டதே யென்று உள்ளம் பூரித்தனள். மறுநாள் முதல் அவள் பாலைக் காலந்தவறாமற் கொண்டுபோய்க் கொடுத்துவந்தாள். இந்த உபாயத்தால் அவளுக்கு ஓடக்கூலி லாபமாய்விட்டபடியால் அவளுக்குண்டான சந்தோஷத்திற் களவேயில்லை. ஒரு நாள் ப்ராஹ்மணர் அவளை நோக்கி, "நீ இப்பொழுது காலம் தவறாமல் வருவதற்குக் காரணமென்ன?" என்று கேட்க, அவள் "நான் முன்போல் ஓடத்துக்குக் காத்திராமல் தாங்கள் கட்டளையிட்டபடி பகவந்நாமத்தை யுச்சரித்து ஆற்றைக்கடந்து வருகின்றேன்" என்றாள். அந்தணர் அதை நம்பாமல், "நீ ஆற்றைக்கடக்கும் விநத்தை யெனக்குக் காண்பிக்கிறாயா?" என்று கேட்க, அவளும் அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்று ஜலத்தின்மேல் நடக்கத்தொடங்கிப் பின்னே திரும்பிப் பார்க்க, ப்ராஹ்மணர் நடக்கமுடியாமல் விழிப்பதைக் கண்டு "ஸ்வாமி, தாங்கள் வாயால் மாத்திரம் ஸ்வாமியின் திருநாமத்தைச் சொல்லுகிறீர்களே யொழிய, ஜலத்தில் தங்கள் வஸ்திரம் நனையக்கூடாதென்று அதைக் கைகளால் தூக்கிப்பிடித்துக்கொள்வதேனோ? கடவுளைத் தாங்கள் முழுவதும் நம்பவில்லையே" என்றாள். தானென்பது சிறிதுமின்றி எல்லாவற்றையும் பகவானிடத்தில் அர்ப்பித்துவிட்டு, அவரைத்தவிர வேறே கதியில்லையென்று நம்பியிருப்பதே ஸகலவித அற்புத செயல்களுக்கும் மூலமாகும்.

518. ஒரு மனிதனுக்கு இரண்டு குழந்தைகள் இருந்தன. அவன் ஒரு குழந்தையைக் கையிலெடுத்துக்கொண்டு, மற்றொன்று தன்கையைப்பிடித்து நடந்துவர, ஒரு வயல் வழியே போய்க்கொண்டிருக்கையில், அக்குழந்தைகள் ஆகாயத்தில் பறக்கும் பருந்தைப் பார்த்தார்கள். தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு பக்கத்தில் போய்க்கொண்டிருந்த பையன் அந்தப் பிடியை விட்டுவிட்டு, "அப்பா, அதோபார் பருந்து" என்று சந்தோஷத்தினால் கையைத் தட்டினான். அப்பொழுது அவன் தந்தையின் கையை விட்டுவிட்டபடியால் தரையிலே தவறி விழுந்து அடிபட்டுக்கொண்டான். தந்தையின் கையிலிருந்த குழந்தையும் அதுபோலவே கையை சந்தோஷத்தினால் தட்டினபோதிலும், தந்தையால் பாதுகாக்கப்பட்டிருந்தபடியால் கீழே விழவில்லை. ஞானமார்க்கத்தில் தன்னுடைய சக்தியையே நம்பியிருப்பவர் முதற் சிறுவனையும் கடவுளையே நம்பி சரணாகதி செய்பவர்கள் இரண்டாங் குழந்தையையும் போன்றவர்கள்.

519. இருவர் சேர்ந்து ஒரு தோட்டத்திற்குள் போனார்கள். அவர்களுள் உலகாநுபவஞானமுள்ளவன் தோட்டத்திற்குள் புகுந்தவுடனே மாமரங்களை எண்ண ஆரம்பித்து, ஒவ்வொரு மரத்திலும் எத்தனை பழம் இருக்கின்றன, முழுத்தோட்டமும் என்ன விலை பெறும் என்ற விஷயங்களைப்பற்றி யோசிக்கத் தொடங்கினான். மற்றொருவன் தோட்டத்தின் சொந்தக்காரனிடத்திற் சென்று அவனை ஸ்நேஹம் பண்ணி;

கொண்டு அவன் அநுமதியின்மேல் பேசாமல் ஒரு மாமரத்தினடியில் போய்ப் பழங்களைப் பறித்துத் தின்னத்தொடங்கினான். இவர்களிருவரில் யார் புத்திமான்? பழங்களைத் தின்றால் பசிதீரும். மரங்களிலுள்ள இலைகளை எண்ணிக்கொண்டு வீண்கணக்கு பார்த்துக்கொண்டிருப்பதால் யாதுபயன்? கல்விச்செருக்குள்ளவன் கடவுளின் ஸ்ருஷ்டியைப்பற்றி ஏன், என்னத்திற்காக, என்று வாதாடி வீண்காலம் கழிக்கின்றான். விநயசீலனான ஞானியோ கடவுளையே ஸ்நேஹஞ்செய்துகொண்டு இவ்வுலகத்தில் உத்தமமான பேரின்பத்தை அநுபவிக்கின்றான்.

520. ஒருஸமயம் பரமஹம்ஸர் தமக்கு அன்பனான ஒரு ஶிஷ்யனை நோக்கி, "ஒரு பெரிய பாத்ரத்தில் பாநகத்தை வைத்திருந்தால் எல்லாப்பக்கங்களினின்றும் ஈக்கள் வந்து அதன்மேல் உட்காருகின்றன. சில ஈக்கள் பாத்ரத்தின் விளிம்பில் உட்கார்ந்து அவ்வுருசியான பாநகத்தைப் பருகியும், சில அதற்குள் விழுந்து முழுகிப் புரண்டும் ஆநந்திக்கின்றன. அதுபோல, நீ ஸச்சிதாநந்தமெனும் தேவாம்ருதத்தை ஓரத்தில் உட்கார்ந்துகொண்டு ஸாவகாசமாய் உருசி பார்த்துவிட்டு ஓடிப்போவையோ? அல்லது, அதன் ருசியைக் கண்டவுடனே அதில் முழுகி ஆநந்தம் அநுபவிப்பையோ?" என்று கேட்டதற்கு, அவன் "நான் ஓரத்திலிருந்து பருகிப் பிறகு பறந்துவந்து உயிருடனிருப்பேனேயன்றி, அதிலேயே விழுந்து புரண்டு ப்ராணனை விடமாட்டேன்" என்றான். அதைக்கேட்டதும் பகவாந்,

"அடே மூட்டாள்! அம்ருதஸாகரத்தில் மூழ்குபவன் எக்காலமும் சாதலேயின்றி இறவாமையை யல்லவோ எய்துகின்றான்" என்றார்.

521. ஸ்ரீராமசந்த்ரர் குருவாகிய வஸிஷ்டமுனிவரால் ஞானோபதேசம்பெற்று உலகத்தைத் துறந்துவிடத் தீர்மானித்திருந்தார். தசரதர் அதையறிந்து அவரை இல்லறத்துக்குத் திருப்புமாறு போதிக்கவேண்டி வஸிஷ்டரை அவரிடம் அனுப்பினார். ஸ்ரீராமன் தீவ்ரவைராக்யத்தில் இருப்பதை வஸிஷ்டர் கண்டு அவருடன் "ராமா, முதலில் என்னுடன் வாதம் செய்துவிட்டுப் பிறகு துறவறத்தைக் கைக்கொள். 'உலகம் கடவுளைவிட வேறானதா' என்பதுதான் நான் கேட்கும் கேள்வி. அப்படி வேறாயிருக்குமாயின் நீ அதைத் துறப்பதற்கு ஆக்ஷேபணையேயில்லை" என்றார். இவ்வசனங்களை ஸ்ரீராமர் தீர்க்கமாய்ப் பரியாலோசித்துக் கடவுளே ஜீவவடிவமாயும் ப்ரபஞ்சவடிவமாயும் திருக்கோலங் கொண்டிருக்கின்றாரென்றும் அவரது உண்மையில் எல்லாவற்றின் உண்மையும் அடங்கியிருக்கின்றதென்றும் தேர்ந்து மௌநமுற்றிருந்தார்.

522. இல்லறத்தி லிருப்பவன் ஸம்ஸாரக் கவலைகளின்றியே குடும்பத்தில் இருக்கக் கூடுமென்றும், ஆகையால் அப்படிப்பட்டவனுக்கு உலக மாயையால் யாதொரு கெடுதியும் உண்டாகாதென்றும் ஒருவன் வாதித்தபொழுது, அதை மறுக்கும்பொருட்டுப் பின்வரும் உபாக்யாநம் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது:

குடும்ப ஸங்கதிகளில் கவலை வையாதவர்களென்று சொல்லப்படுபவர்களுள் ஒருவனிடம் ஒருகால் ஓர்

ஏழைப்பார்ப்பான் யாசகார்த்தமாய்ப் போய்ச் சிறிது பொருள் ஸஹாயம் செய்யும்படி வேண்ட, அந்தக் கனவான், "ஸ்வாமீ, நான் ஒருபோதும் பணத்தைத் தொடுகிறதேயில்லை. என்னையேன் வீணாய் யாசித்துக் காலத்தைக்கழிக்கிறீர்" என்று சொன்னான். அந்தப் பார்ப்பானோ விடாகிண்டனாகையால், எப்படியாவது தனக்குக் கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்று மன்றாடிக் கேட்கவே, அந்தக் கனவான் இவனுடைய தொந்தரவைப் பொறுக்கமுடியாமல் இவனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கலாமென்று தீர்மானித்து அவனைப் பார்த்து, "நல்லது ஸ்வாமீ, நாளைக்கு வாரும், நான் ஏதாவது உமக்குச் செய்கிறேன்" என்று சொல்லி அவனை யனுப்பி விட்டான். பிறகு இந்தக் கவலையற்ற க்ருஹஸ்தசிகாமணி குடும்ப கார்யங்களை நடத்திவந்த தன் மனையாளைக் கூப்பிட்டு, "அடி என் அன்பே, ஒரு ஏழைப் ப்ராஹ்மணன் மிகவும் கஷ்டப்படுகின்றான்; என்னை ஏதாவது ஸஹாயம் பண்ணும்படி கேட்கிறான். அவனுக்கு ஒரு ரூபாய் கொடுப்பதாக நிச்சயித்திருக்கிறேன். அதைப் பற்றி உன் அபிப்ராய மென்ன" என்றுகேட்க, அவள் ரூபாய் என்ற பேரைக் கேட்டமாத்திரத்தில் கோபங் கொண்டு "ஆஹா, எவ்வளவு தர்ம குணம் உங்களுக்கு! ரூபாயென்றால் கல்லும் கட்டியும்போல் யோசனையின்றி எறிந்துவிடும் வஸ்து என்று நினைத்துவிட்டீர்களா?" என்று சீறினாள். அதற்கவன் அவளைக் கொஞ்சிக் கெஞ்சி, "அடி என் ஆசைக் கண்ணே, அந்தப் ப்ராஹ்மணன் அதிக ஏழை, அவனுக்கு நாம் ஒரு ரூபாய்க்குக் குறைவாய்க் கொடுத்தால் நன்றாயிராது" என்று வேண்

டுக்கொள்ள, அவள் அலக்ஷ்யமாய், “அதெல்லாம் முடியாது. அவ்வளவு கொடுத்தால் ஸம்ஸாரத்துக்குக் கட்டிவாராது. இதோ இரண்டணா இருக்கிறது. உங்களுக்கு இஷ்டமிருந்தால் இதை யவனுக்குக் கொடுங்கள்” என்றாள். புருஷன் என்ன பண்ணுவான் பாவம்! வேறே விதியில்லை. மேலும் தான் உலக விஷயங்களிற் கவலை யற்றவன்! தன் மனையாள் எறிந்த பணத்தைப் பேசாமல் எடுத்து வைத்துக்கொண்டு மறுநாள் அந்த ப்ராஹ்மணன் வந்ததும் அவ்விரண்டணாவைக் கொடுத்தனுப்பினன். இதனை உலகப்பற்றில்லாத க்ருஹஸ்த சிரேஷ்டர்கள் தம் பெண்டாட்டிகளின் பேச்சையே கேட்டு நடக்கும் பரமயோக்யர்களாதலால், அவர்களைப் பெருந்தன்மையில்லா மாறுபட்டாரெனக் கருதவேண்டும்.

523. ராணிராஸமணி யம்மையின் காளிகோயிலில் பரமஹம்ஸர் வஸித்துக்கொண்டிருந்தபொழுது, பரமபக்தராகிய ஒரு ஸாது ஒருகாலத்தில் அங்கேவந்து சேர்ந்தார். ஒருநாள் அவருக்கு யாதோர் ஆஹாரமும் கிடைக்கவில்லை. அவருக்கு அப்பொழுது அதிகப்பசியாயிருந்தும், அவர் யாரையும் ஆஹாரம் கேட்காமலே ஒருமூலையில் எச்சிற்கலையிலுள்ள எச்சிற் பதார்த்தங்களைத் தின்றுகொண்டிருந்த நாயைப் பார்த்து அதனிடம் சென்று அதைத் தழுவிக்கொண்டு, “தம்பி, எனக்குப் பாகம் கொடுக்காமலே நீமாத்திரம் சாப்பிடுகிறயே, இதென்ன?” என்று கேட்டுக்கொண்டே அதனுடன் தானும் அவ்வெச்சிலைத் தின்ன ஆரம்பித்தார்.

அந்தப் பெரியவர் இந்த விசேஷ கோஷ்டியிலே போஜநம் பண்ணியான வுடனே, அம்பிகையின் ஸந்நிதியிற் ப்ரவேசித்து, ஆலயம் கிடுகிடென்று அசைந்தாடும் வண்ணம் அவ்வளவு அன்புடனும் உருக்கத்துடனும் தேவியின் பெருமைகளை உள்ளங்கனிந்து பாடினார். அவர் பஜநத்தை முடித்து வெளியே போகப் புறப்பட்ட பொழுது பரமஹம்ஸர் தமது அத்தைமகனாகிய ஹ்ருதய முகோபாத்யாயரைப் பார்த்து, "நீ அவரது பின்னாலேயே சென்று, அவர்சொல்வதைஎன்னுடன்வந்து சொல்லு" என்று ஆஜ்ஞாபிக்க, ஹ்ருதயரும் கொஞ்சந்தூரம் வரையில் அவரைப் பின்தொடர்ந்து செல்ல, அந்தப் பெரியவர் திரும்பி, "நீஏன்என்னைப் பின்தொடர்ந்து வருகிறாய்?" என்று கேட்க, ஹ்ருதயர் "ஸ்வாமீ எனக்கு ஏதாவது உபதேசம் செய்யுங்கள்" என்று கேட்டார். அதற்கவர்: "அழுக்குபடிந்த ஜலதாரையிலுள்ள நீரும் அதோ தெரிகிற புண்யமாகிய கங்காஜலமும் உன் பார்வைக்கு ஒன்றேயெனவும், இந்த வேய்ங்குழலின் ஓசையும் அக்கூட்டத்தின் இரைச்சலும் உன் காதுக்கு அபேதமென்றும் எப்பொழுது ஏற்படுகின்றதோ, அப்பொழுதுதான் உனக்கு ப்ரஹ்மஜ்ஞாநம் ஸித்தியாகும்" என்றார்.

இதைக் கேட்டுக்கொண்டு ஹ்ருதயர் திரும்பிவந்து பகவானுடன் சொன்னபோது, பரமஹம்ஸர், "அந்தப் பெரியவர் ப்ரஹ்மஜ்ஞாநத்தின் முடிவாகிய பேரின்ப நிலையை யடைந்துவிட்டார்" என்றார்.

ஸாதுக்கள் குழந்தைகளைப்போலவும், உந்மத்தர்களைப்போலவும், மற்று வேறு வேஷங்கள் புனைந்தும்

தமக்கு இஷ்டமான இடங்களில் திரிந்து கொண்டிருப்பார்கள்.

524. ஒருகாலத்தில் ஒரு ஸாது ஜநநெருக்கமான ஒரு தெருவின்வழியே போய்க்கொண்டிருக்கையில், ஒரு துஷ்டனுடைய கால்விரலைத் தெரியாமல் மிதித்துவிட்டார். அவன் உடனே கோபத்தாற் சீறி எள்ளளவேனும் இரக்கமின்றி அவரை அடிக்கவே, அவர் அவ்வடி பொறுக்கமுடியாமல் மூர்ச்சித்துத் தரைமேல் விழுந்துவிட்டார். அவரது ஶிஷ்யர்கள் மிகவும் சிரமப்பட்டு அவரை ஶைத்யோபசாரங்களால் தேற்ற, அவர் சிறிதுசிறிதாய்க் கண்ணைத் திறந்து பார்க்கத்தொடங்கினார். அப்பொழுது ஒரு ஶிஷ்யன் அவரைப் பார்த்து "ஸ்வாமி, தேவரீருக்கு இப்பொழுது உபசாரம் செய்கிறது யாரென்று தெரிகிறதா.?" என்றுகேட்க, அவர் "என்னையடித்தவன் தான்" என்று விடையளித்தார். உண்மையான ஸாதுவுக்கு ஶத்ரு, மித்ரன் என்ற பேதமே இல்லை.

525. மேளதாளமத்தள வாத்யங்களுடன் வெகு ஆடம்பரமாய் வரும் கல்யாண ஊர்கோலத்தை ஓர் அவதூதர் கண்டார். ஊர்கோலம் வந்து கொண்டிருந்த தெருவுக்கு அதிக சமீபத்தில் ஒரு வேடன் ஒரு பறவையைச் சுடும்பொருட்டுக் குறிவைத்து அதிலேயே மநத்தைச் செலுத்தி, ஊர்கோலத்தின் இரைச்சலையாவது ஆடம்பரத்தையாவது கொஞ்சமேனும் கவனிக்காமலும், அதைத் திரும்பிக்கூட பாராமலு மிருந்ததையும் கண்டார். உடனே அவதூதர் அந்த வேடனை வண

ங்கி, "ஐயா நீர்தான் எனக்கு குரு. உமது மநம் பறவையின்மேல் செலுத்தப்பெற்று நிச்சலமாய் நிற்பது போல், நான் த்யாநம்செய்ய உட்காரும் பொழுது, என் மநமும் பகவானது திருவடிகளிலே அவ்வளவு நிச்சலமாய் அமர்ந்திருக்கவேண்டும்" என்றார்.

526. ஒரு தூண்டிற்காரன் ஒரு குட்டையில் மீன் பிடித்துக்கொண்டிருந்தான். அவதூதர் அவனிடம் சென்று, "தம்பி, பலான ஊருக்குப் போகும் வழி எது" என்று கேட்டார்; அவர் கேட்கும்போது மீன் பிடிக்கும் கொண்டியின் மிதவைக் குச்சியானது மீன் இரையைக் கவ்வுவதைக்காட்டும் ஸமயமாயிருந்தபடியால், அவன் அவர் கேட்பதைக் கவனியாமல், மீனை பிழுப்பதிலேயே தன் கவனத்தை யெல்லாம் செலுத்தி, அதைப் பிடித்துவிட்டவுடனே அவதூதரைத் திரும்பிப் பார்த்து "ஸ்வாமி, தாங்கள் என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டான். அவதூதர் அவனை வணங்கி "நீர் தான் எனக்கு குரு. நான் பரமாத்ம த்யாநத்தில் இருக்கும்போது உம்மைப்போல் மநவுறுதியாயிருந்து, பூஜை முடியுமுன் வேறெந்த விஷயத்தையும் கவனியாதிருத்தல்வேண்டும்" என்றார்.

527. ஒரு நாரை ஒரு மீனைப் பிடிக்க மெல்ல சென்றுகொண்டிருந்தது. அதற்குப் பின்பக்கத்தில் ஒரு வேடன் நின்று அதன்மேல் அம்பை எய்யக் குறிபார்த்துக்கொண்டிருந்தும், அப்பறவை அதைச் சிறிதும் லக்ஷ்யம் செய்யவேயில்லை. அவதூதர் அந்த நாரையை வணங்கி, "நான் த்யாநத்தில் அமர்ந்திரு

கும்போது என் பின் யார் இருக்கிறார்களென்று திரும்பிப் பாராமல் உன்னைப்போல் உறுதியா யிருப்பேனாக" என்றார்.

528. மீனை மூக்கில் கொந்திக்கொண்டு ஆகாயத்திற் பறந்துகொண்டிருந்த ஒரு பருந்தை மற்றைப் பருந்துகளும் காக்கைகளும் கூட்டமாய்ச்சேர்ந்து, கா, கூவென்று கத்திக்கொண்டு பின்தொடர்ந்து பறந்து அதனிடத்திலிருந்த மீனை எப்படியாவது பிடுங்கிக் கொண்டுபோகப் பார்த்தன. அந்தப் பருந்து எந்தப்பக்கம் போனாலும், அங்கே மற்றைப் பருந்துகளும் காக்கைகளும் கூச்சலிட்டுக்கொண்டு கூடவே பறந்து சென்றன. கடைசியில் அது இந்தத் தொந்தரவைப் பொறுக்கமுடியாமல் மீனைக் கீழே போட்டுவிடவே, மற்றொரு பருந்து அதை அந்தக்ஷணமே கொந்திக்கொண்டது. உடனே அந்தப் புதியபருந்தை மற்றைப் பருந்துகளும் காக்கைக்கூட்டமும் தொடர்ந்து சென்றன. முதற்பருந்து தொந்தரவு நீங்கி ஒரு மரக்கிளையின்மேல் கவலையற்று நிச்சலசித்தத்துடன் போய் உட்கார்ந்தது. இப்படி எண்ணமற்று உட்கார்ந்திருக்கும் பக்ஷியின் சாந்தமான நிலையை அவதூதர் பார்த்து வணங்கி, "பருந்தரசே, நீ தான் எனக்கு குரு, ஏனெனில் மனிதன் தன் தலைமேலிருக்கும் உலக ஆசைகளின் சுமையைக் கீழே தள்ளாதவரையில் கவலையற்று நிச்சல சித்தமாய் இருக்கமுடியாதென்பதை எனக்கு நீ இன்று போதித்தாய்" என்றார்.

529. சக்திபூஜை செய்யும் தாந்த்ரிகன் சவசிந்தாமணி யெனும் மந்த்ரோபாஸனையின் வாயிலாகத்

தன் இஷ்ட தேவதையை வஸ்யம் பண்ணிக்கொள்ளும்பொருட்டுப் பிணத்தின்மேல் உட்கார்ந்து ஜபம் செய்கையில், மத்யத்தையும் * மாம்ஸத்தையும் பக்கத்தில் ஸித்தமாய் வைத்திருப்பான். ஜபகாலத்தில் பிணமானது மந்த்ரபலத்தால் உயிர்பெற்று வாயைத் திறந்தால், உபாஸகன் அதைத் த்ருப்திசெய்யும்பொருட்டு மத்யத்தையும் மாம்ஸத்தையும் அதன் திறந்த வாயில் போடவேண்டும். அப்படி அவன் செய்யாவிட்டால், அவனது ஜபம் பங்கமாய்விடும்; இஷ்டதேவதையும் ப்ரத்யக்ஷமாகாது. அதுபோலவே பிணத்துக்கொப்பான ப்ரபஞ்சத்திலிருந்துகொண்டு நீ மோக்ஷமடைய விரும்பினால், உனக்கு உண்டாகும் உலக ஆசைகளையெல்லாம் அடக்குவதற்கு அவஸ்யமானவற்றைச் சேகரித்து வைத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் உலகத்தின் ஆசாபாசங்கள் உனது ஜபதபஸாதநங்களை முறித்து பங்கப்படுத்திவிடும்.

530. முதலைக்குத் தண்ணீரின்மேல் மிதந்துகொண்டு ஸுகமாய் நீந்துவதற்கு ஆசையாயினும், வேட்டைக்காரர்கள் அதைத் தண்ணீரின்மேல் பார்த்தவுடன் சுடுவதற்குக் குறிவைத்துப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். ஆகவே அது எப்பொழுதும் தண்ணீருக்குள்ளேயேயிருந்து அதனின்று வெளியே கிளம்பாமல் இருக்கவேண்டியிருக்கிறது. அப்படியிருந்தபோதிலும், எப்பொழுதாவது ஒரு தக்க ஸமயம் கிடைக்கும்பொழுது, அது ஹூஸ் என்ற ஒருவித சத்தத்துடன் மேலே

* சாராயம்.

ளழும்பி அகன்ற நீர்ப்பரப்பின் மீது ஸுகமாய் நீந்திக் கொண்டிருக்கிறது. உலகமாகிய வலையிலே யகப்பட்டுக்கொண்டு தவிக்கும் மனிதனே, நீயும் ப்ரஹ்மாநந்த ஸாகரத்தின் மேல் நீந்தப்பார்க்கின்றாய். ஆனால் ஸம்ஸார தாபங்களின் போராட்டத்தினால் உன் உத்தேசம் பங்கமுற்றுப்போகின்றது. ஆனபோதிலும் உன் மநத்தை மாத்திரம் உற்சாகமாய் வைத்துக்கொண்டு, கொஞ்சம் ஒழிவு கிடைக்கும்பொழுதெல்லாம் உள்ளன்புடன் ஈசனைப் ப்ரார்த்தித்து அவன்முன் உன் குறைகளையும் துக்கங்களையும் விண்ணப்பம் செய்வாயாகில், அவர் தக்க ஸமயத்தில் உனக்கு முக்தியளித்து, நீ பேரின்பக்கடலிலே ஸுகமாய் நீந்தி விளையாடக் கருணை கூர்வார்.

531. வேலைக்காரி தன் எஜமானன் வீட்டை நோக்கி "அது எங்கள் வீடு" என்கிறாள். ஆனால் அந்த வீடு அவளுடையதன்றெனவும், அவள் சொந்த வீடு வெகுதூரத்தில் வர்த்தமாந புரத்திலோ நவத்வீபத்திலோ உள்ள ஒரு க்ராமத்திலிருக்கிறதென்றும் அவளுக்குத் தெரியாதா? நன்றாகத் தெரியும். அவளுடைய எண்ணமெல்லாம் தன் க்ராமத்திலுள்ள வீட்டின்மேல் தானே இருக்கிறது. மறுபடியும் அவள் தன் கையில் வைத்திருக்கும் தன் எஜமானன் குழந்தையைப் பார்த்து, "எங்கள் ஹரி (அதுதான் அக் குழந்தையின் பெயர்) அதிக பொல்லாதவனாய்ப் போய்விட்டான்" என்றும், "எங்கள் ஹரி இதையும் அதையும் தின்ன வேண்டுமென்கிறான்" என்றும் இப்படியெல்லாம் சொ

கிறாள். ஆனால் அவளுக்கு ஹரி தன் மகன் அல்ல வென்று தெரியாதா? நன்றாய்த் தெரியும். ஆதலால் என்னிடத்தில் வருபவர்களுக்கு, இந்த வேலைக்காரி யைப்போல் உலகப்பற்றின்றி யிருக்கவேண்டு மென் றும், இவ்வுலகத்திலேயே இருந்தாலும் அதன் மாயை க்கு உட்படாமல், அனைத்துயிர்க்கும் பிறப்பகமாய், ஆநந்த நிலயமாய் விளங்கும் பரம்பொருளின்மேல் மந தைச் செலுத்திப் பக்தி பூர்வகமாய்ப் ப்ரார்த்திக்க வேண்டுமென்றும் உபதேசிக்கின்றேன்.

532. கல்விகேள்விகளில் தேர்ந்த ஓர் அந்தணர் ஒரு காலத்தில் ஒரு விவேகியான அரசனிடம் சென்று "மஹாராஜா, நான் சொல்வதைச் சிறிது செவிசாய்த் துக் கேட்கவேண்டும். நான் வேதஶாஸ்த்ரங்களைக் கச டறக் கற்றிருக்கின்றேன். உனக்கு மஹாபுராணமா கிய ஸ்ரீமத்பாகவத மென்னும் மோக்ஷ ஶாஸ்த்ரத்தை உபதேசிக்கக் கருதியிருக்கின்றனன்" என, மஹாமே தாவியான அவ்வரசன், பாகவதத்தை நன்றாய்ப் படித் தவன் அரசனது ஆஸ்தானத்திற் கிடைக்கும் கௌரவ த்தையும்செல்வத்தையும்விடத்தன் ஆத்மலாபத்தையே அதிகமாய்த் தேடமுயல்வான்என்பதை நன்குணர்ந்தவ னானபடியால், அவ்வித்வானை நோக்கி "ப்ராஹ்மணோத் தமரே,அடியேனுக்குபதேசிக்கக் கருதியிருக்கும் ஶாஸ் த்ரத்தைத் தாங்களே நன்றாய்ப் படிக்கவில்லையென்று தோற்றுகிறது. தங்களை ஆசார்யனாய் வைத்துக்கொள் வதில் அடியேனுக்குச் சிறிதேனும் ஆக்ஷேபமில்லை யாயினும், தாங்கள் முதலில் சென்று அந்த ஶாஸ்த்ரத்

தை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து வரவேண்டு மென்பதுதான் அடியேனது வேண்டுகோள்" என்றான். இதைக் கேட்டதும் அந்தவேதியர் வந்தவழியேசெல்வாராகித் தமக்குள்ளே இவ்வாறு யோசிக்கலாயினர். "நான் இத்தனை வருஷம் கஷ்டப்பட்டுப் பாகவதத்தைப் பலமுறையும் படித்திருந்தும், நீ பாகவதம் நன்றாய் படிக்கவில்லை யென்று கழறிய இவ்வேந்தன் எவ்வளவு முட்டாளாயிருக்கவேண்டும்" என்று நினைத்துக்கொண்டே தன் இருப்பிடம் போய்ச்சேர்ந்து பாகவதத்தை மீண்டும் ஒருமுறை வெகு ஜாக்ரதையாய்ப் படித்துவிட்டு அரசன்முன் போய்நின்றார். அரசன் முன்கேட்ட கேள்வியையே மறுபடியும் கேட்டு அந்த ப்ராஹ்மணனை அனுப்பிவிட்டான். ப்ராஹ்மணர் மிகவும் மனவருத்தமுற்று, அரசன் தன்னை அவ்வாறு நடத்துவதற்கு ஏதோ தக்க காரணமிருக்கவேண்டு மென்று கருதி, உடனே வீடு வந்து சேர்ந்து ஓர் அறையில் தாளிட்டுக் கொண்டு ஏகாந்தமாய் உட்கார்ந்து ஸ்ரீபாகவதத்தை மிகுந்த கருத்துடன் படிக்க ஆரம்பித்தார். படிக்கப் படிக்க அவ்வரிய நூலின் மறைபொருள்கள் ஒவ்வொன்றாய் அவர்மனத்தில் ஒளிவீசத்தொடங்கின; ஸந்தேஹ விபரீதங்களெல்லாம் நீங்கி மாசற்ற விசும்பு போல் விளங்கிய அவரது ஞான த்ருஷ்டிக்குச் செல்வமும், கௌரவமும், அரசரும், ஆஸ்தாநங்களும், பணமும் புகழும் நீரின்மேற் குமிழிபோல் தோன்றி மறைந்தன. அன்றுமுதல் அவர் பரமேஸ்வரனைப் பூஜித்துப் பரிபூர்ண நிலை யடைவதிலேயே தம் கருத்தை யெல்லாம் செலுத்தத் தொடங்கினமையால், அரசனிடம் திரும்

பிப்போகவேயில்லை. சிலவருஷம் கழிந்தபின், அரசன் ப்ராஹ்மணனை நினைத்துக்கொண்டு, அவர் என்ன செய்கிறாரோ பார்த்துவரலாமென்று அவரிருப்பிடம் சென்று பார்க்க, அவர் கருணை நிறைந்து திவ்ய தேஜோமயமாய் ஜ்வலிப்பதைக் கண்டு அவர்முன் ஸாஷ்டாங்கமாய் விழுந்து பணிந்து, "இப்பொழுதுதான் ஶாஸ்த்ரத்தின் நிச்சயப்பொருளைத் தேவரீர் அறிந்துகொண்டீர்களென்று நினைக்கிறேன். இனி அடியேனைக் கருணைகூர்ந்து ஶிஷ்யனாய் அங்கீகரித்தருளினால், தேவரீர் திருவடிகளுக்கு ஸம்பந்தியாக ஸித்தனாயிருக்கின்றேன்" என்றான்.

533. ஒரு ஞானியும் ஒரு பக்தனும் ஒரு சமயம் ஒன்று சேர்ந்து ஒரு காட்டின் வழியே போய்க்கொண்டிருக்கையில், வழியில் தூரத்திலே வருகிற ஒரு புலியைக்கண்டனர். அப்பொழுது ஞானியானவன், "நாம் ஓடிப்போக வேண்டியதில்லை. ஸர்வசக்தியுள்ள பகவான் நம்மை நிச்சயமாய்க் காப்பாற்றுவார்" என்றான். அதற்குப் பக்தன், "வேண்டாம் அண்ணா, நாம் ஓடிப்போவோம் வா. நம் சக்தியாலேயே முடித்துக்கொள்ளக் கூடிய காரியத்துக்குப் பகவானை ஏன் வீணாகத் தொந்தரவுபடுத்தவேண்டும்" என்றான்.

534. ஒரு வெள்ளாட்டுக்குட்டி தன் தாயுடன் வைசாக மாஸத்தில் விளையாடிக்கொடிருக்கையில், தன் தாயாரினிடம் குசாலாய்த் துள்ளியோடி, ராஸபுஷ்பங்களைப் பறித்து ராஸக்ரீடை யுத்ஸவம் கொண்டாட ஆசையாயிருக்கிறதென்று சொல்லிற்று. அதற்குக்

தாயாடு, "நல்லது என் செல்வமே, அது நீ நினைப்பது போல் அவ்வளவு எளிதன்று. அவ்வுற்சவத்தைக் கொண்டாடவேண்டுமானால் அதற்கு முன் எத்தனையோ அபாயங்களுக்கு உட்பட வேண்டிவரும். வருகிற புரட்டாசி மாதமுதல் ஐப்பிசி மாதம்வரையில் உனக்கு நல்ல காலமன்று; யாராவது உன்னைத் துர்க்காதேவிக்குப் பலியிடும்பொருட்டுப் பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள். அப்புறம் நீ காளிபூஜை முடியும் வரையில் காத்திருக்கவேண்டும். உன் அதிஷ்டத்தால் அந்த ஸமயத்தில் நீ தப்பித்துக்கொண்டபோதிலும், பிறகு ஜகத்தாத்ரிபூஜை வரப்போகிறது. அப்பொழுது நமது ஜாதியில் உயிர் தப்பியிருக்கும் ஆட்டுக்கடாக்களையெல்லாம் வெட்டிவிடுவார்கள். இந்த அபாயங்களுக்கெல்லாம் உன் அதிஷ்டத்தால் நீ தப்பிப்பிழைத்தால், பிறகு கார்த்திகை மாஸத் தொடக்கத்தில் ராஸபுஷ்போத்ஸவம் கொண்டாடலாம்'' என்றது. இந்தக் கதையில் தாயாடு கூறியபடி, நமது வாழ்நாட்களில் நமக்கு நேரிடவிருக்கும் பலவித அபாயங்களையும் நாம் முன்னதாகவே தீர்க்கமாய் ஆலோசித்து, இளமைப் பருவத்தில் நம் மனத்தில் உதிக்கும் ஆசைகளுக்கெல்லாம் இடங்கொடுத்து விடாமல், அவற்றை ஜாக்ரதையாய் அடக்கிக்கொண்டு வரவேண்டும்.

535. நால்வர் குருடர் சேர்ந்து ஒரு urdwan)
பார்க்கப்போனார்கள். ஒருவன் யானையின் ரா,விஷ்ணு
ட்டு விட்டு, யானை தூணைப்போலிருக்கி திவாதமுண்
மற்றொருவன் அதன் துதிக்கையைத் கூறினார்கள்.

யானை ஒரு தடிக்கொம்பைப்போல் இருக்கிறதென்றான். இன்னொருவன் அதன் வயிற்றைத் தொட்டுவிட்டு, யானை ஒரு பெரிய சாலைப்போ லிருக்கிறதென்றான். நாலாவது குருடன் அதன் செவிகளைத்தொட்டுவிட்டு, யானை ஒரு பெரிய முறம்போலிருக்கிறதென்றான். இவ்வாறு இவர்கள் யானையின் உருவத்தைப்பற்றித் தமக்குள்ளேயே விவாதப்பட்டுக்கொண்டிருக்கையில், வழிப்போக்கன் ஒருவன் இவர்கள் போராடிக்கொண்டிருப்பதைக் கண்டு "நீங்கள் எதைப்பற்றி வழக்காடுகிறீர்கள்" என்று கேட்க, அவர்கள் நடந்ததையெல்லாம் சொல்லி, அவனை மத்யஸ்தனாயிருந்து வழக்கைத் தீர்க்கும்படி வேண்டிக்கொண்டார்கள். அவன் அவர்களைப் பார்த்து, "உங்களில் எவனும் யானையைப் பார்க்கவே யில்லை. யானை தூணைப்போலில்லை; அதன் கால்கள்தாம் தூண்களைப்போலிருக்கின்றன. அது பெரிய சாலைப்போலவும் இல்லை; அதன் வயிறுதான் பெரிய சாலைப்போல் இருக்கின்றது. அது பெரிய முறம் போலவும் இல்லை; அதன் செவிகள்தாம் முறத்தைப் போல் இருக்கின்றன. அது தடிக்கொம்பைப் போலவும் இருக்கவில்லை; அதன் துதிக்கைதான் அப்படியிருக்கிறது. இவை யெல்லாம் சேர்ந்திருக்கும் ஜந்து தொகுதியே யானை யென்று சொல்வது" என்றான்.

534. கடவுளின் ஏகதேசமான அம்சத்தைக் கண்டவர்கள் அதனைப்பற்றித் தாம் வாதாடுகின்றனர்.

வைசாக மா

தாயாரினிடட

களைப் பறித்து கண்டாகர்ணனைப்போல் மதத்தில் மூடப் பற்றுடையவர்களாயிருக்கவேண்டிராதே. கண்டாகர்ணனெனும் சிவ

ஆசையாயிருக்

பக்தன் சிவனுக்கே பரத்வம் கூறி மற்ற தேவர்களைப் பகைத்து வந்தான். ஒருநாள் சிவபெருமான் அவன் எதிரில் தோன்றி "நீ இதர தெய்வங்களைப் பகைத்து வரும்வரையில், எனக்கு உன்னிடத்தில் ப்ரீதி யுண்டாகாது" என்றார். அவன் எதற்கும் அடங்காப் பெரும் முரடனாயிருந்தபடியால், சில நாள் கழித்து மீண்டும் சிவபெருமான் அவன் எதிரில் வந்து "இந்தப் பகைக்கும் குணம் உன்னிடத்தில் இருக்கும் வரையில், ஒரு காலும் நான் உன்மேல் ப்ரீதியாயிருக்கமாட்டேன்" என்றார். அதற்குஅவன் ஒன்றும் பதில்பேசாமல் மௌனமுற்றிருந்தான். சிலநாள் சென்றபின் மறுபடியும் சிவபெருமான் அவனெதிரே தோன்றினார். இந்தத் தடவை அவர் ஹரிஹரவடிவமாய்த் தோன்றினார். அதாவது அவரது திருமேனியின் ஒருபாகம் சிவஸ்வரூபமாயும் மற்றொருபாகம் விஷ்ணுஸ்வரூபமாயும் காணப்பட்டன. அப்பொழுது சிவபெருமான் அவனை நோக்கி "உன் பிடிவாதம் மாற்றவொண்ணாததா யிருக்கிறது. நான் இவ் ஈருருவத்தைத் தாங்கிவந்த தன் காரணம் என்னவெனில், ஸகலதேவர்களும் தேவியரும் அகண்டமான அத்விதீயப் பரம்பொருளின் பல்வேறு தோற்றங்களேயன்றி வேறில்லையென்பதை நிச்சயமாய் உனக்குக் காட்டும் பொருட்டேயாம்" என்றார்.

537. ஒரு காலத்தில் வர்த்தமானபுர (Burdwan) மஹாராஜாவின் ஸபையில், சிவன் உயர்ந்தவரா, விஷ்ணு உயர்ந்தவரா என்று பண்டிதர்களுக்குள் விவாதமுண்டாயிற்று. சிலர் சிவனுக்குப் பரத்வம் கூறினார்கள்.

மற்றவர்கள் விஷ்ணுவுக்குப் பரத்வம் கூறினார்கள். இந்த விவாதம் படிப்படியாய் வளர்ந்து கடைசியில் வெகு விபரீதமாய் முதிர்ந்துவிட்டபோது, புத்திசாலியான ஒரு பண்டிதர் ராஜனை நோக்கி, "மஹாராஜா, நான் சிவனையும் பார்க்கவில்லை, விஷ்ணுவையும் பார்க்கவில்லை. அப்படியிருக்க, இருவருக்குள் இன்னார்தான் பெரியவர் என்று நான் எப்படி சொல்லுவேன்?" என்றார். அந்தப் பண்டிதர் எழுந்து அவ்வாறு மொழியவே வாதம் புரிகிறவர்களுக்குள் எவனும் கடவுளைக் கண்டிராததனால் வாதம்நின்றுபோய்விட்டது. ஆகையால்ஒரு போதும் தேவர்களுக்குள் உயர்வு தாழ்வைப்பற்றி வாதம் புரியக்கூடாது. ஒருவனுக்குக் கடவுள் நிஜமாய்ப் ப்ரத்யக்ஷமாகும்பொழுது, மற்ற தேவர்களும் அதே கடவுளின் ஸ்வரூபமே என்னும் உண்மையை அவனே யறிந்துகொள்ளுவான்.

538. கல்கத்தாவுக்குப் போவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. ஒருவன் ஒரு தூரக் க்ராமத்திலுள்ள தன்வீட்டிலிருந்து ராஜதானி நகரத்துக்குப்போகப் புறப்பட்டு வழியில் அகப்பட்ட ஒருவனைப்பார்த்து, "கல்கத்தாவுக்கு சீக்கிரமாய்ப் போகவேண்டுமானால் எந்தவழியே போகவேண்டும்" என்று கேட்க, அவன் "இந்தவழியே போகலாம்" என்றான். அவன் அவ்வழியே சிறிதுதூரம் சென்று, இன்னொருவன் எதிரில் வர, அவனைப்பார்த்து, "கல்கத்தாவுக்குப்போக ஸமீபமான வழி இதுதானா?" என்று கேட்டதற்கு, அவன் "ஒருகாலுமில்லை. நீ வந்தவழியே திரும்பிப்போய்,

அங்கிருந்து இடது பக்கமாய்ச்செல்லும் பாதை வழியே போகவேண்டும்" என்று சொல்லப் ப்ரயாணி அவ்வழியே சென்ருன். அந்தப் பாதை வழியிலும் சிறிது தூரம் சென்றபிறகு, இன்னொரு மனிதனைக் கண்டு கேட்க, அவன் கல்கத்தாவுக்கு வேறொருவழி யைக் காண்பித்தான். இப்படியாக அந்தப் ப்ரயாணி பலவழிகளிலும் சென்று ப்ரயாணம் முடியாமல், ஒரு வழியைவிட்டு மற்றொருவழிமாறிச் செல்வதிலேயே நாளைக்கழித்தான். அவன் கல்கத்தாவுக்குப் போய்ச் சேரவேண்டுமென் றெண்ணியபடியால், முதல் மனிதன் காட்டின வழியையே பிடித்துக்கொண்டு போயிருக்கவேண்டும். அதுபோல் கடவுளை அடைய விரும்புகிறவர்கள் ஒரே குருவைப் பின்பற்றவேண்டும்.

539. ஒரு ப்ராஹ்மணன் ஒரு தோட்டம் புதிதாய் வைக்கத்தொடங்கி அல்லும்பகலும் அதைப் பாதுகாத்து வந்தான். ஒருநாள் பசு ஒன்று தோட்டத்தில் நுழைந்து ப்ராஹ்மணன் அதிக அக்கறையுடன் காப்பாற்றிவந்த ஒரு மாஞ்செடியை மேய்ந்துவிட்டது. தன்னுடைய அருமையான மாங்கன்றைப் பசு மேய்ந்துவிட்டதைக் கண்டு ப்ராஹ்மணன் அதைப் பலமாய் அடித்தபடியால், அவ்வடியின் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் அது இறந்துபோய்விட்டது. ப்ராஹ்மணன் பசுவைக் கொன்றுவிட்டானென்ற ஸமாசாரம் காட்டுத்தீயென எங்கும் பரவிவிட்டது. இந்தப் ப்ராஹ்மணன் போலி வேதாந்தியானதால், பசுவைக்கொன்ற தோஷம் தன் தலைமேல் சுமத்தப்பட்டதைப்

பார்த்து, "நான் பசுவைக் கொல்லவில்லை. என் கைதான் அதைக்கொன்றது. கைக்கு அதிதேவதை இந்த்ரனானதால், பசுவைக் கொன்ற பாதகன் இந்த்ரனேயன்றி நான் அல்லேன்" என்று சொன்னான்.

தேவலோகத்திலுள்ள இந்த்ரன் இதையெல்லாங் கேட்டு ஒரு கிழப் ப்ராஹ்மணனைப்போல் வேஷம் பூண்டு தோட்டக்காரனான ப்ராஹ்மணனிடத்திற்கு வந்து "ஐயோ இது யாருடைய தோட்டம்?" என்று வினவினான்.

ப்ராஹ்மணன்—"என்னுடையது."

இந்த்ரன்—"இந்தத் தோட்டம் வெகு நேர்த்தியாயிருக்கிறது. நீர் திறமையுள்ள தோட்டக்காரனை வைத்துக்கொண்டிருக்கிறீர்போலும். இந்த மரங்கள் எவ்வளவு ஒழுங்காயும், விசித்திரமாயும் நடப்பட்டிருக்கின்றன பாரும்."

ப்ராஹ்மணன்—"ஐயோ, அதுவும் நான் செய்தது தான். மரங்களெல்லாம் என்னுடைய நேர்ப்பார்வையில் நான் சொல்லியபடியே நடப்பட்டன."

இந்த்ரன்—"அப்படியா! ஓ! நீ வெகு கெட்டிக்காரன். ஆனால் இந்த ரோட்டு யார் போட்டது? மெத்த ஒழுங்காயும் நேர்த்தியாயும் வேலை தீர்ந்திருக்கிறதே."

ப்ராஹ்மணன்—"இவை யெல்லாம் நான் செய்தது தான்."

அப்போது இந்த்ரன் கைகளைக் கூப்பிக்கொண்டு, "இவையெல்லாம் என்னுடையதே! இந்தத் தோட்ட

த்தில் செய்திருக்கும் எல்லா வேலைக்கும் புகழ் எனக்கே வரவேண்டும்' என்கிறாயே; பசுவைக் கொன்ற பாவத்திற்கு மாத்திரம் ஏழை இந்த்ரனை ஆளாக்குவது அடுக்குமா?" என்றான்.

540. ஒரு நள்ளிரவில் ஒரு திருடன் ஒரு ராஜாவின் அரண்மனைக்குள் நுழைந்தான். அப்பொழுது ராஜா ராணியுடன் "நம் பெண்ணை ஆற்றங்கரையில் வசித்துக்கொண்டிருக்கும் ஸாதுக்களில் ஒருவனுக்குக் கொடுக்க யோசித்திருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டிருந்ததை அவன் ஒட்டுக்கேட்டுத் தனக்குள்ளேயே இவ்வாறு யோசிக்கலாயினன். "எனக்கு நல்லகாலம் பிறந்துவிட்டது. நான் நாளைக்கு ஸாதுவைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு ஸாதுக்களின் மத்தியில் போய் உட்காரப்போகிறேன். அதிஷ்டமிருந்தால் ராஜாவின் பெண் எனக்குக் கிடைக்கமாட்டாளா பார்ப்போம்" என்று யோசித்து மறுநாள் அவ்வாறே செய்தான். ராஜன் அனுப்பிய உத்யோகஸ்தர்கள் ஸாதுக்களிடம் வந்து ராஜபுத்திரியை விவாஹம்பண்ணிக்கொள்ளுமாறு அவர்களைப் ப்ரார்த்தித்தபொழுது அவர்களுள் ஒருவரும் இஷ்டப்படவில்லை. கடைசியில் அவர்கள் ஸாதுவேஷம் பூண்டிருந்த இந்தத் திருடனிடம் வந்து "அரசன் மகளைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறாயா?" வென்று கேட்க, திருடன் வாய்பொத்திப் பேசாதிருந்தான். உத்யோகஸ்தர்கள் திரும்பிப்போய் "பால ஸாது ஒருவன் இருக்கிறான். அவனைத் தான் கல்யாணம் பண்ணிக்கொள்ளும்படி தூண்டலாம். மற்ற ஸாதுக்களில் எவு

னும் இஷ்டப்படவில்லை'' என்றார்கள். இதைக் கேட்டதும் அரசன் வேறு விதியின்றி தானே நேரில் அந்த ஸாதுவினிடம் சென்று தன் பெண்ணைப் பாணிக்ரஹணம் பண்ணிக்கொண்டு தன்னைக் கௌரவிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்தான். ஆனால் அரசன் அந்தத் திருடனண்டை போகவே, திருடன் மநம் மாறிப்போய் விட்டது. அவன் தனக்குள்ளேயே இவ்வாறு யோசிக்கலாயினன். ''நான் ஸாதுவின் வேஷத்தைப் போட்டுக் கொண்டதனு லல்லவோ அரசனே என்னிடம் வந்து கெஞ்சி ப்ரார்த்தித்துக்கொள்ளும்படியான ஸ்திதிக்கு வந்திருக்கிறேன், உண்மையாகவே நான் ஸாதுவானால் இன்னும்எனக்கு எவ்வளவுசிறந்த கௌரவங்கள் கிடைக்கா!'' இவ்வாறு அவன் நினைக்க நினைக்கத் திருட்டுவேஷம் போட்டுகொண்டு அரசன் மகளை மணக்கவேண்டுமென்னும் எண்ணத்தை மறந்து, அன்று முதல் தன் பழைய வழிகளை யெல்லாம் ஒழித்துவிட்டு, உண்மையான ஸாதுவாவதற்கு வேண்டிய ஸாதநங்களைச் செய்யலாயினன். அவன் கல்யாணமே பண்ணிக்கொள்ளாமலிருந்து கடைசியில் மஹாயோகியாயினன். நல்ல விஷயத்தை அநுஸரிப்பதால் எப்பொழுதும் நன்மையே விளையும்.

ஒரு ஸாமாந்யமான திருடன் ஸாதுவின் வேஷம் பூண்டு ஸாதுக்களின் ஸஹவாஸத்தின் பெருமையால் அவ்வளவு சீக்ரத்திலேயே மஹாயோகியாவானாகில், உண்மை ஞானிகளின் பெருமையையும் பரிசுத்தமான அவர்தம் ஸஹவாஸத்தின் அற்புத சத்தியையும் வர்ணிக்க யாரால் முடியும்?

541. அளவுக்கு மிஞ்சிக் கடன்வாங்கி முழுகிப் போன ஒருவன் கடன்காரர்களுக்குப் பயந்து பைத்யம் பிடித்தவன்போல் நடிக்கத்தொடங்கினான். எத்தனை வைத்யர்கள் சிகிச்சைசெய்தும், அந்த வ்யாதியை நிவர்த்திசெய்ய முடியவில்லை. அவனுக்கு வைத்யம் செய்யச் செய்ய, அவன் பைத்யம் அதிகரித்துக்கொண்டே வந்தது. கடைசியில் ஒரு புத்திசாலியான வைத்யன் இதன் உண்மையைக் கண்டறிந்து அந்தப் போலிப் பைத்யக்காரனை ஒருபுறமாய் அழைத்துக்கொண்டுபோய் "ஏனையா இப்படி செய்கிறீர்? நீர் இப்பொழுது பைத்யக்காரனைப்போல் பாசாங்கு பண்ணுகிறீர். கடைசியில் வாஸ்தவமாகவே உமக்குப் பைத்யம்பிடித்துப் போய் விடும். ஏற்கனவே சில பைத்யக்குறிகள் உம்மிடத்தில் தோன்றுகின்றன. கடைசியில் வேடிக்கை வினையாய்ப் போய் முடியும், ஜாக்ரதை" என்று பயமுறுத்தினான். இவ்வாறு அவனுக்கு நேராய் இடித்துச் சொன்ன புத்திமதியால் அவன் ஜாக்ரதைப்பட்டுப் பைத்யநடிப்பை விட்டுவிட்டான். எதைப்போல் ஒருவன் ஸதாகாலமும் நடித்து வருகிறானோ அதுவாகவே அவன் கடைசியில் ஆய்விடுகின்றான்.

542. ஒரு ப்ராஹ்மணனையும் அவனுடைய தாழ்ந்த ஜாதி வேலைக்காரனையும் பற்றிய கதை.

மாயை இன்னதென்று நாம் அறிந்துகொண்டவுடனே, அது பறந்தோடிவிடுகிறது. ஒரு குரு தன் ஶிஷ்யனுடைய ஊருக்குப்போய்க் கொண்டிருந்தார். தன்னுடன்கூட வேலைக்காரன் எவனும் இல்லாததால் வழியில் ஒரு சக்கிலியைப் பார்த்து "அடே, நீ என்னி

டம் வேலைக்காரனாயிருக்க வருகிறாயா? உனக்கு நல்ல சாப்பாடுபோட்டுக் காப்பாற்றுகிறேன், வா" என்று கூப்பிட, அந்தச் சக்கிலி, "தெண்டம் சாமீ, நான் கீழ் ஜாதியாச்சுதே, நான் எப்படி உங்களுடைய வேலைக்காரனாய் இருப்பேன்" என்று விடைபகர்ந்தான். குரு அதற்கு, "பாதகமில்லை, நீ இன்னானென்று ஒருவருடனும் சொல்லாதே. ஒருவருடனும் பேசாதே, ஒருவரிடத்திலும் ஸ்நேஹமும் பண்ணாதே" என்று சொன்னார். சக்கிலி அப்படியே ஒப்புக்கொண்டு போனான். ஒருநாள் ஸாயங்காலம் குரு தன் ஶிஷ்யன் வீட்டில் ஜபம் செய்துகொண்டிருக்கையில், மற்றொரு ப்ராஹ்மணன் வந்து இந்தக் குருவின் வேலைக்காரனைப் பார்த்து "அடே, என்னுடைய பாதரக்ஷை அதோ இருக்கிறது அதை எடுத்துக்கொண்டுவா" என்று சொன்னார். முந்தியே எஜமானன் சொல்லியிருக்கிற வார்த்தைப்படி இவன் பேசாமலிருந்தான். மறுபடியும் அந்தப் ப்ராஹ்மணன் கேட்க, இவன் சும்மாவிருந்தான். இப்படி அடுத்தடுத்துச்சொல்லியும் சக்கிலி இருந்த இடத்தை விட்டு நகராதிருந்ததைக் கண்டு ப்ராஹ்மணன் கோபங்கொண்டு "அடே மடையா, பிராமணனிட உத்தரவை நிராகரிக்க உனக்கு எவ்வளவு தைரியமடா? உன் ஜாதி என்ன? நீ சக்கிலியோ?" என்றார்.

சக்கிலி இதைக்கேட்டு நடுநடுங்கிப்பரிதாபத்துடன் குருவைப் பார்த்து, "சாமி, என்னைக் கண்டுபிடித்து விட்டார்கள், நான் இனி இங்கேயிருக்கமாட்டேன், ஓடிப்போகிறேன்" என்று சொல்லி ஓட்டம்பிடித்தான்.

543. ஹரிதாஸனென்பவன் புலிவேஷம் போட்டுக்கொண்டு ஒரு சிறுவனைப் பயமுறுத்திக்கொண்டிருந்தான். அதைக்கண்டு பயந்த குழந்தையைப் பார்த்துத் தாயானவள் "ஏண்டா பயப்படுகிறாய், என்செல்வமே, அவன் நம் ஹரியல்லவோ? அவன் கடுதாசியினால் புலியின் முகத்தைப்போல் செய்து அதையல்லவோ தலையில் மாட்டிக்கொண்டிருக்கிறான்" என்று தைர்யப்படுத்தினாள். என்னசொல்லியும் அவன் கேளாமல் ஓவென்று அலறி அழுதுகொண்டிருந்தான். கடைசியில் ஹரியே அப்புலிமுகத்தைத் தன் தலையிலிருந்து எடுத்துவிட்டுச் சிறுவன் கையில் கொடுத்து அவனைத் தேற்றினபொழுது, சிறுவன் அத் தந்திரத்தை யறிந்துகொண்டு பயப்படாதிருந்தான். அதுபோலத்தான் மாயையின் விசித்ர சக்தியைக் கண்டு மயங்கிப் பயப்படுகின்றனர் உலகமாந்தரும். ஆனால் ஸச்சிதாநந்த ப்ரஹ்மந்தான் இந்த மாயையெனும் திரைக்குள் மறைந்திருக்கின்றதென்பதை யுணர்ந்து அத்திரையைத் தாண்டிச் சென்றவர்களுக்கு எக்காலமும் பயமாவது துன்பமாவது கிடையாது.

544. இரண்டு மனிதர்கள் சேர்ந்து ஶவஸாதநமெனும் பயங்கரமான தாந்த்ரிக கர்மத்தைச் செய்து காளிதேவியைத் தங்களுக்குப் ப்ரத்யக்ஷமாகும்படி ப்ரார்த்தித்தார்கள். (இந்தக் கர்மத்தை மயானத்தில் உபாஸகன் இருண்ட ராத்ரியில் பிணத்தின்மேல் உட்கார்ந்து செய்யவேண்டும்.) அப்பொழுது ஒருவன் அவ்விருண்ட ராத்ரியின் பயங்கரத்தோற்றங்களைக்

19

கண்டு கலக்கமுற்றுப் பைத்யம்பிடித்தவன்போல் ஆய்விட்டான். மற்றவனோ இரவு முழுவதும் விழித்திருந்து விடியற்காலத்தில் அம்பிகையைப் ப்ரத்யக்ஷமாய்க் காணும் பாக்யம் பெற்றான். அப்பொழுது அவன் தேவியை நோக்கி, "தாயே, அவன் ஏன் பைத்யக்காரனாய்விட்டான்" என்று கேட்க, அம்பிகை "குழந்தாய், நீயும் பூர்வஜன்மங்களில் எத்தனையோ தடவைப் பைத்யக்காரனாகி, கடைசியாக இப்பொழுது என்னைக் காணும் பாக்யம் பெற்றாய்" என்றருளிச்செய்தாள்.

545. உத்யோகமில்லாதிருந்த ஒருவனை யேதாவதோர் உத்யோகம் ஸம்பாதித்துக்கொள்ளும்படி அவன் மனைவி ஸதா நிர்ப்பந்தப்படுத்திவந்தாள். ஒருநாள் அவன் தன் மகன் தேஹஸௌக்யம் தப்பி அபாயநிலையிலிருக்கையில், உத்யோகம் தேடப் புறப்பட்டுச்சென்றான். சென்ற சிலநாளைக்கெல்லாம் மகன் பரலோகமடையவே, பந்துக்கள் தகப்பனைத் தேடினார்கள். எங்கு தேடியும் அவன் அகப்படவில்லை. கடைசியில் ஒருநாள் ஸாயங்காலம் அவன் வீட்டுக்குத் திரும்பிவந்தபொழுது, "மகன் சாகப் படுத்தபடுக்கையாய்க் கிடக்கையில், இப்படியும் ஆசையாதரவின்றி வீட்டைவிட்டுப் போவது தர்மமா?" என்று எல்லோரும் கண்டிக்கவே, தகப்பனானவன்: "சரிதான், எனக்கு எழு பிள்ளைகள் இருந்ததாகவும், அவர்களுடன் நான் வெகு ஸந்தோஷமாய்க் காலத்தைக் கழித்ததாகவும் ஒருகாலத்தில் கனவுகண்டேன். தூங்கி யெழுந்தபொழுது, அஃதெல்லாம் வெறுங்கனவே என்று தேர்ந்தேன். அப்

பொழுது நான் அவ்வேழு பிள்ளைகளின் கனவுக்காக துக்கிக்கவில்லை. இதற்கு மாத்திரம் ஏன் துக்கப்படவேண்டும்?" என்றான்.

546. அபாத்ர தாநம் செய்யாதே. ஏனெனில் சிலருக்குச் செய்யும் தாநம் புண்யத்திற்குப் பதிலாகப் பாபத்தை யுண்டாக்குகின்றது. ஒருவன் இரப்பவர்களுக்கெல்லாம் அந்நமளிக்கும் தர்மசாலை ஒன்று வைத்திருந்தான். ஒருநாள் கசாப்புக்கடைக்குப் பசுவை யோட்டிக்கொண்டு போகும் புலையன் ஒருவன் நடுவழியிற் களைத்து, அந்தத் தர்மசாலைக்குப்போய்ச் சாப்பிட்டுத் திடமாகி உற்சாகத்துடன் பசுவை கசாப்புக்கடைக்குக் கொண்டுபோனான். கடையில் பசுவைக்கொன்ற பாபம் இரண்டு பங்காகப் பிரிக்கப்பெற்று, புலையனுக்குக் கால்பங்கும், தர்மசாலைத் தலைவனுக்கு முக்கால் பங்குமாகப் பாகிக்கப்பட்டது.

547. ஓரிடத்தில் ஒரு பாம்பு வாழ்ந்துகொண்டிருந்தது. அவ்வழியாய் யாரும் போகத்துணிவதில்லை. யாராவது போனால் அவன் உடனே அப்பாம்பால் கடிபுண்டு சாவான். ஒரு ஸமயம் ஒரு மஹாத்மா அவ்வழியாய்ச்செல்ல, அப்பாம்பு அவரைக் கடிக்கும்பொருட்டு அவர் பின்னே போயிற்று. ஆனால் அந்தப் பரிசுத்தாத்மாவை நெருங்கின வுடனே அவரது மஹிமையால் அதன் உக்ரம் ஒடுங்கிப்போய்விட்டது. அந்த யோகி அப்பாம்பைப் பார்த்து "நண்பனே, என்னைக் கடிக்க எண்ணுகிறையோ?" என்று கேட்க, பாம்பு வெட்கிப்போய்ப் பதில் சொல்லாதிருந்தது. அதன்

மேல் அந்த மஹான் "அப்பனே, கேள். இனி யாரை யும் ஹிம்ஸிக்காதே" என்றார். பாம்பு அவரை வணங்கி அப்படியே யென்று தலையை யசைத்தலும், யோகி தன் வழியே செல்ல, பாம்பும் தன் வளையில் நுழைந்து அதுமுதல் பிறரை ஹிம்ஸிக்கும் ப்ரயத்நமும் இன்றிக் குற்றமற்ற பரிசுத்த ஜீவநம் செய்யத் தொடங்கிற்று. சில நாளானவுடன், இந்தப் பாம்புக்கு விஷம் அடங் கிப்போய் விட்டது; இனி இதனால் எவருக்கும் அபா யம் உண்டாகாது, என்று அண்டையயலார்களெல்லா ரும் நினைத்து அதற்குத் துன்பஞ்செய்யத் தொடங்கி னார்கள். சிலர் அதன்மேல் கல் எறிந்தனர், சிலர் அதன் வாலைப்பற்றி யிரக்கமின்றித் தரையில் இழுத்தனர். இவ்வாறு அதற்குண்டான துன்பங்களுக்கு அளவே யில்லாமலிருந்தது. அதிர்ஷ்டவசத்தினால் முன்சொல் லிய யோகியாரே மறுபடியும் அவ்வழியாய் வந்து, அந் தப் பாம்பின் அடிபட்டு இடிந்துபோன நிலைமையைக் கண்டு பரிதாபமடைந்து, அத்தகைய ஸங்கடத்துக்குக் காரண மென்னவென்று வினவினார். அதற்குப் பாம்பு, "ஸ்வாமீ, தேவரீர் கட்டளை யிட்டருளியபடியே அடி யேன் ஒருவருக்கும் துன்பம் செய்யாமலிருந்தபடி யால் இந்தக் கதி நேர்ந்தது. எவ்வளவும் இரக்கமின்றி அவர்கள் எனக்கு இடுக்கண் இழைக்கிறார்கள்" என்று விளம்பிற்று. யோகியார் புன்சிரிப்புடன் "என் அன் புள்ள நண்பனே, பிறரைக் கடிக்க வேண்டாமென் றேனே யொழிய அவர்களைப் பயமுறுத்த வேண்டா மென்று சொன்னேனா? எந்தப் ப்ராணியையும் நீ கடிக்காதிருக்க வேண்டுவது ந்யாயமாயினும், பிறரால்

உனக்குத் துன்பம் உண்டாகாதிருக்கும் பொருட்டு, புஸ் என்று பாய்ந்து பயமுறுத்தி அவர்களைத் தூரத்திலேயே வைக்கவேண்டும்" என்றார்.

அதுபோலவே, நீ உலகத்தில் இருக்குங்காலத்தில் பிறர் உனக்கு அஞ்சி மர்யாதை செய்யும்படி வைத்துக்கொள். நீ யாருக்கும் துன்பம் செய்யாமலும் பிறரால் உனக்குத் துன்பமுண்டாகாமலும் இருக்கும்படி பார்த்துக்கொள்.

548. ஒரு செம்படத்தி தூரத்திலுள்ள கடைத்தெருவுக்குப்போய் வீடடுக்குத் திரும்புங்கால், நடுவழியில் இரவாகுந் தருணத்தில் புயல்காற்றில் அகப்பட்டுக்கொண்டமையால் அருகிலுள்ள பூக்காரன் வீட்டில் போய்த் தங்கவேண்டிவந்தது. அவ் வுதாரகுணமுள்ள பூந்தோட்டக்காரனும் அவளைத் தயவாய் உபசரித்தழைத்து, அவள் அன்றிரவு தங்கி யிருப்பதற்குத் தன் தோட்டத்துக்குப் பக்கத்திலுள்ள ஓர் அறையையொழித்துவிட்டான். ஆனால் அவ்வறை முழுவதும் நறுமணம் நிறைந்து கம்மென்று வாஸித்தபடியால், அவளுக்கு வெகுநேரம் வரையில் தூக்கம் வரவில்லை. கடைசியில தோட்டத்திலுள்ள புஷ்பங்களின் ஸுகந்தமே தன்னைத் தூங்கவொட்டாது விழித்திருக்கச்செய்தகென்றறிந்து, காலியாயிருந்த தன்மீன் கூடையில் நீர்தெளித்து மூக்கண்டை வைத்துக்கொள்ள, உடனே மெய்ம்மறந்து சுகமாய்த்தூங்கத் தொடங்கினாள். துர்வழக்க முள்ளவர்களின்மேல் அவ்வழக்கங்களுக்குள்ள சக்தியும் வல்லமையும் அவ்வளவு அதிகமா

யிருப்பதால், அவர்கள் அத்யாத்ம ஸ்வரூபத்தின் பரிசுத்தமான ஆநந்தத்தை யநுபவிக்கச் சக்தியற்றிருக்கிறார்கள்.

549. ஒரு மார்வாடி தநவான் பகவானிடம் வந்து "ஸ்வாமீ, நான் எல்லாவற்றையும் துறந்து விட்டேன், எனக்கேன் கடவுள் ப்ரத்யக்ஷமாக வில்லை" என்று கேட்கப் பகவாந், 'உன் மநம் எண்ணெய் வைக்கும் சித்தை (தோல்ஜாடி) யைப் போன்றது. சித்தையிலிருந்து எண்ணெயை யெல்லாம் எடுத்துவிட்டபோதிலும், எண்ணெயின் வாஸனை மாத்திரம் இருந்துகொண்டேயிருக்கிறது. அதுபோல் உனது மநம் உலகத்தைத் துறந்துவிட்டபோதிலும், உலக ஆசைகளின் வாஸனை மாத்திரம் இன்னும் உன்னை ஒட்டிக்கொண்டிருக்கிறது" என்றார்.

550. ஒரு ஶிஷ்யன் ஒரு ஸமயத்தில் பகவானைப்பார்த்து, "ஸ்வாமீ, காமத்தை வெல்வதெப்படி? ஜப தபங்களிலேயே நான் காலத்தைக் கழித்து வந்தபோதிலும், பாப சிந்தைகள் அடிக்கடி மநத்தில் ஜநிக்கின்றனவே" என்று கேட்கப் பகவாந் சொல்லலுற்றார். ஒருவன் ஒரு நாயை ஆசையாய் வளர்த்து வந்தான். அவன் அதைக் கொஞ்சிச் சீராட்டி, மடியில் வைத்து விளையாடி முத்தமிடுவான். ஒரு ஞானி அவனுடைய அஞ்ஞாந கார்யத்தைக் கண்டு, நாய் பகுத்தறிவில்லா மிருகமானதால் என்றைக்காவது ஒருநாள் கடித்துவிடும், ஆகையால் அதற்கு அவ்வளவு இடங்கொடுக்க வேண்டாமென்று சொன்னார். அந்தப் புத்திமதியைக்

கேட்டு அந்த ஶிஷ்யன் அன்றுமுதல் நாயைத் தூரத் தள்ளிவிட்டு, இனி எப்பொழுதும் அதைக் கொஞ்சிச் சீராட்டுவதில்லை யென்று நிச்சயம் பண்ணிக்கொண்டான். நாய்க்குத் தன் எஜமானன் எண்ணம் மாறிப் போய் விட்டதென்று தெரியாதாகையால், முன்போலவே எஜமானன் தன்னைக் கொஞ்சிச் சீராட்டுவானென்று அவனிடம் அடிக்கடி ஓடும். ஆனால் அவன் அதைப் பலமுறையும் அடித்தபடியால், அவனைப்போய்த் தொந்தரவு செய்வதை அது நிறுத்திவிட்டது. உன் நிலைமையும் அவ்வாறுதான். நீ இதுகாறும் சீராட்டிவந்த காமமென்னும் நாயை நீ ஒழித்துவிட விரும்பினால், அது உன்னை எளிதில் விட்டுச் செல்லாது. ஆயினும் அதில் பாதகம் ஒன்றுமில்லை. நீ சீராட்ட வேண்டுமென்னும் எண்ணத்துடன் அந் நாய் உன்னிடம் வந்தபோதிலும், நீ அதற்கிடங்கொடாமல், அஃது உன்னை நெருங்கும்போதெல்லாம் நன்றாய்த் தவடை சுத்திசெய்து வருவாயாகில், நாளாவட்டத்தில் அதன் தொந்தரவு ஒழிந்துபோகும்.

551. ஒரு புருஷனும் பெண்சாதியும் ஒரே காலத்தில் உலகத்தைத் துறந்து ஒன்றாய்ச் சேர்ந்து புண்ய க்ஷேத்ர யாத்ரைசெய்து வந்தார்கள். ஒருநாள் அவர்கள் நடந்துகொண்டிருக்கையில், சற்று முன்னே போய்க்கொண்டிருந்த புருஷன் வழியில் ஒரு வைரத்தைக் கண்டான். கண்டதும், தன் மனைவி அதைப் பார்த்து ஒருவேளை அதன்மேல் ஆசைப்பட்டால், ஸந்யாஸத்தின் பலம் போய்விடுமென்றஞ்சி, மண்ணைக்கிறி

அதை மறைக்க முயன்றுகொண்டிருக்கையில், மனைவி அங்கே வந்து என்ன செய்கிறீர்களென்று கேட்டாள். புருஷன் உண்மையைச்சொல்லாமல் ஏதோ ஒரு போக்குக் காட்டினான். அவள் எப்படியோ அது வைரமென்று கண்டு புருஷனுடைய கருத்தையு முணர்ந்து, "வைரம் வேறு, மண்வேறு என்ற பேதவுணர்ச்சி உங்களுக்கு இன்னும் இருக்கையில், நீங்கள் ஏன் உலகத்தைத் துறந்தீர்கள்" என்றாள்.

552. ஓர் ஏழைப் ப்ராஹ்மணனுக்கு ஒரு பணக்கார ஜவளிவர்த்தகன் ஸிஷ்யனாயிருந்தான். ஆனால் அவ்வர்த்தகன் ஒருவருக்கும் ஒரு காசுகூடக்கொடாத லுப்தசிரோமணி. ஒருநாள் அந்தப் ப்ராஹ்மணனுக்கு ராமாயண புஸ்தகத்தைச் சுற்றிவைக்க ஒரு துண்டு வஸ்த்ரம் வேண்டியிருந்தமையால், ஸிஷ்யனிடம் சென்று ஒரு சிறு துண்டுவஸ்த்ரம் வேண்டுமென்று கேட்டார். அதற்கு அவ்வர்த்தகன், "ஸ்வாமீ, நான் என்ன பண்ணுவேன்? சற்று முந்தித் தாங்கள் என்னைக் கேட்டிருந்தால் தங்களுக்கு வேண்டியதைக் கொடுத்திருப்பேனே. தாங்கள் கேட்கும்படியான துண்டுத்துணி என்னிடத்தில் இப்பொழுது இல்லை. ஆயினும் தாங்கள் கேட்டதை மநத்தில் வைத்துக்கொண்டிருப்பேன், தயவுசெய்து என்னை அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொண்டு மாத்திரம் இருக்கவேண்டும்" என்றான். ப்ராஹ்மணன் கோரிவந்த கார்யம் நிறைவேறாமைக்காக விசநமடைந்து திரும்பிச்சென்றான். குருவுக்கும் ஸிஷ்யனுக்கும் நடந்த ஸம்பாஷணையைக்

திரைக்குள் இருந்து கேட்ட ஶிஷ்யனது மனைவி ப்ரா ஹ்மணனை உடனே வரவழைத்து, அவரை வீட்டுக்குள்ளே அழைத்துக்கொண்டுபோய், ஸ்வாமி, தாங்கள் செட்டியாரை என்ன கேட்டுக்கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்க, ப்ராஹ்மணன் நடந்ததை யெல்லாம் சொன்னான். அதைக்கேட்டு ஶிஷ்யன் மனைவி, "ஸ்வாமி, தயவுசெய்து வீட்டுக்குப் போங்கள். நாளை காலையில் தங்களுக்கு வஸ்த்ரம் வந்து சேரும்" என்று சொல்லி ப்ராஹ்மணனை யனுப்பிவிட்டாள். வர்த்தகன் ராத்திரி வீட்டுக்கு வந்தபொழுது, "கடையை மூடிவிட்டீர்களோ?" என்று மனைவி கேட்க, "ஆமாம் என்ன விசேஷம்?" என்று புருஷன் வினவினான். அதற்கவள், "உடனேபோய்க் கடையிலிருந்து இரண்டு உயர்ந்த வஸ்த்ரம் கொண்டுவாருங்கள்" என்றாள். வர்த்தகன்: "அவ்வளவு அவஸரமென்ன? நாளைகாலையில் மிகவும் உயர்ந்த வஸ்த்ரங்கள் உனக்குக் கொடுக்கிறேன்" என, மனைவி, "அதெல்லாம் கூடாது, அந்த வஸ்த்ரங்கள் எனக்கு இப்பொழுதேவேண்டும்; இல்லாவிட்டால் வேண்டவே வேண்டாம்" என்றாள். வர்த்தகன் என்ன செய்வான் பாவம். நாளைக்கு வாரும் பார்ப்போம் என்று பொய் வாக்குதத்தம் பண்ணி ஏமாற்றி யனுப்பி விடுவதற்கென்ன ஞாநகுருவா? இது அந்தப்புரத்தில் அரசாளும் அற்புத குருவாயிற்றே. இந்தக் குருவின் கட்டளையை உடனே நிறைவேற்றினாலன்றி வீட்டில் சுகங்கிடையாதே! கடைசியில் வர்த்தகன் இரவில் அவ்வளவு நாழிகை கழித்து, தெய்வமேயென்று போய்க் கடையைத் திறந்து அவள்கேட்டவஸ்த்ரங்களைக்கொண்டுவந்தான்.

மறுநாள் உதயமாகுமுன்னமே அவ்வுத்தமி அவ்வஸ்த்ரங்களைக் குருவுக்குக் கொடுத்தனுப்பி, அவற்றைப் பெற்றுக்கொண்டு போனவன் மூலமாய் "இனி தங்களுக்கு ஏதாவது வேண்டியிருந்தால் என்னைக் கேளுங்கள்; உங்களுக்கு அவச்யம் கிடைக்கும்" என்று சொல்லியனுப்பினாள். ஆதலால் நிஷ்பக்ஷபாதமாய் அனைவர்க்கும் ந்யாயம் தீர்க்கும் ஸர்வலோக பிதாவாகிய பரமபுருஷனைப் ப்ரார்த்திப்பதைவிட, பரமதயாளுவாகிய ஜகதம்பிகையைப் ப்ரார்த்திப்பவர்களுக்குச் சீக்கிரத்தில் தேவாநுக்ரஹம் உண்டாகின்றது.

553. வினா:—தேவரீர் ஏன் மனைவியுடன் கூட இல்லறம் நடாத்துவதில்லை?

விடை:—தேவ ஸேநாதிபதியாகிய கார்த்திகேயக் கடவுள் முன்னொருகால் தம் நகத்தால் ஒரு பூனையின் கன்னத்திற் கீறினார். பிறகு வீட்டுக்கு வந்து தன் தாயின் முகத்தைநோக்க, அதில் கீறலடையாளம் இருக்கக்கண்டு, "அம்மா, உன் முகத்தில் இந்த விகாரமான கீறல் குறி எப்படி உண்டாயிற்று?" என்று கேட்க, துர்க்காதேவி "குழந்தாய், இது உன் சேஷ்டைதான், உன் நகத்தால் கீறிய காயந்தான்" என்றாள். கார்த்திகேயர் ஆச்சர்யமுற்று, அம்மா அதெப்படி? நான் உன்னை ஒருபோதும் கீறினதாக ஞாபகமில்லையே" என, ஜகதம்பிகை, "என் கண்மணியே, இன்று காலையில் ஒரு பூனையைக் கீறினையே, அதை மறந்துவிட்டையே?" என்று கேட்டாள். அதற்குக் கார்த்திகேயர் "ஆமாம், பூனையை நான் நான் கீறினதுண்டு. ஆனால்

உன் தொடையில் காயம் எப்படி உண்டாயிற்று?" என்று கேட்க, பரமேச்வரியானவள், "அடே என் அருமைக் குழந்தாய், இவ்வுலகத்தில் என்னைத் தவிர வேறொரு பொருள் கிடையாது. நானே எல்லா ஸ்ருஷ்டிப்பொருள்களின் ஸ்வரூபமாகிறேன். ஆகையால் நீ யாரைத் துன்பப்படுத்தினாலும், என்னையே துன்பப்படுத்தினவனாகிறாய்" என்றாள். இதைக்கேட்டுக் கார்த்திகேயர் ஆச்சர்யமுற்று "இனி நான் ஒருபோதும் விவாஹம் செய்துகொள்ளப்போவதில்லை. யாரை நான் மணப்பேன்? எல்லா மாதர்களும் எனக்குத் தாயாருக்கு ஸமானமாகவே யிருக்கிறார்கள்" என்று தீர்மானித்தார். நானும் கார்த்திகேயக்கடவுளைப்போலவே எல்லா மாதர்களையும் என் தாயாகிய ஜகதம்பிகையின் ஸ்வரூபமாகப் பாவிக்கின்றேன்.

551. ஒரு ப்ராஹ்மணனும் ஒரு ஸந்யாஸியும் கூடி, இம்மை மறுமை விஷயங்களைப்பற்றி வெகு நேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தார்கள். கடைசியில் ஸந்யாஸி ப்ராஹ்மணனைப் பார்த்து "இந்த உலகத்தில் மனிதன் நம்பத்தகுந்த பந்துமித்ரர்கள் ஒருவருமில்லை; ஆகையால், உலகஸம்பந்தமான பெண்டுபிள்ளைகளை நம்பி மோசம் போகவேண்டாம்" என்று போதித்தார். ப்ராஹ்மணன் அவர் சொன்னதை நம்பவில்லை. யாருக்காக நாம் இரவும் பகலும் உழைக்கின்றோமோ, அத்தகைய பெண்டு பிள்ளைகள் நமக்கு ஆபத்துக்காலத்தில் ஸஹாயம் செய்யமாட்டார்களென்று எவ்வாறு நம்புவது? என்று யோசித்து அந்தப் ப்ராஹ்

மணன், ஸ்வாமி, என்னை ஆபத்தினின்றுங் காப்பாற்றி ஸுகமாய் வைப்பதற்கு உயிரைக்கூட விடுவதற்கு ஸித்தமாயிருக்கிற என் அன்னை, எனக்குக் கொஞ்சந் தலைநோய் உண்டானாலும் அதிக வருத்தப்படுகிறளே. அப்படிப்பட்ட தாயார் ஆபத்பந்து வல்லவென்று நினைக்க என்னால் எப்படிமுடியும்?" என்றான். அதற்கு ஸந்யாஸி, "அப்படியானால் அவர்கள் உனக்கு சொந்தமானவர்களே. ஆனால் உண்மையோ அது வன்று. நீ இவ்விஷயத்தில் மோசம்போய்விட்டாய். உன் தாயாராவது, தாரமாவது தநயனாவது உனக்காகத் தம் உயிரை விடுவாரென்று நீ கனவிலும் நினைக்கவேண்டாம். வேண்டுமானால் இதை நீ பரீக்ஷித்துப்பார். இப்பொழுது நீ வீட்டுக்குப் போய்ப் பொறுக்கமுடியாத வலியால் வருந்துவதாக நடித்துக் கோவென்று கதறு. பிறகு நான் வந்து வேடிக்கையைக் காட்டுகிறேன்" என்றார்.

ப்ராஹ்மணன் அவ்வாறே போய்ச்செய்தான். நாட்டுவைத்தியர்களையும் இங்க்லிஷ் டாக்டர்களையும் கூப்பிட்டுப் பார்த்தார்கள். யார் வந்தபோதிலும் நோய் நீங்கினபாடில்லை. நோயாளியின் தாயார் பெருமூச்சு விட்டுப் புலம்பினாள்; மனைவி மக்களும் அழுதார்கள். அந்த ஸமயத்தில் ஸந்யாஸி வந்துசேர்ந்தார்.

ஸந்யாஸி நோயாளியின் கையைப் பிடித்துப் பார்த்து "இந்த நோய் அதிக விபரீதமாய் முதிர்ந்துவிட்டது. யாராவது இவனுக்காகத் தன் உயிரைக் கொடுக்கிறேனென்று முன்வந்தாலொழிய, நோயாளி

பிழைக்கும் வழியைக்காணோம்" என்றுகூற, அங்கிருந்தவர் எல்லாரும் திடுக்கிட்டு ஒருவர் முகத்தை யொருவர் பார்த்தார்கள். ஸந்யாஸியானவர், நோயாளியின் வயதுசென்ற தாயாரைப்பார்த்து "இதுவரையில் பாடுபட்டுழைத்துத் தன்னையும் இந்தக் குடும்பத்தையும் காப்பாற்றிவந்த பிள்ளையை இந்த அபர வயதில் பறிகொடுத்தபிறகு நீர்உயிரை வைத்துக்கொண்டிருப்பதும் விடுவதும் ஒன்றேயாகும். அவன் பிழைக்கும்பொருட்டு நீர் உம் உயிரைக் கொடுப்பீரானால், உம் மகனைக் காப்பாற்றுகிறேன். தாயாராகிய நீரே அவனுக்காக இவ்வளவு கஷ்டத்துக்கு உட்படாமற் போனால், இவ்வுலகத்தில் அப்படிச் செய்யவேண்டுமென்று வேறு யாருக்கு அக்கறை யிருக்கப்போகிறது ?" என்றார். அந்தக் கிழவி அழுதுகொண்டே, "ஸ்வாமிகளே, என் மகனுக்காகத் தாங்கள் என்ன உத்தரவு பண்ணினாலும் செய்யக் காத்திருக்கிறேன். என் பிள்ளையின் உயிரைப் பார்க்க என் உயிர் அவ்வளவு அருமையானதா ? அது ஒன்றுமில்லை. ஆனால் நான் போய்விட்டால் இந்தக் குழந்தை குட்டிகளெல்லாம் தவிக்குமே, அதுகளின் கதி என்னவாகும்?- என்ற எண்ணந்தான் என்னைப்பின் வாங்கச் செய்கிறது. இந்தச் சிறிதுகள் எனக்குத் துறுக்கே நிற்கிறதுகளே,- இதுவும் என் துரதிஷ்டந்தான்" என்று கதறினாள். ஸந்யாஸிக்கும் மாமியாருக்கும் நடந்த இந்த ஸம்பாஷணையைக் கேட்ட நோயாளியின் மனைவி கோவென்று அழுதுகொண்டு தன் தாய்தந்தையரைப் பார்த்து "என் அருமை அம்மாவே, அப்பாவே, உங்களை துக்கத்தில் விட்டுவிட்டு நான் எப்படி

உயிரை விடுவேன்" என்று புலம்பினாள். ஸந்யாஸி அவள் பக்கம் திரும்பி "உன் மாமியார்தான் கைவிட்டு விட்டாளே, நீயாவது உன் புருஷனுக்காக உன் உயிரைக் கொடுக்கக்கூடாதா?" என்று கேட்க, அவள், "ஸ்வாமி, எனக்கும் அவ்வளவு பாக்கியம் கிடைக்குமோ! நான் அவ்வளவு புண்யம் பண்ணவில்லையே! விதவையின் முக்காடு என் தலைமேல் ஏறினாலும் ஏறட்டும். என் தாயாரையும் தகப்பனாரையும் துக்கத்தில் மூழுக வைத்துவிட்டு நான் உயிரை விடமாட்டேன்" என்றாள். இப்படியே ஒவ்வொருவரும் கஷ்டத்தினின்றும் தப்பித்துக்கொண்டார்கள். அப்பொழுது ஸந்யாஸி நோயாளியைப் பார்த்து "இப்பொழுது பார்த்தாயா? உனக்காக உயிரை விடுவதற்கு ஒருவரும் இங்கே ஸித்தமாயில்லையென்பது தெரிந்ததா? இவ்வுலகத்தில் யாரை நம்பியும் பயனில்லையென்று நான் சொன்னதன் கருத்து இப்பொழுது விளங்குகின்றதா?" என்று கேட்டார். ப்ராஹ்மணன் இதையெல்லாம் பார்த்து, இதுகாறும் தனக்குச் சொந்தமென்று நம்பியிருந்த வீட்டைத் துறந்து ஸந்யாஸியின் பின்னே சென்றார்.

555. மீன் பிடிப்பதில் ஆசைகொண்டவன் எந்தக் குளத்தில் நல்ல மீன்கள் ஏராளமாய் அகப்படுமென்று எப்போதும் விசாரித்துக் கொண்டிருப்பான். யாராவது ஒரு குளத்தில் மீன்பிடித்திருந்தால், அவன் உடனே அவர்களிடம் சென்று "இந்தக் குளத்தில் பெரிய பெரிய மீன்கள் இருக்கின்றனதாமே, வாஸ்தவந்தானா? வாஸ்தவமானால், அவற்றைப் பிடிக்க என்ன

உணவைத் தூண்டிலில் கட்டவேண்டும்?" என்று கேட்கிறான். அவன் அவர்களிடத்தில் கிடைக்கும் சமாசாரத்தைக் கேட்டுக்கொண்டு, தூண்டிலுடன் அந்தக் குளத்துக்குச் சென்று தூண்டிலைத் தண்ணீரில் போட்டு வெகுநேரம் காத்திருந்து, பொறுமையாயும் ஸாமர்த்யமாயும் மீன்களைத் தூண்டிலின் பக்கமாய் வரும்படி யிழுத்துக் கடைசியில் ஒரு பெரிய அழகிய ஜலசரத்தைப் பிடித்துவிடுகிறான். அதுபோலவே மஹாயோகிகளும் ஞானிகளும் உபதேசிப்பதை உண்மையென நம்பி, பக்தியெனும் உணவையும் மநமெனும் தூண்டிற்கோலையுங் கொண்டு பகவாநாகிற மச்சத்தைப் பிடித்து ஹ்ருதயத்திலே அடக்கவேண்டும் பொறுமையுடன் காத்திருந்தால்தான் மத்ஸ்ய ரூபியான பரமேசுவரனைப் பிடிக்கமுடியும்.

556. ப்ரஹ்ம-ஹத்யா *பாதகத்தைச் செய்த ஓர் அரசன் அதனின்றும் நிவிர்த்தியாகிப் பரிசுத்தமடைய என்ன ப்ராயச்சித்தம் செய்யவேண்டுமென்று கேட்கும்பொருட்டு ஒரு ரிஷியாஸ்ரமத்துக்குச் சென்றான். அப்பொழுது ஆஸ்ரமத்தில் அந்த ரிஷி இல்லை, அவர் பிள்ளை இருந்தான். ரிஷிகுமாரன் ராஜாவின் ஸங்கதியைத் தெரிந்துகொண்டு ஸ்ரீராம நாமத்தை மூன்று தடவை யுச்சரித்தால் உன் பாதகம் நிவாரணமாகும்" என்று சொன்னான். ரிஷியானவர் ஆஸ்ரமத்துக்குத் திரும்பிவந்து குமாரன் விதித்த ப்ராயச்சித்தத்தைக் கேட்டு, அவன்மேல் அதிக கோபங்கொண்டு

* ப்ராஹ்மணனைக்கொன்ற பாவம்.

"கோடி ஜந்மங்களிற் செய்த பாபங்களெல்லாம் ஒரு தடவை பகவந்நாமத்தை உச்சரித்தமாத்திரத்தால் பஞ்சாய்ப் பறந்துகொண்டிருக்க, அதை மூன்று தடவை உச்சரிக்கும்படி விதித்தையே, இவ்வளவுதானு உன் பக்தி? இந்தப் பாபத்திற்காக நீ சண்டாளனுகக் கடவாய்" என்று சபித்தார். அவ்வாறு சபிக்கப்பட்ட ரிஷிகுமாரன்தான் மறுஜந்மத்தில் ராமாயணத்திற் சொல்லப்பட்ட குஹனுய்ப் பிறந்தான்.

557. ஒருகாலத்தில் தேவரிஷியான நாரதர் அஹம்பாவமடைந்து தம்மைவிடச் சிறந்த பக்தர் ஒருவருமில்லை யென்று நினைத்தார். இதையறிந்த ப்ரபுவாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு அவரைப் பார்த்து, "நாரதரே, இன்ன இடத்தில் எனக்கு மிகவும் அன்பனுன பக்தன் ஒருவன் இருக்கின்றுன். நீர் அவனிடம் சென்று அவனுடைய ஸ்நேஹத்தை ஸம்பாதித்து வாரும்" என்றுர். நாரதர் அப்படியே அவ்விடத்திற்குச் சென்று ஒரு வேளாளனைக் கண்டார். அவன் தினந்தோறும் அதிகாலையில் எழுந்திருந்து ஹரிநாமத்தை ஒருமுறை யுச்சரித்துக் கலப்பையைக் கையிலேந்திப் பகல் முழுவதும் நிலத்தை யுழுவதற்கு வெளியே செல்வதையும் இரவானவுடன் வீட்டுக்குத்திரும்பி வந்து போஜநம்செய்து மறுபடியும் ஒருமுறை ஹரிநாமத்தை யுச்சரித்துப் படுக்கையில் அமர்வதையும் நாரதர் கண்டு "இந்தப் பட்டிக்காட்டானை யெவ்வாறு பகவத்பக்தனென்று கூறலாம்? எப்பொழுது பார்த்தாலும் உலக கார்யங்களிலேயே வேலையாயிருக்கிறுன்,

பக்த லக்ஷணங்களும் ஒன்றும் காணேம்" என்று தனக்குள்ளேயே நினைத்துக்கொண்டு பகவானிடம் போய்த் தன் புதிய நண்பனைப்பற்றித் தான் நினைத்ததையெல்லாம் சொன்னர். பகவான் அதைக் கேட்டு "நாரதரே, இந்த எண்ணெய்க் கிண்ணத்தை யெடுத்துக்கொண்டு இப்பட்டணத்தைச் சுற்றி அதில் ஒரு துளியாவது கீழே சிந்தாமல் கொண்டுவந்து சேரும்" என்று கட்டளையிட, நாரதர் அப்படியே செய்து திரும்பிவந்தபொழுது, "நாரதரே, நீர் சுற்றிவரும்பொழுது என்னை எத்தனை தடவை ஸ்மரித்தீர்" என்று பகவான் கேட்க, "ஒரு தடவைகூட இல்லை. ஸ்வாமீ, எண்ணெய் நிறைந்த இக்கிண்ணத்தையே நான் ஜாக்ரதையாய்க் கவனிக்கவேண்டியிருக்கையில் உம்மை எப்படி ஸ்மரிக்க முடியும்?" என்று நாரதர் உரைத்தார். அதற்குப் பகவான், "இந்த ஒரு எண்ணெய்க் கிண்ணமே உமது கவனத்தையெல்லாம் இழுத்து, என்னை முழுவதும் மறந்துவிடும்படி உம்மைக்கூடச் செய்ததே, அந்தப் பட்டிக்காட்டான் ஒரு பெரிய குடும்ப பாரத்தைச் சுமந்துகொண்டு என்னை ஒருநாளைக்கு இரண்டு தடவை ஸ்மரிக்கின்றனல்லவா? அவன் பக்தியைப் பாரும்" என்றார்.

558. ஒரு பழகின கீரிப்பிள்ளை ஒரு வீட்டின் சுவரினுடைய மேற்பாகத்தில் வசித்துவந்தது. அதன் கழுத்தைக் கயிற்றின் ஒரு நுனியால் கட்டி, மற்றொரு

நுனியில் ஒரு கனத்த கல் கட்டப்பட்டிருந்தது. கீரிப்பிள்ளை அந்தக் கயிற்றுடனே வீட்டின் கூடத்திலும் முற்றத்திலும் ஓடி விளையாடும். அப்பொழுது அதை யாராவது பயமுறுத்திவிட்டால், அது உடனே சுவரின்மேலிருக்கும் தன்னிடத்திற்கு ஓடிப்போய் ஒளிந்துகொள்ளும். ஆனால் கயிற்றின் மற்ற நுனியிலுள்ள பாரம் அதை இழுக்கின்றமையால் அங்கே வெகு நேரம் தங்கியிருக்க முடியாமல் கீழே விழுந்துவிடும். அதுபோலவே மேலாயுள்ள ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளே மனிதனுக்குச் சொந்த வீடு. அவனுக்கு வறுமையும் விபத்தும் வந்துறும்பொழுது, சொந்த வீடாகிய கடவுளைப்போய் அடைகின்றான். ஆனால் உலகமாயை அவனைப் பிடித்திழுப்பதால், அதைத் தடுக்கமுடியாமல் சிறிது காலத்துக்குள் மறுபடியும் கீழே வந்துவிடுகிறான்.

559. ஒரு பணக்காரன் தன் தோட்டத்தைப் பார்த்துக்கொள்ளும்படித் தன் குமாஸ்தாவை ஏற்படுத்துகிறான். யாராவது பெரிய மனிதர்கள் தோட்டத்தைப் பார்க்கவந்தால், இந்தக் குமாஸ்தா அவர்களை அக்கரையாய் விசாரித்து, தோட்டத்தின் பல பாகங்களையும் அதில் கட்டியிருக்கும் மாளிகையையும் அவர்களுக்குக் காட்டி, "இதோ பார்த்தீர்களா எங்கள் மாமரம், இதோ எங்கள் கிச்சிலிமரங்கள், இதுதான் எங்கள் கல்யாணகூடம், அதோ மேல்மாடியிலே எங்கள்

சித்திரங்களும் படங்களும் வெகு நேர்த்தியாயும் வை பவமாயும் விளங்குகின்றன" என்று தோட்டத்தின் சிறப்பை வர்ணிக்கின்றான்.

இதே குமாஸ்தா அந்தத் தோட்டத்திலுள்ள குளத்தில் எஜமானன் உத்தரவுக்கு விரோதமாய் மீன் பிடித்துக்கொண்டிருக்கையில், எஜமானன் கையில் அகப் பட்டுக்கொள்ளுவதாக வைத்துக்கொள்வோம். அப் பொழுது அவனுக்குக் கிடைக்கும் மரியாதை என்ன தெரியுமா? உடனே தோட்டத்தை விட்டு ஓடிப்போ கும்படி உத்தரவாகின்றது; இவன்தான் சற்றுமுன் வெகு உறசாகமாய் "எங்கள் மாமரம்" "எங்கள் கிச்சி லிமரம்" என்று அபிமானமாய்ப் பேசிக்கொண்டிருந் தது.

இவனுக்குண்டாகிற "எனது" "எங்களுடை யது" என்ற உணர்ச்சி அஞ்ஞானத்தினாலேயே உண் டாகிறது.

560. "ஹம்மா" "ஹம்மா" "அஹம்மா" என்று கன்றுக்குட்டி கத்துகின்றது. அஹம் என்றால் நான் என்று பொருள். "நான்" "நான்" என்னும் இவ் அஹ ங்காரத்தினால் இதற்கு விளையும் துன்பங்களைப் பாருங் கள். முதல் துன்பமென்னவெனில் அது வளர்ந்தவு டனே அதைக் கலப்பையிற் கட்டிவிடுகிறார்கள். அங்கே அது உதயம் முதல் அஸ்தமனம் வரையிலும் வெயிலி

லும் மழையிலும் உழைக்கிறது. ஒருவேளை கசாப்புக்காரன் அதைக் கொன்றுவிடலாம். அப்போது அதன் மாம்சம் தீனியாகின்றது. அதன் தோலைப் பதனிட்டு ஜோடு தைக்கிறார்கள். அதனால் மத்தளங்களும் செய்யப்படுகின்றன. இம் மத்தளங்களைச் சில சமயங்களில் கையினாலும் கோலினாலும் தயை தாக்ஷிண்யமின்றி அடிக்கின்றார்கள். கடைசியாக, அதன் குடலையெடுத்துப் பஞ்சு பன்னும் வில்லுக்குவேண்டிய நாண்கயிறு செய்யும்போதுதான் அவ்வேழை ஜந்துவின் துன்பங்கள் தீருகின்றன. எப்படியென்றால், அதுமுதல் "ஹம்மா (நான்) ஹம்மா (நான்)" என்ற சப்தம்போய் "துஹூம், துஹூம் (நீதான், நீதான்)" என்ற சப்தம் உண்டாகின்றது.

இதனால் ஏற்படும் உண்மை என்னவெனில், நான் எனும் அஹம்பாவத்தை முற்றும் ஒழித்தவிடத்தில் தான் மோக்ஷம் ஸித்தமாகுமென்பதாம். அன்றியும், கன்றுக்குக் குடல் எப்படியோ அப்படி மனிதனுக்கு முக்யமான உயிர்நிலையைத் தாக்கினாலன்றி, அஹம்பாவம் போகாது. உயிர்நிலைக்குச் சமமான செல்வமும் பெண்டு பிள்ளைகளும் போனாலொழிய "துஹூம் (நீ), அதாவது, எல்லாம் உனது செயல்" என்று ஒருவனும் சொல்வதில்லை. அத்தகைய பொறுத்தற்கரிய விபத்துக்கள் நேரிடும்பொழுதுகூட, அஹம்பாவம் ஒழிந்து த்வம்பத வாச்யமான ப்ரஹ்மபாவனை உண்டாகுமோ உண்டாகாதோ வென்பது ஸந்தேஹந்தான்.

561. பேராசை பெருந்துயர் விளைக்கும்; நிராசையோ நித்ய சுகமளிக்கும். ஒருகாலத்தில் ஒரு நாவிதன் பிசாசு வாசமாயிருந்த ஒரு மரத்தின்கீழே போய்க்கொண்டிருக்கையில், "ஏழுகுடம் நிறையத் தங்கம் வேண்டுமா?" என்று ஒருசத்தம் அவன் காதில் விழுந்தது. நாவிதன் சுற்றிலும் திரும்பிப் பார்த்தான், ஒருவரையும் காணவில்லை. மறுபடியும் அதே ஆச்சர்யமான த்வனி உண்டாயிற்று. ஏககாலத்தில் இவ்வளவு செல்வம் தானுய்க் கிடைக்கிறதே யென்று நாவிதனுக்குப் பேராசையுண்டாக, அவன், "கருணை நிறைந்த கடவுளே என்னைப்போன்ற ஏழை அம்பட்டனையும் அநுக்ரஹிக்க வேண்டுமென்று திருவுள்ளத்திற் சங்கற்பிக்கும்பொழுது, அப்படிப்பட்ட உதாரமான கொடையை நான் ஏற்கும் விஷயத்தில் சொல்லவேண்டியதென்ன இருக்கிறது" என்று உரத்துச்சொல்ல, "சரி, நீ வீட்டுக்குப் போகலாம், நான் அக்குடங்களை முன்னமேயே உன் வீட்டிற் கொண்டுபோய் வைத்துவிட்டேன்" என்று உத்தரம் உண்டாயிற்று. நாவிதன் அதிக ஆத்திரமாய் வீட்டுக்கு ஓடிப்போய்ப் பார்க்க, தான் கேட்டபடியே குடங்கள் எழுமிருக்கக் கண்டு ஸந்தோஷத்தால் மெய்ம்மறந்து நின்றான். பிறகு அவன் அவைகளை ஒவ்வொன்றாய்த் திறந்து பார்க்கையில், ஒரு குடம் மாத்திரம் அரைப்பங்கு நிறைந்தும் மற்ற ஆறு குடங்களும் பூர்த்தியாயும் இருக்கக் கண்டான். உடனே இக்குறைகுடத்தை எப்படியேனும் நிறைக்கவேண்டுமென்னும் அவா அவன் மநத்தில் உண்டாயிற்று. ஆகவே தன்னிடத்திருந்த பொன்வெள்ளி யாபரணங்களையெல்

லாம் விற்று நாணயங்களாக மாற்றி அவற்றைக் குடத்திற் போட்டான். குடம் மாத்திரம் இன்னும் குறையாகவே யிருந்தது. பிறகு அவன் மலிவான சாதாரண பண்டங்களை வாங்கித் தானும் ஸம்ஸாரமும் அரைவயி யிறுண்டு, மிகுந்த பணத்தைக் குடத்திற் போட்டுவந்தான். குடம்மாத்திரம் முன்போலக் குறையாகவே யிருந்தது. அதைப் பார்த்து நாவிதன் அரசனிடம் போய், "தாங்கள் இப்பொழுது கொடுக்கிற சம்பளம் எனக்கும் என் ஸம்ஸாரத்துக்கும் போதாமையால், சம்பளத்தை அதிகப்படுத்தவேண்டும்" என்றுவேண்டிக்கொள்ள, அவன் அரசனுக்கு வேண்டியவனாயிருந்தபடியால், அவன் கேட்டுக்கொண்டபடியே சம்பளம் உயர்த்தப்பட்டது. இப்பொழுது நாவிதன் தன் சம்பளத்தையும் மேல் வரும்படிகளையும் மிகுத்தி, அவற்றையெல்லாம் அப்படியே குடத்தில் போட்டும், அப்பேராசையுள்ள குடம் நிறைகிறவழியாயில்லை. அதன் பிறகு அவன் ஒழிந்த வேளைகளில் பிச்சையெடுக்கத் தொடங்கி, செலவுசெய்யாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு பெருந் துன்பநிலையில் இருந்தான். ஒருநாள் அரசன் அவனது பரிதாபமான நிலையைப் பார்த்து, "அடே, இப்போது உனக்குக் கிடைக்குஞ் சம்பளத்தில் அரைப்பங்கு முன்னே வந்துகொண்டிருந்தபொழுது, நீ இப்போதிருப்பதைக் காட்டிலும் அதிக சந்தோஷமாயும் உற்சாகமாயும் திருப்தியாயும் சுகமாயும் இருந்தாயே. இப்போது அதைவிட இரட்டத்தனை சம்பளமாகியும், நீ வெடுவெடுப்பாயும், மனக்கவலையால் மெலிவுற்றும் சோர்வடைந்தும் இருக்கக் காரணமென்ன? ஒருவேளை

ஏழுகுடந் தங்கத்தை வாங்கிக்கொண்டையோ?" என்று கேட்க, நாவிதன் ஆச்சரியமும் வெட்கமுமடைந்து கைகளைப் பிசைந்துகொண்டு "இந்த சங்கதி ஸந்நிதாநத்துக்கு எப்படித் தெரிய வந்தது?" என்று கேட்டான். அதற்கு அரசன் "எவனொருவன் யக்ஷன் கொடுக்கும் செல்வத்தை யேற்றுக்கொள்ளுகிறானோ, அவன் இப்படிப்பட்ட அதோகதிக்குத்தான் வருவான். எப்பொழுதும் மாறாதுள்ள இந்த அடையாளத்தைக் கொண்டு நான் உன் துரதிஷ்டத்தின் காரணத்தை ஊஹித்தேன். இனி உடனே இச்செல்வத்தை யொழித்துவிடு. அதிலிருந்து நீ ஒரு செப்பாலடித்த காசும் செலவழிக்க முடியாது; அது சேர்த்து வைப்பதற்கேயன்றிச் செலவிடுவதற்குப் பயன் படுவதன்று" என்று சொன்னான். நாவிதனுக்குப் புத்தி வந்தது; உடனே அவன மேற்கூறிய மரத்தண்டை சென்று "யக்ஷனே, உன் தங்கத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்" என்று சொல்லிவிட்டு வீட்டுக்குத் திரும்பிவந்து பார்க்கையில், அவ்வேழு குடங்களும் அவற்றுடன் தான் அதுவரையில் வருந்தி சேர்த்துவைத்த செல்வமும் போய் விட்டிருக்கக்கண்டான். அவ்வளவு போனபிறகும் அவன் சுகமாகவே வாழ்ந்தான்.



